உ

# கந்தரனுபூதி

(அருணகிரிநாதர் அருளியது)

உரை ஆசிரியர் :

P. K. ஷண்முகநாதன்

(திண்டுக்கல்)

அகில பாரத சங்கர ஸேவா ஸமிதியால்

வெளியிடப்பட்டது.

1967

புஸ்தகங்கள் கிடைக்குமிடம் :

1. லைப்ரேரியன், ஸ்ரீ சிருங்கேரி சங்கர மடம்,
   9, வெங்கடநாராயண ரோடு, தியாகராயநகர், சென்னை-17.

2. ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
   42, தெற்குச் சித்திரைவீதி, ஸ்ரீரங்கம், திருச்சி-6.

விலை ரூ. 1-50

ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்ஸில்
அச்சிடப்பட்டது.

# முன்னுரை

தூசா மணியும் துகிலும் புனைவாள்
நேசா முருகா நினதன் பருளால்
ஆசா நிகளம் துகளா யினபின்
பேசா அனுபூ திபிறந் ததுவே.

என்றபடி தமக்குப் பிறந்த ஒப்பற்றதோர் கடவுள் அனுபவத்தைத் தமக்குள்ளேயே அடக்கி வைக்க முடியாதபடி அது பாட்டாகப்பொங்கிவர அருணகிரி நாதரும் துள்ளிக் குதித்துத் தாளமிட்டுப் பாடுகின்றார். தாயுமானவர் இந்தக் கந்தரனுபூதியை எண்ணியதும் மெய்யுருகி எக்காலக்கண்ணி பாடுகின்றார். வாக்குக்கு அருணகிரி என்று சொன்னாலும் அவருடைய வாக்கில் இன்பமும் உண்மையும் ஒளியும் கந்தரனுபூதியில் தான் தேக்கிட்டுக் கிடக்கின்றன. இது அவரவர் களுடைய அனுபவத்திற்கு ஏற்பப் பொருள் தந்துவரும். இப்பொழுது திருவாளர் சண்முகநாதனார் அந்நூலுக்கு உரை எழுதி வெளியிட்டுள்ளார். மதுரையிலும் திண்டுக்கல்லிலும் வழக்கறிஞராக சிறந்து விளங்கி உலக அனுபவத்தில் தேர்ந்து கடவுள் வழிபாட்டில் புகுந்துத் தம்முடைய அனுபவத்தின் பயனைப் பிறருக்கு விளக்கி அமைதி இன்பவாழ்க்கையை நடத்தி வருகின்றார் என அறிகின்றேன். அனுபூதி பெற்றவர் என்று பலரும் கருதும் ஒருவர் கந்தரனுபூதிக்கு உரை எழுதுவது பொருத்தமேயாகும். அனுபவத்தை நம்புகின்ற பொழுதும் இப்பெரியார் அருணகிரிநாதருடைய பிற பாடல்களின் அடிப்படையிலும் திருப்புகழின் அடிப் படையிலும் கடவுளருள் பெற்ற நாயன்மார்கள், ஆழ்வார்கள் சந்தானாச்சாரியார்கள் முதலியோருடைய அருளுரைகளின் அடிப்படையிலும் புராணக் கதைகளின் தத்துவார்த்த அடிப்படையிலும் விளக்கிக் கொண்டு போவது படித்து, உணர்ந்து இன்புறுதற்குரியதாகும்.

கீதை முதலிய வடமொழி நூல்களின் ஒளி கொண்டும் வழி காட்டுகின்ருர். "உரை அவிழ, உணர்வு அவிழ உளம் அவிழ உயிர் அவிழ" விளக்குகின்ற இவர் அனுபவம் பாராட்டிற்குரியது.

இந்த நாட்டில் ஆன்மீய விழிப்பு ஏற்பட்டு வருகிறது. இதற்குக் காரணம் பல ஞானிகள். அவர்களில் சிருங்கேரி சாரதா பீடத்து ஜகத்குரு சங்கராச்சாரியார் இந்தியா முழுவதும் சுற்றி வந்து கடவுள் ஒளியைக் குடத்தில் விளக்காக இல்லாமல் குன்றின் மேலிட்ட விளக்காக விளக்கி வருகின்ருர். அவருடைய அருளாணையின் வழியே அகில பாரத சங்கர சேவா சமிதி என்ற நிலையம் தோன்றியுள்ளது பல நூல்கள் வடமொழியிலும் ஆங்கிலத்திலும் தமிழிலும் வெளிவந்து கொண்டிருக்கின்றன. சங்கரரின் நூல்கள் தமிழ் மொழி பெயர்ப்பதோடு சங்கரகிருபா என்ற பத்திரிகையும் திருவாளர் கே. ஆர். வேங்கடராமன் அவர்களின் தலைமையில் வெளியாகி வருகிறது. இந்தப் பத்திரிகையில் ஆன்மீக நூல்களைப் பற்றிய கட்டுரைகளும் அந்நூல்களுக்குப் புத்துரைகளும் வெளி வருகின்றன. அப்படி வெளிவந்த கந்தரனுபூதி இப்பொழுது தனி நூலாக வெளிவருவது கந்தரனுபூதியைப் பாராயணம் செய்வோருக்குப் பெரிய துணையாகும். வாழ்க சங்கரர்! வாழ்க அகில பாரத சங்கர சேவா சமிதி! வாழ்க சங்கர கிருபை! வாழ்க கந்தரனுபூதி! வாழ்க சண்முகநாதனுர்!

மதுரை பல்கலைக்கழகம்,
மதுரை. 12—4—67

தெ. பொ. மீனுட்சிசுந்தரன்
துணைவேந்தர்.

# பதிப்பாளர் முன்னுரை

எங்கள் மதிப்புக்குரிய நண்பர் திரு பி. கே. ஷண்முகநாதன் எங்கள் சமிதிப் பிரசுரங்களுக்கு எழுதியிருக்கும் நூல்களில் 'கந்தரநுபூதி' மூன்றாவதாகும். 'ஸ்ரீ வித்யா' 'உணர்வரிய மெய்ஞ்ஞானம் ஓங்கு பெரும் பீடம்' இவை இரண்டும் ஸ்ரீ சிருங்கேரி ஜகத்குருவின் வர்த்தந்தி யாகிய புண்ணியதினத்தில் நவம்பர் 1966ல் வெளிவந்தன. 'கந்தரநுபூதி' ஸ்ரீ சங்கர க்ருபா பத்திரிகையில் மாதந்தோறும் தொடர்ந்து வந்தது. இப்போது இந்த நூலைத்தனிப் பிரசுரமாக வெளியிடுகிறோம்.

'காவ்யத்தின் விமர்சனம் கவி உள்ளம் பெற்றவன்தான் செய்ய முடியும்' என்பது எல்லோரும் அறிந்த உண்மை. அதுபோலவே ஓர் அனுபூதிநூலை அனுபூதிமானே விளக்க முடியும். ஞானம், பக்தி, யோகம் ஆகிய மார்க்கங்கள் ஸகுணோபாசனை, நிர்குணோபாசனை, சித்தாந்தம் வேதாந்தம் ஆகியவை எல்லாம் திரண்டு ஆத்மாவுக்குத் தனிச்சுவையை அளிக்கும் நூல் இது. பல தத்வங்களை தெளிவான முறையில் உரை ஆசிரியர் விளக்கியிருக்கின்றார். சுருங்கச்சொல்லில் முருகனின் பாத கமலங்களுக்கே நம்மை அழைத்துச்செல்கிறார் ஆசிரியர். ஷண்முகனுடைய பெருமையை விளக்கிய நண்பர் ஷண்முகநாதனுக்கு நாம் மிகவும் கடமைப்பட்டிருக்கிறோம்.

'கந்தரனுபூதிக் கட்டுரைகள்' 'ஸ்ரீசங்கர க்ருபா' பத்திரிகைக்கு சிறப்பை அளித்தது என்பது ஆசிரியர் குருபக்தரத்னம் கூ. ரா. வேங்கடராமனின் பெருமிதம். சமிதியின் கொள்கைகளை அனுசரித்து அரிய தொண்டாற்றும் அறிஞர் திரு ஷண்முக நாதன் மூலம் கிடைத்தது சமிதியின் பொது காரியதரிசி திரு கே. வி. சுப்பரத்தினத்தின் உவகை. தெய்வீக மணம் வீசும் நூலை பதிப்பிக்கும் பாக்கியம் கிடைத்ததில் பதிப்பாளர் கழகத்தின் சார்பாக எனக்கு மகிழ்ச்சி.

இந்த நூலுக்கு அரியதோர் முன்னுரை எழுதி உதவிய பேரறிஞர் மதுரைப் பல்கலைக் கழகத்தின் துணைவேந்தர் உயர்திரு தெ. பொ. மீனாட்சி சுந்தரன் அவர்களுக்கு எங்கள் மனமார்ந்த நன்றி.

தமிழிலுள்ள சமய நூல்களின் உரை, விமர்சனம், ஆராய்ச்சி முதலியவை 'ஸ்ரீ சங்கர க்ருபா' வில் இடம் பெற வேண்டுமென்று ஸ்ரீ ஜகத்குரு மஹா ஸந்நிதானத்தின் அருளாணை பிறந்ததும், இந்த உரைநூலைப் பதிப்பிக்க நமக்கு ஊக்கம் அளித்தவர் நம் ஸமிதியின் உபதலைவர் உயர்திரு I. A. சிதம்பரம் பிள்ளை ஆவார். இவ்விதம் அவர்கள் நமக்கு எப்போதும் உதவிசெய்வார்கள் என்பது திண்ணம்.

ஸ்ரீ ஜகத்குருவின் மலரடிகளின் ஆசியையும் அருளையும் பெற்று இந்த நூல் வெளிவருகிறது.

சென்னை
பிலவங்க ஆண்டு
சித்திரை மாதம்

**P. S. சுப்ரமணியன்**
தலைவர்
ஸ்ரீ சங்கர ஸேவா ஸமிதி பதிப்பாளர் குழு

# மதிப்புரை

கந்தரனுபூதி உரை, திருவாளர் P. K. சண்முகநாதன் B. A. B. L., அவர்களால் எழுதப்பட்டிருக்கிறது. திருவாளர் சண்முகநாதன் அவர்கள் தமிழ், ஆங்கிலம், சம்ஸ்கிருதம் இப்பாஷைகளில் மிக்க தேர்ச்சியுள்ளவர்கள். மும்மொழிப்புலவர். அவர்களது நுண்மாண் நுழைபுலனாராய்ச்சியினாலும், அனுபவத்தினாலும் அவர்களது உரை சிறந்து விளங்குகின்றது. புதுமுறையில் அவர்களது ஆராய்ச்சி அமைந்தது எல்லோரும் வரவேற்கக்கூடியது. பல ஆண்டுகள் அவர்கள் சமயச் சொற்பொழிவுகள் நிகழ்த்தி வந்துகொண்டிருக்கின்றார்கள். ஸ்ரீசங்கர கிருபாவில் வெளி வந்துள்ள இந்தக் கட்டுரைகளைப் படித்த அறிஞர் பலர் என்னிடம் இதன் சிறப்பைக் கூறியிருக்கின்றனர்.

உடல் நலக்குறைவால் வெளியூர் செல்வது அவர்களுக்கு முடியாமையால், அவர்களை சமயநூல்களுக்கு உரை எழுத என் போன்ற நண்பர்கள் வற்புறுத்தியதின் காரணமாக, ஸ்ரீ வித்யா (சாக்த தர்சனம்) வெளியிட்டார்கள். இன்னும் கந்தரலங்காரம், அபிராமி அந்தாதிகளுக்கு உரை எழுதி முடித்திருக்கின்றார்கள். அவைகளும் வெளி வந்தால் ஆஸ்திக உலகத்திற்கு மிக்க பயன்படும். திருமுருகாற்றுப்படைக்கு அவர்கள் எழுதிய உரையை திருச்செந்தூர் தேவஸ்தானம் வெளியிட்டிருந்தது. இப்போது இ ர ண் டா ம் பதிப்பு அச்சாகி வருகின்றது. திருமுருகாற்றுப்படை ஒரு மந்திர சாஸ்திரம் என்பதை விளக்கமாக எடுத்துக் காட்டியிருக்கின்றார்கள்.

கந்தரனுபூதி உரையைப் படித்து, தத்துவங்களை எளிதில் தெரிந்து கொள்ள முடிகிறது. கலியுகவரதன் கந்தன் அருளுக்குப் பாத்திரமாகி, வேண்டிய வரங்களைப் பெற்று உய்வோமாக.

இலஞ்சி,
19–4–67.

ஐ. ஏ. சிதம்பரம் பிள்ளை

# கந்தரனுபூதி — முகவுரை

கந்தரநுபூதி அருணகிரிநாதர் அருளிச்செய்த நூல் களில் ஒன்று. இதை ஓர் மந்திர நூலாகப் பலர் கருது கின்றனர். வடமொழியில் ஐம்பத்தொன்று அக்ஷரங்கள் இருப்பதுபோல, இதில் 51 பாடல்களே இருப்பதால், மாத்ருகா மந்த்ரமாலையாக இது கருதப்படுகின்றது. ஒவ்வொரு பாடலுக்கும், ஒரு யந்த்ரமும் பீஜாக்ஷரங் களும், பூஜா முறைகளும்கூட சிலர் கொடுத்திருக் கின்றனர். ஒவ்வொரு பாட்டிற்கும் ஓர் தலைப்பும் கொடுத்திருக்கின்றனர்.

மேலும் இதற்குப் பல அறிஞர்கள் உரை எழுதியும் உள்ளனர். அவரவர்களின் கற்பனைக்கும், அநுபவத் திற்குமேற்ப, அவ்வவ்வுரைகள் அமைந்துள்ளன. கந்தரநுபூதி பெற்றுக் கந்தரநுபூதி சொன்ன, எந்தை அருணகிரியாரின் உள்ளக்கிடக்கையை, இவ்வுரைகள் எடுத்துக்கூற முயலுகின்றன. அடியேனும் முயலலாமே, என்று கருதி, என் சிற்றறிவுக்கு எட்டியதை எழுதி யுள்ளேன். அநுபூதிப் பாடல்கள் எளிய தமிழ் நடையில் சுலபமாய்ப் பாடம் பண்ணக்கூடிய, சிறிய பாடல்களாக அமைந்திருக்கின்றன. இசையோடு பாடவும் இடந் தருவன. ஆயினும் பொருள் கூறுவது அவ்வளவு எளிதல்ல. இலக்கணத்தையும் அகராதியையும் துணை கொண்டு சமய அருள் நூல்களுக்கு உரை எழுதுவது விரும்பத்தக்கதல்ல. அத்தகைய உரைகள்தான், தற் காலத்தில் மலிந்துகிடக்கின்றன.

ஓர் உதாரணம் கூறுகிறேன். "குனித்த புருவமும்" என்று ஆரம்பிக்கும் அப்பர் பெருமான் திருப்பாட்டில் வரும், "இனித்தமுடைய" என்ற சொற்றொடரை "இனி + தம் + உடைய" என்று பிரித்து உரை கூறினர் ஓர் தமிழாசிரியர். இலக்கணக் குற்றம் சிறிதும் இல்லை இந்த உரையில். அதுபோல இன்னொரு தமிழ் பட்டதாரி ஆசிரியர் "திருவெம்பாவை" யில் வரும், "சொற்கழிவு பாதமலர்" என்பதனை "சொற்கு + அழிவு" என்று பிரித்துப் பொருள் கூறினர். ஈண்டும் இலக்கணப்படிப்

பொருள் சரியே. ஆனால் கருத்திலோ என்ன மட்டமான உரையென்று யாரும் கூறுவர்.

அதுபோலத்தான் அநுபூதிக்கு உள்ள உரைகள். அந்த வரிசையில் இன்னொன்று இருப்பது மிகையாகாது என்று துணிந்தும் அடியேனும் எழுதுகிறேன். தமிழ் உலகம் ஏற்றினாலும் சரி தூற்றினாலும் சரி. அது அவன் உள்ளம்.

---

## ஓர் குறிப்புரை

தற்காலம் கிடைக்கும் பிரதிகளில் "நெஞ்சக் கனகல்லு" என்று ஆரம்பிக்கும் ஓர் பாடல் காப்புச் செய்யுளாய்க் காணப்படுகின்றது. இப்பாடல் அருணகிரியார் வாக்கே அல்ல என்பது எனது முடிவு. ஏனெனில்,

1. விநாயகருக்கு இரண்டு பாட்டுக்கள் இருக்க வேண்டிய அவசியமில்லை.

2. கௌமார மதத்தினரான அருணகிரியார் வேறு எந்தக் கடவுளையும் தனியாகப் பாடமாட்டார். கந்தரலங்கார காப்புச் செய்யுளைப்போல முருகன் சார்பாகப் பாடி விநாயகர் பெயர் சம்பிரதாயத்துக்காக வரும்படிதான் பாடுவார்.

3. "பஞ்சக்கரவானை" என்பது இலக்கண வழு. "பஞ்சக்கரன்", அல்லது "பஞ்சக்கரத்தன்" என்பது தான் சரியான சொற்றொடர். "பஞ்சக்கரவானை" என்பது தவறு. ஒருக்கால், "பஞ்சக்கர + யானை" என்று பிரித்தல் கூடும்.

4. ஏனைய பாடல்கள்போல் படிப்பதற்கு இனிமை யாக அமையவும் இல்லை.

தற்போது கிடைக்கும் சில பிரதிகளில் கந்தரநுபூதிக்கு 105 பாடல்கள்கூட இருக்கின்றன. பிற்காலத்துச் சாதாரணப் புலவன் ஒருவன் யாரோ, இந்த அரிய நூலில் கையை வைத்து, பல பாடல்களை, மனம்போல

சேர்த்து அருணகிரியாரின் வாக்கோடு விரவிவிட்டான். இப்பொழுது நாம் கையாளும் 51 பாடல்கள் பூராவுமே அருணகிரி வாக்குத்தானே என்றுகூட சந்தேகம் ஏற்படுகின்றது.

முன் சொன்னதுபோல, இந்தப் பாடல்களுக்கு யந்த்ரங்களும், பீஜாக்ஷரங்களும் கண்டுபிடித்த யாரோ, இதைச் செய்திருக்கவேண்டும். அருணகிரியார் இவ்வாறு இதை மந்த்ர சாஸ்திர நூலாகவோ, பிரயோக நூலாகவோ கருதினர் என்று யாதொரு அகச்சான்றும் அவரது நூல்களில் இல்லை. மேலும், இப்பாடல்களால் அடையப்படுவதாய்ச் சொல்லப்படும் பலன்களில், சில மிகக் கீழ்கடையானவைகளாய் இருக்கின்றன. உதாரணமாக, ஆருவது பாட்டுக்கு "மாதரைத் தழுவ" என்றும், பிற்சேர்க்கைப் பாடல்களில் "புகழ்பெற" "செல்வம் பெற", "பிசாசு ஓட்ட", என்றெல்லாம் காணப்படுகின்றது. கந்தரலங்காரம், கந்தரந்தாதி, திருவகுப்பு, திருப்புகழ் இவற்றைக் கேட்டுப் பழகிய செவிகளுக்கு இந்தப் பாடல்கள் அவ்வளவு உயர்தரமாகவே படவில்லை.

திருப்புகழ் ஒன்றில் அருணகிரியார் அக்ஷரமாலை ஒன்று பாட விரும்புவதாய்க் கூறியிருக்கின்ருர். அதன் விளைவு இந்தக் கந்தரநுபூதியாகும்.

அக்ஷரமாலை பாட விரும்பிய திருப்புகழ்

(பொது)

ஆசை கூர் பத்த னேன் மனோ பத்ம
மான பூவைத்து நடுவே யன்
பான நூலிட்டு நாவிலே சித்ர
மாகவே கட்டி யொரு ஞான்
வாசம் வீசிப்ரகாசியா நிற்ப
மாசிலோர் புத்தி யளிபாட
**மாத்ருகா புஷ்ப மாலை கோலப்ர**
**வாள பாதத்தி லணிவேனே**

மூக கானத்து மீதுவாழ் முத்த
　　மூரல் வேடிச்சி தனபார
மூழ்கு நீபப்ரதாப மார்பத்த
　　மூரி வேழத்தின் மயில் வாழ்வே
வீசு மீனப்பயோதி வாய்விட்டு
　　வேகவேதித்து வருமாசூர்
வீழ மோதிப் பராரை நாகத்து
　　வீரவேல் தொட்ட பெருமாளே

ஆகவே கந்தரனுபூதியில் 51 பாடல்களே இருந்திருக்க வேண்டும். ஆயின் இப்போது பிற்காலத்தவரால் சேர்க்கப் பட்ட பாடல்களில் சிலது 51 பாடல்களில் கலந்திருக் கலாம். ஒரே கருத்தைக்கொண்ட ஒன்றுக்கு மேற்பட்ட பாடல்களும் இருக்கின்றன. பொதுவாகக் கூறினல் இந்தப் பாடல்களின் ஒவ்வொரு வரியிலும் ஒற்று நீக்கி 11 அல்லது 12 உயிர் மெய் யெழுத்துக்களே வரக் காணலாம். நான்கு வரிகளும் அவ்வாறே அமைந்திருக் கும். சில பாடல்களில் 11ம் 12ம் கலந்தும் 11ம் 10ம் சேர்த்தும் அமைந்திருப்பதைக் காணலாம். 11 உயிர் மெய் யெழுத்துக்கள் மட்டும் உள்ளனவாகப்பொறுக்கி எடுத்தால் ஒரு வேளை 51 பாடல்கள் கிடைக்குமோ என்று பார்க்கலாம். ஏனெனில் முதல் பாட்டு "ஆடும் பரி" என்பது, 11 உயிர் மெய் யெழுத்துக்களையே உடையதாக இருப்பதால், எல்லாப்பாடல்களும் அவ்வாறு இருந்திருக்குமோ என்று ஓர் ஐயம். 12 உயிர் மெய் யெழுத்துக்கள் உள்ள பாடல்கள், நாம் எடுத்துக் கொண்ட 51 பாடல்களில் இருக்கின்றன. எதுவானலும் சரி, முருகன் தான் நமக்கு வழிகாட்டவேண்டும். பல ராலும் ஒப்புக்கொள்ளப்பட்ட 51 பாடல்களை மட்டுமே பார்ப்போம். காப்புச்செய்யுள் என்று காணப்படும் "நெஞ்சக்கன கல்லை" வெறுங் கூழாங்கல்லாகவே நீக்கி விடலாம்.

P. K. ஷண்முகநாதன்.



பகவான் ஷண்முகநாதன்

உ

## அருணகிரியார் அருளிய

# கந்தரனுபூதி

(ஸ்ரீ ஷண்முகநாதன் அவர்கள் எழுதிய உரையுடன் கூடியது)

### இறை வணக்கம்

**விநாயகன்**

*வானுலகும் மண்ணுலகும் வாழ மறை வாழப்*
*பான்மை தரு செய்ய தமிழ் பார்மிசை விளங்க*
*ஞானமத ஐந்துகர மூன்றுவிழி நால்வாய்*
*ஆனை முகத்தனைப் பரவி அஞ்சலி செய்கிற்பாம்*

**முருகன்**

*உருவாய் அருவாய் உளதாய் இலதாய்*
*மருவாய் மலராய் மணியாய் ஒளியாய்*
*கருவாய் உயிராய் கதியாய் விதியாய்*
*குருவாய் வருவாய் அருள்வாய் குகனே*

**சிவன்**

*உலகெலாம் உணர்ந் தோதற்கு அரியவன்*
*நிலவுலாவிய நீர்மலி வேணியன்*
*அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்*
*மலர் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்*

**சக்தி**

*அலகிலாக் கருணை யென்னு மந்தளி ரீன்று தொல்லை*
*உலகெலாம் பூத்துக் கங்கையு வட்டெடுத் தொழுகுஞ் சென்னி*
*மலையினிர் படர்ந்த பச்சை மரகதக் கொடியை ஞானக்*
*கலையமுதொழுகு தீஞ்சொற் கனியினைக் கருத்துள் வைப்பாம்*

### முதற் பாட்டு

ஆடும் பரிவேலணி சேவ லெனப்
பாடும் பணியே பணியா வருள்வாய்
தேடும் கயமா முகனைச் செருவிற்
சாடும் தனியானை சகோ தரனே.

### பதவுரை

ஆடும் பரி = ஆடுகின்ற வாகனமாகிற மயிலையும், வேல் = வேலையும், அணிசேவல் = அழகுடைய சேவலையும், பாடும் பணியே = பாடுகின்ற கைங்கர்யத்தையே, பணியா வருள்வாய் = எனக்குத் தொழிலாகக் கொடுத்தருள், தேடும் கயமாமுகனை = வலிய எதிரிகளைத் தானே தேடிச்சென்று சண்டை செய்யும் கயமுகாசுரனை, செருவில் = யுத்தத்தில், சாடும் = அழித்த, தனியானை = ஒப்பற்ற விநாயகக் கடவுளின், சகோதரனே ! = உடன் பிறந்தவனே !

### பொழிப்புரை

தானே வலியச் சென்று, சண்டை செய்யும் யானைமுக அசுரனைப் போரில் வென்று, அழித்த ஒப்பற்ற விநாயகக் கடவுளின் உடன் பிறந்த முருக பிரானே! நீ எனக்கு உன்னுடைய வாகனமாகிற மயில் எனவும், உன் ஆயுத மான வேல் எனவும், உன் கொடியான சேவல் எனவும், வாயாரப் பாடும்படியான சிறந்த கைங்கர்யத்தையே, எனக்குத் தொழிலாகத் தரும்படி, அருள் புரியவேண்டும்.

### விரிவுரை

ஆடும் பரி என்றதால் தோகை விரித்து ஆடும் நிலையில் மயில், பிரணவ ரூபத்தைக்காட்டி நிற்கும். அணி சேவல், என்பது தன்னுடை கூவுதலால், பிரணவ தொனியைக் குறிக்கும். மயில் பிந்துவையும், சேவல் நாதத்தையும் குறிக்கும். இவ்விரண்டையும் அறிந்து அனுபவிக்க ஞானம் வேண்டும். வேல் ஞானத்தின் ஸ்வரூபம். அது ஓங்கி ஆழ்ந்து அகன்று நுண்ணியதாய் இருப்பதாலே, அறிவின் அடையாள மாக நின்றது, ஆக முதல் பாட்டை, பிரணவத்தில் ஆரம்பித்து அதன் பொருளை அறியுமாறும், அதன் நாதத்தை அனுபவிக்கும்படியாயும், தனக்கு வரம் ஈவதுடன் அவற்றையே எப்போதும் பாடுவதே, தனது தொழிலாக வேண்டும், என்றும் கேட்கின்றார். ஏனெனில் அவனருளா லன்றி இவற்றை அடையமுடியாதல்லவா ? மேலும் அவன் ஒருவன் தானே பிரணவார்த்தத்தைக் கூறமுடியும். அவனே பிரணவத்தின் உள்பொருளாயும், அதிஷ்டானமாயும்

இருப்பவனல்லவா? அவன் பிரணவ சொரூபியாகிய விநாயகரின் சகோதரனல்லவா! விநாயகன் பிந்து தத்துவம். முருகன் நாத தத்துவம். விநாயகன் யானை முகங்கொண்ட அதாவது மதங்கொண்ட பிரபஞ்ச மாயையை அழித்தவன். அவனுடைய சகோதரன் பிரணவத்தின் உள் பொருள். ஆக இரண்டு பேருடைய அருளன்றி இப்பரிசு கிடைக்காது என்பது தாத்பர்யம்.

கயமுகாசுரன்: இவன் வசிஷ்டர் குலத்தில் உதித்த மரகத முனிவருக்கும் விபுதை என்ற அசுர கன்னிகைக்கும் பிறந்தவன். அவன் சிவபெருமானை நோக்கித்தவம் செய்து, பல வரங்களைப்பெற்றுத் தேவர்கள், ரிஷிகள், சாதுக்கள் இருக்குமிடம் தேடிச்சென்று, அவர்களை இம்சித்து வந்தான். அவனை விநாயகக்கடவுள் தனது வலது கொம்பைப்பரித்து அபிமந்திரித்து, அவன் மீது ஏவ, அது அவனைப்பிளந்தது, அவன் பெருச்சாளி ரூபம் கொண்டு ஓடினான். விநாயகப் பெருமான், அப்பெருச்சாளி மீது ஆரோகணித்துத் தனக்கு வாகனமாக்கிக்கொண்டார்.

கயமுகாசுரன் அனாத்ம விருத்திகளைக் குறித்து நிற்கின்றான். சகல ஜீவர்களிடத்திலும் இறைவன் ஓங்கார சொரூபமாய் நிற்கின்றான். அனாத்ம விருத்திகளில் பிரவர்த்திக்கும் ஆன்மாக்களுள்ளும் அவன் ஓங்காரமாகவே திகழ்கின்றான். அந்த அனாத்ம விருத்திகளை அழித்து ஆன்மாவை ஈடேறச்செய்தலையே கஜமுகாசுரன் கதை நிரூபிக்கின்றது. யானையும் பிரணவ சொரூபம்தான். ஆனால் கயமுகாசுரன் பிரணவ சொரூபத்தை உடையவனானாலும் பிரகிருதி மாயா வசப்பட்டுக் கிடந்தவன். இந்தப் போலி ஸ்வரூபத்தை அழித்தே நிஜஸ்வருபத்தை வெளிப்படுத்தியே ஆன்ம லாபம் அடைய முடியும். அது முருகனால்தான் முடியும ஏனெனில் அவன் வாகனம் பிரணவ ஸ்வரூபம், அவன் சேவல் கொடி பிரணவ நாதம், அவன் ஆயுதம ஞானமாகிற வேல். அவனே பிரணவத்தின் உள்பொருள். ஆக அவனை எப்பொழுதும் பாடி தியானிப்பதாலேயே அவனருள் பெற்று அனாத்ம விருத்திகளை அழித்து ஆன்மா முன்னேற வேண்டும்.

இனி பாடும் பணியே பணியாய் என்பதில் முதல் பணி என்பதற்குக்கன்வர்யம், சேவை, தொண்டு, என்பொருளும்,

இரண்டாவது பணி என்பதற்குத்தொழில் எனப்பொருளும் கொள்ளவேண்டும். பாடும் தொண்டு பரமனுக்கு மிகப் பிரியமான தொன்று. பூமாலை புனைந்தேத்துவதைக் காட்டிலும் பாமாலை புனைந்தேத்துவது சிலாக்கியம். பூமாலை ஒருதரம் சாத்தினால் மறுபடி சாத்த முடியாது. பாமாலையை எப்பொழுதும் சாத்தலாம். வேறு மானிடனிடம் பாடாமல் உன்னுடைய வாகனத்தையும் ஆயுதத்தையும் கொடியையும் பாடுவதன்றி வேறு தொழில் எனக்கு வேண்டாம். திருமழிசை ஆழ்வார் சொன்னது போல், ''தொழில் எனக்குத் தொல்லை, மால் தன் நாமமேத்தபொழுது எனக்கு மற்றதுவே போதும்' என்றபடி அவனைப்பாடுவதே தன் தொழிலாக வேண்டும், என்று பிரார்த்திக்கிறார். சேவலுக்கு ''இருளகற்றான்'', என்று ஒரு பெயர் உண்டு அவன் அக்ஞான இருளை அகற்ற வல்லவன் என்பதனால் சேவலே அவனுக்குக் கொடியாகிற்று. மயில், வேல், சேவல் இம்மூன்றையும் பாடும் பரிசு வேண்டும் என்று கந்தரலங்காரப்பாடல் 52ல் கேட்பதை ஒப்பு நோக்குக. அப் பாட்டு—

''சிகராத்ரி கூறிட்ட வேலும் செஞ்சேவலும் செந்தமிழாற்
பகர் ஆர்வம் ஈ பணிபாச சங்க்ராம பணாமகுட
நிகராட்சம பட்ச பக்ஷி துரங்க ந்ருபகுமரா
குக! ராட்சச பட்ச விட்சோப தீர குணதுங்கனே''

இதன் பிண்டப் பொழிப்புரை:—

போர் செய்தற்குரிய கயிற்றை ஒத்த பாம்பின் படத்தின் மகுடங்களை பொடி ஆக்குதற்குரிய சிறகுகளோடு கூடிய பறவையாகிற மயிலை வாகனமாகவுடையவனே, அரசே! குமரா! குகா! அரக்கர்களின் மீது விரோதம் கொண்டவனே! தீரனே! குணபூர்த்தியுடையவனே! சிகரங்களை உடைய கிரௌஞ்ச கிரியைப்பிளந்த உன் வேலாயுதத்தையும் செம்மையாகிற சேவல் கொடியையும், செந்தமிழ் பாக்களால் நான் பாடித்துதித்தற்குரிய ஆர்வத்தை எனக்கு ஈ என்பது.

## இரண்டாம் பாட்டு

உல்லாச நிராகுல யோகவிதச்
சல்லாப விநோதனு நீயலையோ
எல்லாமற என்னை இழந்தநலம்
சொல்லாய் முருகா சுரபூபதியே

## பதவுரை

உல்லாச = உள்ளக் களிப்பு உடையவனும், நிராகுல = துன்பம் சிறிதும் இல்லாதவனும், யோகவித = சகல பெற்றிகளையும் பெற்று அவாப்த ஸமஸ்த காமனுய் இருக்கின்றவனும், சல்லாப = அடியாருடன் மகிழ்ச்சியோடு சம்பாஷிப்பவனும், விநோதன் = பல லீலைகளைப் புரிபவனுமானவன், நீ அலையோ = நீ அன்ருே? உன்னையன்றி வேறு இத்தனை வாய்ப்பைப் பெற்றவர் யார் உளர்? எல்லாமற = சகல பற்றுகளும் அவஸ்தைகளும் அற்றுப்போய், என்னை=நான் என்னும் என் ஆன்மாவை, இழந்த = அழிந்து உன்னுடன் ஒன்றிய, நலம் = பெரும் பேற்றை, முருகா = அழகனே, சுரபூபதியே = தேவர்கள் தலைவனே; சுரபூபதி என்பதை சுரபதி, பூபதி என்றும் இரண்டாகப் பிரித்துப் பொருள் கொள்ளலாம். சொல்லாய் = நீதான் சொல்லவேண்டும்.

## பொழிப்புரை

முருகா, தேவர்கள் தலைவனே, நீ என்றும் உள்ளக் களிப்பு உடையவனுயும், வியாகூலம் சிறிதுமில்லாதவனுயும், சகலவிதப் பெற்றிகளையும் அடைந்து அவாப்த ஸமஸ்தகாமனுயும், அடியார்களோடு மகிழ்ச்சியுடன் உறவாடுகிறவனுயும், பல லீலைகளைப் புரிகின்றவனுயும் இருக்கின்ருய். நான் என்னையே இழந்து உன்னுடன் ஒன்றிவிட்டேன். இந்த இன்ப நிலையை என்னுல் எப்படிக் கூற முடியும்? நீதான் சொல்லவேண்டும்.

## விரிவுரை

ஆன்மா தன்னை இழத்தலாவது, அதன் பசுகரணம் மாறிப் பதிகரணமாதல். ஜீவன் முக்தி நிலை. அது கைவரப் பெறின் ஆன்மாவும் அவன் போல உல்லாச நிராகுல, யோகவித சல்லாப விநோதனுதல். அவ்வாறு அந்நிலையை அடைந்த ஜீவன் முக்தர்களுடைய பேரானந்த அனுபவத்தை அவர்கள் வாய்விட்டுக்கூறமுடியாது. இதைக் கந்தரலங்காரப் பாடல் ஒன்றில் அழகாகக் கூறுகின்ருர்.

"போக்கும் வரவுமிரவும் பகலும் புறம்பும் உள்ளும்
வாக்கும் வடிவுமுடிவு மில்லா தொன்று வந்து வந்து
தாக்கும் மனோலயந் தானே தரும் எனைத் தன் வசத்தே,
ஆக்கும் அறுமுகவா சொல்லொணுதிந்த வானந்தமே!"

அனுபூதியிலே 30வது பாடலில் இதனையே கூறுகின்றார்.

"செவ்வா னுருவிற் றிகழ்வே லவனன்
றெவ்வா ததெனை வுணர்வித் ததுதான்
அவ்வா றறிவா ரறிகின் றதலால்
எவ்வா றொருவர்க் கிசை விப்பதுவே"

என்றபடி தன்னையிழந்து தற்போதம் கெட்டு விஷயாகார விருத்தி தொலைந்து பாரமார்த்திக தசையை அடைந்த மகான்கள் அனுபவிக்கும் இன்பம் எப்படியிருக்குமெனில், "உல்லாச, நிராகுல யோகவித சல்லாப விநோத"மாயிருக்கும். அதை அவர்கள் சொல்லக்கூட இயலாத நிலையில் மௌன தசையில் இருப்பார்கள். அதை விரித்துச் சொல்ல இறைவனால் தான் முடியும் என்று அருணகிரியார் தான் அடைந்த அநுபூதி இன்பத்தில் திளைத்தவராய் பின்பு சொல்லப்போகின்ற "பேசா அனுபூதி" யை ஈண்டு குறிப்பிடு கின்றார். அதற்கு முக்கிய சாதனம், "தன்னை இழத்தல்" "தந்தது உன்தன்னைக் கொண்டது என்தன்னை" என்று மணிவாசகர் கூறும் நிலை.

முதல் பாட்டில் மயிலையும் வேலையும் சேவலையும் பாடும் சாதனையைக்கூறி அதனால், தான் அடைந்த பேரின்பத்தை இதில் குறிப்பிடுகின்றார். இதுவே சாயுஜ்யநிலை. ஆன்மா தன் சொரூபத்தை இழந்து, இறைவனுடைய சொரூபத்தைப் பெற்று அவனையே போக்யமாக அனுபவித்தல். அதற்கு எல்லாம் அறவேண்டும். பிரபஞ்சப்பற்று ஒழியவேண்டும். நான் எனது என்ற அகந்தை அழியவேண்டும். தன்னுடைய பாரதந்த்ரியத்தையும் கிஞ்சிக்ஞதையையும் உணரவேண்டும். ஆன்மா சிற்றறிவுடையது. தானாக அறியாமல் பிறர் அறிவிக்க அறியும் இயல்புடையது, சுதந்தரமற்றது பாச பந்தப்பட்டது. கண் உறுப்பு மற்றதைப்பார்க்கும், தன்னைத் தானே பார்த்துக்கொள்ளாது அதுபோல ஆன்மா தன்னை யும் அறியாது, இறைவனையும் அறியாது. நல்வினைப்பயனாலும்,

அவனருளாலும் தன் சொருபத்தை அறிந்து பற்றுகளை நீக்கி பாசவலையிலிருந்து தப்பினால் ஆன்மா ஜீவன் முக்தி நிலை எய்தும் என்பது சித்தாந்தக்கொள்கை. அதை "எல்லாமற என்னை இழந்த நலம்" என்று கூறுகின்றார். எல்லாம் என்பதனுள், பாசம் விலகுதல் பற்றறுதல், தன்னை உணர்ந்து தன் நாமம் கெடல் முதலிய சகல விஷயாகார விருத்திகளையும் ஒருங்கே வைத்துப் பொருள் கொள்ளவேண்டும். எல்லாம் அற்றபோது தன்னையும் இழந்துவிடும் என்ற நயம் கவனிக்க. "தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள்" என்பார் அப்பர். இது அவனையே பற்றாகப்பற்றினாலன்றி கைகூடாது.

"பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்று பொய்யாமொழி கூறுவதுபோல் நமக்கு லௌகிகப் பற்று அறவேண்டுமானால், பற்றற்றவனாகிய இறைவனுடைய பாதங்களைப் பற்றிக் கொள்ளவேண்டும். ஒன்றை விட்டு மற்றொன்றைப்பற்றுதலே ப்ரபத்தி எனப்படும். அடைய வேண்டிய லக்ஷியமும் முருகனே. அதை அடைவதற்கு உபாயமும் அவனே என்ற உணர்வு பிறக்கும்போது விஷயாகார விருத்திகள் நீங்கி பிரம்மாகார விருத்திகள் ஜனிக்கும். இவ்வாறு பிரம்மாகார விருத்தி ஏற்பட்ட மகான்களே ஜீவன் முக்தர் எனப்பட்டவர். அவர்கள் தன்னை இழந்து, தற்போதம் கெட்டு எல்லாம் அவனாகவே காணும் பேற்றை அடைந்து அவன்போலவே உல்லாச நிராகுல யோகவித சல்லாப விநோதனாயிருக்கலாம், என்பது இப் பாட்டின் உள்ளுறைப்பொருள்.

ஆக இப்பாட்டில் கூறப்பட்ட தத்துவங்கள் யாதோ எனில்,

(1) முருகன் ஒருவனே உல்லாச நிராகுல யோகவித சல்லாப விநோதன்.

(2) ஆன்மாவும் அவ்வாறு ஆகவேண்டுமென்பதே ஆன்மாவின் குறிக்கோளாக இருக்கவேண்டும்.

(3) அதற்கு உபாயம் அவனையே உபேய உபாயமாகக் கொண்டு ப்ரபத்தி பண்ணுதலாம்.

(4) அவ்வாறு சாதனை செய்தால் விஷயாகார விருத்திகளாகிற பிரபஞ்சப்பற்று ஒழிந்து தானும் அழிந்து அவனோடு ஒன்றி விடலாம்.

(5) அவ்வாறு பசுகரணம் மாறி பதிகரணம் உண்டாகிவிட்டால் நாமும் அவன்போல உல்லாச நிராகுல யோகவித சல்லாப விநோதனாய் வாழமுடியும்.

(6) இது அவனருளாலேயே கிட்டும்

(7) இந்தப் பேரானந்தப் பெருவாழ்வை நாம் உரைக்க முடியாது. அவனே தான் சொல்லவேண்டும்.

இப்பாட்டில் இறைவனுடைய ஸ்வரூபம், ஆன்மாவின் லக்ஷியம். இறைவனை அடைய உபாயம், அதனால் பெரும் பயன் என்பன குறிக்கப்படுவது சிந்திக்கப்பாலது.

இதற்கு கந்தரலங்கார மேற்கோள் செய்யுள்,

" சொல்லுகைக்கு இல்லை என்று எல்லாம் இழந்து சும்மாவிருக்கும்
எல்லையுட் செல்ல என்னை விட்டவா இகல் வேலன் நல்ல
கொல்லியைச் சேர்கின்ற சொல்லியைக் கல்வரை கொவ்வைச் செவ்வாய்
வல்லியைப் புல்கின்ற மால்வரைத்தோள் அண்ணல் வைபவமே''

## மூன்றாம் பாட்டு

வானோ புனல் பார் கனல் மாருதமோ
ஞானோ தயமோ நவினூன் மறையோ
யானோ மனமோ எனையாண்ட விடந்
தானோ பொருளாவது சண்முகனே.

## பதவுரை

சண்முகனே = ஆறுமுகப்பெருமானே, பொருளாவது = நித்ய வஸ்துவானது (எது?) வானோ? = மஹாகாசமோ, புனல்பார்கனல் மாருதமோ? = அப்பு, பிருதிவி, தேயு, வாயு என்ற பூதங்களா? ஞானோதயமோ? = அறிவின்

தோற்றமா? நவில் நான்மறையோ? = ஓதப்படுகின்ற நான்கு வேதங்களா? யானோ = ஆன்மாவா? மனமோ? = அந்தக்கரணமா? எனையாட்கொண்டவிடந்தானோ? = என்னை என் பக்குவமறிந்து வலிய வந்து ஆட்கொண்ட கருணைக்கு இடமான நீ தானோ?

### விரிவுரை

இப்பாடலில் பரதத்துவ நிர்ணயம் செய்கின்றார். பொருளாவது எது? நித்யவஸ்து என்பது எது? இவ்வாறு நிர்ணயம் செய்வதில் புறச்சமயிகள் கூற்றை யெல்லாம் கூறி விலக்கி முருகனே பரதத்வம் என்று முடிவு கட்டுகிறார். முதலில் பஞ்சபூதங்களையும் சேர்த்துக்கூறாமல் வானோ? என்று பிரித்துக்கேட்டுவிட்டு, ஏனைய நான்கு பூதங்களையும் சேர்த்துக் கூறியிருப்பது நோக்கத்தக்கது. நித்யவஸ்து என்பது தனக்கென்று ஆதி அந்தமில்லாததாய் யாவற்றிற்கும் ஆதாரமாய்த் தனக்கு வேறு ஆதாரம் இல்லாததாய் பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமாய் வேதம் கூறுவது போல் "எதினின்றும் இவை யெல்லாம் தோன்றினவோ, தோன்றின இவையெல்லாம் எதில் ஜீவிக்கின்றனவோ முடிவில் இவை யாவும் எதில் ஒடுங்குகின்றனவோ அதுவே நித்யவஸ்து எனப்படும். பல சமய வாதிகள் பலவிதமாய் பரதத்வ நிர்ணயம் செய்துள்ளனர்.

வானோ? மஹாகாசமோ? ஆகாசம் என்பது வெளி. இது சூனியம். இதுவே பிரபஞ்சத்தோற்றத்திற்கும் அழிவிற்கும் காரணமாயிருப்பது என்று ஒரு சாரார் கூறியுள்ளனர். இவர்கள் சூனியவாதிகள் எனப்படுவர். பானையிலிருக்கும் காற்று பானை உடைந்தபோது வெளியிலிருக்கும் காற்றோடு கலந்துவிடுவதுபோல உடலிலிருக்கும் ஆகாசம் உடல் இறந்தவுடன் பராகாசத்தில் கலந்துவிடும். அவ்வளவுதான். இறந்த உயிர் மீளப் பிறப்பதில்லை என்பது இவர்கள் மத சித்தாந்தம்.

அடுத்தபடி காணப்படும் நிலம், நீர், தீ, காற்று, என்னும் நான்கே தத்துவங்கள். இவை நித்யவஸ்துக்கள் இவற்றின் சேர்க்கையாலாவதே உடம்பு. இந்த சேர்க்கையால் (வெற்றிலை பாக்கு, சுண்ணாம்பு கூடி சிவப்பு நிறம் காட்டுவதுபோல) ஓர் அறிவு தோன்றும். உடம்புக்கு இன்ப துன்பங்கள்

இயல்பாக உள்ளன. உடம்புக்கு வேருக ஆன்மா உண்டென்பதும் இன்ப துன்பங்களுக்குக் காரணம் வினையென்பதும், வினைக்கு ஈடாக உயிரை உடலோடு கூட்டுவதற்கு ஓர் கடவுள் உண்டு என்பதும் பொய் என்பது ஓர் சமயக்கொள்கை. இதனை காட்சிவாதம் என்றும் கூறுவர். இது சாருவாகம் என்ற மதம்.

மூன்ருவதாக ஞானேதயமோ? என்ற கேள்வியில் பௌத்தமதம் குறிக்கப்படுகின்றது. ஞானமே ஆன்மா. அது நீரோட்டம்போல கணந்தோறும் தோன்றி அழியும். அவ்வாறு தோன்றி அழியும் காலத்து, முந்தி அழிந்த ஞானத்தின் வாசனை பிற்கணத்தில் தோன்றும் ஞானத்திலும் தோன்றும். வாசனை அழிவதே முக்தி என்பது. கணந்தோறும் தோன்றி மறையும் அதாவது பங்கப்படும் என்று இவர்கள் கூறுவதால் இதற்குக் கணபங்க வாதம் என்றும் பெயர். இந்த ஞானம்தான் நித்ய வஸ்து. உலகத்தில் தோன்றும் புறப்பொருள்கள் எல்லாம் சூனியம். ஞானம் சூனியமன்று. அது நித்யம் அது சாகார ஞானம், நிராகாரஞானம் என இருவகைத்து புறப்பொருளைப்பற்றி அகத்திலே தோன்றும் ஞானம் சாகாரம். வட்டமான வஸ்துவைப்பார்த்து இது வட்டம் என்ற உணர்ச்சிபெறுதல், சிவப்பைக்கண்டு சிவப்பு என்ற உணர்ச்சிபெறல், யானையைக்கண்டு அது கறுப்பு என்று உணர்ச்சிபெறல் போன்றஞானம் சாகாரம் "போதி ஸத்வம்" என்று சொல்லப்பட்ட புறப்பொருள்களின் தொடர்பில்லாமலே அவற்றின்மீது உள்ள பற்று அழிய அகத்தில் உதிப்பது (ஞானேதயம்) நிராகார ஞானம். இதுவே முக்தி என்பர். இந்த வகுப்பு பௌத்தர்களுக்கு யோகாசாரர் என்றுபெயர்.

நான்காவதாக, நவின் நான்மறையோ? என்றதில் மீமாம்சக மதம் குறிக்கப்படுகின்றது. வேதம் ஒருவரால் செய்யப்பட்டதன்று. அது அபௌருஷேயம். அதுவே பிரமாணமாகும் வேதத்தில் விதிக்கப்பட்ட யாகயக்ஞாதி ஸம்ஸ்காரங்களை யதோக்தமாய்ச் செய்வதே முக்தியைக் கொடுக்கும். அதற்கென்று கடவுள் ஒன்று தேவையில்லை. சத்கர்மா இன்பமான சொர்க்காதி பலன்களைக் கொடுக்கும். துஷ்கர்மா நரகாதி பலன்களைக் கொடுக்கும். ஆன்மாக்களுக்கு வேருய் பரமான்மா ஒருவன் உண்டென்பதும், உலகம்

தோன்றி அழியும் என்பதும் பொய். உலகம் சாச்வதம். வேதத்தில் கர்மகாண்டமே பிரமாணம். மீமாம்ஸை நூல் செய்தவர் ஜைமினி பகவான் பூர்வ மீமாம்ஸகர்கள் நிரீசுவர வாதிகளாகவே இருந்தனர். பிற்காலத்தில் செய்யப்பட்ட பாஷ்யங்களும், இதைப் பின் பற்றின. பட்டாசார்யர் என்பவர் ஒரு பாஷ்யகாரர். அவர் கர்மமே பயன்கொடுக்கும், வேதத்தில் விதிக்கப்பட்ட யாகயக்ஞாதிகளாலேயே ஆன்மா பேரின்பம் எய்துகின்றது. அதுதான் சொர்க்கம் என்பது என்று சித்தாந்தப்படுத்தினர். "விரதமே பரமாகவேதியரும் சரதமாகவே சாத்திரம் காட்டினர்"

அடுத்தது யானோ? நானே நித்யவஸ்து. எனக்கு அன்னியமாய் வேறொன்றுமேயில்லை. தோன்றுவதெல்லாம் பொய். நானே வேதத்தில் குறிக்கப்பட்ட பிரம்மம். நானே பல்வேறு ஜடப்பொருள்களில் வியாபித்து நிற்கிறேன். அவையாவும் மனப்பிராந்தி, என்னை வினை ஒட்டுவதில்லை. நான் நிர்விகாரன். நான் சுதந்திரன், நாமரூபரஹிதன், சாஸ்வதன், பிரபஞ்சம் பூராவும் இருப்பது நானே என்ற ஏகான்ம வாதக்கொள்கை இங்கு குறிக்கப்படுகின்றது.

அடுத்தபடி மனமோ? என்ற கேள்வியில் நிரீசுவர சாங்கியம் குறிக்கப்படுகின்றது. மனம் என்ற அந்தக்கரணமே ஆன்மா. அதற்கு வேறாய் இறைவன் ஒருவன் உண்டு என்பது பொய். மூலப்பிரகிருதியின் பரிணாமமே பிரபஞ்சம் என்பது இவர்கள் கொள்கை. இதைச் செய்தவர் கபில முனிவர்.

கடைசியாக "என்னை ஆண்ட விடம் தானோ? என்று கேட்கின்றார். இங்கு இடம் என்பதை சாமானியப்பொருளில் கொள்ளாமல் "நிலை" என்ற பொருளில் கொள்ளவேண்டும். இந்தக்கேள்வியில் ஆண்டவன், ஆளப்பட்டவன் என இரண்டும் இருக்கிறது காண்க. ஆளப்படுகிறவனுடைய ஆன்ம பக்குவ நிலையறிந்து ஆண்டவனே குருநாதனைகத் தோன்றி ஆட்கொள்வான். பரிபக்குவநிலை என்பது இருவினை ஒப்பும், மலபரிபாகமும், ஆகும். இதில் கட்டப்பட்டவனும் உண்மை. கட்டை அவிழ்ப்பவனும் உண்மை. கட்டும் உண்மை என்பது தொனிக்கின்றது. அதாவது கட்டப்பட்ட பசு, கட்டை அவிழ்க்கும் பதி, கட்டாகிய பாசம், இம் மூன்றும் முப்பொருள் என்ப. இவை மூன்றுமே நித்ய

வஸ்துக்கள். "என்று நீ அன்று நான்" என்றதுபோல் ஆன்மாவும் நித்யம். பரமான்மாவும் நித்யம். ஆன்மாவைப் பந்தப்படுத்தும் மும்மலங்களும் நித்யம் இறைவனருளால் மும்மல நீக்கம் பெற்ற ஆன்மாக்கள் எய்தும் நிலையே முக்தி. இதுவே சுத்தாத்வைத சித்தாந்தக்கருத்து இந்தக்கேள்விக்கு மட்டும், "தானோ" என்ற பதம் சேர்த்திருப்பதால் இது தான் என்று முடிவு கட்டுவதாக ஏற்படுகிறது.

ஆக சிவஞான சித்தியாரின் பரபக்கத்து புறச்சமயம் அகப்புறச்சமயம் இவற்றைக்கூறி அவையல்ல என்று மறுத்து பதி, பசு, பாசம் என்ற முப்பொருள் உண்மையை விளக்கி முருகனே பதி, ஆன்மாவாகிய நானே அவனால் ஆட்கொள்ளப் பட்ட பசு. இவைதான் நித்ய வஸ்துக்கள் என்று பரதத்துவ நிர்ணயம் செய்துள்ளார்.

இப்பாடலுக்கு இதுவரை இவ்வுரை யாரும் கூறவில்லை என்ற காரணத்தினால் பல அறிஞர்கள் அடியேன் உரையை வலிந்து பொருள் கோடல் என்று கூட கூறத்துணிவர். ஆனால் நடுநிலைமையிலிருந்து சிந்திப்பவர்க்கு இவ்வுரையே அருணகிரி யாரின் உள்ளக்கிடக்கை என்பது புலப்படும். வெறும் கற்பனையல்ல, புரிந்து கொள்வதும் எளிது.

"அராப்புனை வேணியன் சேயருள்வேண்டும் அவிழ்ந்த
அன்பால்
குராப்புனை தண்டையந்தாள் தொழல் வேண்டும்
கொடிய ஐவர்
பராக்கறல் வேண்டும் மனமும் பதைப்பறல்
வேண்டும் என்றால்
இராப்பகல் அற்ற இடத்தே இருக்கை எளிதல்லவே."

—கந்தரலங்காரம். 74

கந்தரலங்கார மேற்கோள் செய்யுள் (9.)

"தேனென்றும் பாகென்றும் உவமிக்கொணா
மொழித்தெய்வவள்ளி
கோன் அன்று எனக்கு உபதேசித்தது ஒன்று உண்டு
கூறவற்றோ
வானன்று, காலன்று, தீயன்று, நீரன்று, மண்ணுமன்று,
தானன்று, நானன்று, அசரீரி அன்று, சரீரியன்றே."

## நான்காம் பாட்டு

வளைபட்டகை மாதொடு மக்களெனும்
தளைபட்டழியத் தகுமோ தகுமோ
கிளைபட்டெழு சூருரமுங் கிரியும்
தொளைபட்டுருவத்தொடு வேலவனே.

### பதவுரை

*கிளைபட்டெழு* — கிளைகள் போல நாலாபக்கமும் சுற்றம் சூழ எழுந்து போருக்கு வந்த, *சூர் உரமும்* — சூரபத்மனது மார்பும, *கிரியும்* — கிரௌஞ்சமென்னும் மலையும், *தொளை பட்டுருவ* — ஊடுருவிப் பிளந்துசெல்ல, *தொடுவேலவனே* — வேலாயுதத்தைப் பிரயோகித்தவனே, *வளைபட்டகை* — வளையல்கள் அணிந்த கைகளுள்ள, *மாதொடு* — மனைவி யொடு, *மக்களெனும்* — பிள்ளைகள் சந்ததிகள் என்ற, *தளை பட்டு* — விலங்குகளால் கட்டப்பட்டு, *அழிய* — என் ஆன்மா தன் சொரூபத்தை இழக்க, *தகுமோ? தகுமோ?* — என் ஆன்ம சொரூபத்துக்கும் தகுதியோ? உன் கருணைத் திறனுக்கும் தகுதியோ? இல்லை என்றபடி.

### விரிவுரை

இப்பாட்டில் ஆன்ம விகாஸத்துக்குத் தடைகளாக இருக்கும் விரோதி சொரூபத்தைக் கூறுகின்றார். மாணிக்க வாசகரும் "சுற்றமெனும தொல்பசுக் குழாங்கள் பற்றி அழைத்துப் பதறினர்" என்று குறிப்பிடுகின்றார். ஆன்ம முன்னேற்றத்திற்கு முதற் தடையாயிருப்பவர் மனைவி மக்கள் என்பது அநுபவ வாயிலாக யாரும் உணர்வர். ஆகையால் அவர்களை தளை அல்லது விலங்கு என்று கூறுகின்றார். இத் தளை நீங்க முருகன் அருள்வேண்டும். முருகனுடைய எந்த அவதாரத்தை இங்கு குறிப்பிடுகின்றாரென்பது கவனிக்கத் தக்கது. கிளை கிளையாக சூரருடைய சுற்றமும் சைன்யமும் சூழ்ந்து வர அவற்றைத் தனி வேலினால் அழித்தவன், கிரௌஞ்சம் என்ற மாயாமலையைத் துகளாக்கியவன். அந்த முருகனாலேயேதான் இந்தத் தளை நீங்கும்.

சூரபத்மன், சிங்கமுகன், தாரகன் என்பவர்கள் மூவரும் ஆணவம், கர்மம், மாயை என்ற மும்மலங்களின் உருவகங்கள். மாயா மலத்தின் உருவகமான தாரகாசுரனின் இருப்பிடம் கிரௌஞ்சமலை. அது வெறும் மலையல்ல. மாயைக்கே இருப்பிடம். அதுவே பல உருவங்களை எடுக்கும். மாயையே உயிர் பெற்றுவந்து நிற்பதுபோன்றது அம்மலை. அம்மலையையும் வேலினால் பிளந்து அதில் சிக்கிக்கொண்டிருந்த நவவீரர்களையும் அவர்களின் படைகளையும் மீட்டார் முருகப்பெருமான். முதலில் இறந்தது மாயை, பின்பு இறந்தது கர்மமாகிய சிங்கமுகன். அதன்பின் அழிந்தது ஆணவமாகிய சூரபன்மன். இம்மும்மலங்களின் பல்வேறு வியாபகங்களே சூரனின் சுற்றமும் மக்களும். மும்மலங்கள் கிளைபட்டு எழும் இயல்பின. பிரபஞ்சப்பற்று அறுதலே மாயையை வென்றது என்று சுருங்கச் சொல்லலாம். பற்றற்றபோது கர்மாவும் நாசம் அடைகின்றது இருவினையொப்பும் மலபரிபாகமும் ஆன்மா அடைகின்றது. அந்த நிலையில்தான் ஆணவம் ஒடுங்கும். மும்மலங்களை ஒழித்தல் ஞானத்தாலேயேதான் இயலும். அந்த ஞானமே வேல். ஆக ஞானசக்தியாகிய வேலினால் மும்மலங்களை அழித்த முருகன்தான் சீவர்களைப் பிணித்திருக்கும் சம்சார பந்தத்தை நீக்கவேண்டும். மனைவி மக்கள் என்ற பந்தமே மும்மலங்களையும் சேர்த்துவைக்கும் இயல்பின. மனைவி மக்கள்மீது கொண்ட காதல் மாயையின் சொரூபம், அவர்களை ரக்ஷிக்க எடுத்துக்கொள்ளும் முயற்சியே கர்ம பந்தம. சீவர்கள் என் மனைவி, என் மக்கள் என்றும், நான் காப்பாற்றுகிறேன் என்றும் நினைப்பில் எழுவது ஆணவம். ஆக மனைவி மக்கள் என்பவர்கள் மும்மலங்களுக்கும் மூல காரணம். ஆதலால் அவர்களை முதல் தளையாக இப்பாட்டில் சொன்னார். பிந்தின பாடல்களில் வேறுதளைகளையும் கூறுவார். ஆங்காங்கு பார்ப்போம். தகுமோ தகுமோ என்று இரட்டித்தது ஒரு விசேஷம். ஆன்மாவின் உண்மை சொரூபம் பந்தப்படுவதல்ல. ஆக ஸம்ஸார பந்தம் ஆன்ம தத்துவத்துக்கும் தகாது என்பது ஒன்று இறைவன் ரக்ஷகன். அவன் காக்கக் கடமைப்பட்டவன். அப்படியிருக்க ஓர் சீவன் இவ்வாறு ஸம்ஸார பந்தத்தில் சிக்கித் தவிப்பதைப் பார்த்துக்கொண்டிருப்பது அவனது கருணைத் திறத்துக்கும் தகுதியுடையதாக மாட்டாது என்று இரண்டுவிதத்திலும் தகுதியின்மையைக் கூற இரண்டுமுறை தகுமோ தகுமோ என்கின்றார் என்க.

ஆக இப்பாட்டில் மனைவி மக்கள் என்ற விரோதி சொரூபத்தைக் கூறினார் என்னலாம். இல்லற இன்பத்தில் மோகம் கொண்டு என் மனைவி மக்கள் என்று மயங்கித் தனக்குத் தானே விலங்கு போட்டுக்கொள்ளும் மானிடர்காள்! சூரர் குலத்தைத் தன் வேலினால் அழித்த முருகன் அருளை நாடுங்கள். அவன் ஒருவனே இந்தப் பந்தத்திலிருந்து உங்களை விடுவிக்க வல்லவன். உங்கள் முயற்சியால் நடக்காது என்று உபதேசம் செய்கின்றார்.

கந்தரலங்கார மேற்கோள் செய்யுள் (32)

*கிளைத்துப் புறப்பட்ட சூர்மார்புடன் கிரியூடுருவத்*
*தொளைத்துப் புறப்பட்ட வேற்கந்தனே துறந்தோருளத்தை*
*வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்கும் கண்ணார்க்*
*கிளைத்துத்தவிக்கின்ற என்னை யென்நாள் வந்து ரட்சிப்பையே.*

ஐந்தாம் பாட்டு

மகமாயை களைந்திட வல்லபிரான்
முகமாறு மொழிந்து மொழிந்திலனே
அகமாடை மடந்தையரென் றயரும்
சகமாயை யுணின்று தயங்குவதே

பதவுரை

மகமாயை – மஹாமாயை என்றதைத், களைந்திட – நீக்க, வல்லபிரான் – சக்தியையுடைய முருகன், முகம் – தனது திருவாயால், ஆறும் – ஈடேறும் வழியையும், மொழிந்தும் – கூறியருளியும், அகம் – சரீரம், ஆடை – உடை, மடந்தையர் - பெண்டிர், என்று அயரும் – என்று வருந்தும், சகமாயையுள்நின்று – பிரகிருதி மாயைக்குள் இருந்து கொண்டு, தயங்குவதே – திண்டாடுவதிலிருந்து, ஒழிந்திலனே – நீங்காதிருக்கின்றேனே!

விரிவுரை

இப்பாடலுக்கும் ஏனைய உரைகளின் கருத்தைத்தழுவாது வேறு பொருள் கொடுக்கின்றோம். முகமாறு மொழிந்தும் ஒழிந்திலனே என்பதை ஆறுமுகத்தாலும் எனக்கு உபதேசம்

செய்தும் நான் நீங்காது தயங்குகிறேன் என்பதே எளிய உரைகள். இது பொருந்துமோ? முருகபிரான் ஆட்கொண்ட பின், அருணகிரியார் அகம் ஆடை மடந்தையர் என்று அயர்ந்தார் என்பது பொருத்தமாக இல்லை இது அநுபூதிப் பாடல்கள் என்பது ஞாபகத்திலிருக்க வேண்டும். அநுபூதி பெற்ற மகான் முருகனே நேரில் வந்து உபதேசம் செய்து தேற்றிய பின்னும் அயர்ந்தார் என்பது கொஞ்சமும் பொருத்த மில்லை, அல்லது வாசகர்களுக்கு அறிவுறுத்தும் முறையில் பாடினர் என்றாலும், முருகனுடைய உபதேசத்தை ஆறு முகங்களினின்றும் கேட்டபின்பும் அவர்கள் அயர்கின்றார்களே என்று இரங்குவதும் சரியான பொருள் ஆகாது.

இப்பாட்டில் மாயையின் இரண்டு வகையை அழகாகக் கூறுகின்றார், மகமாயை என்றும் சகமாயை என்றும். மக மாயை என்பது வடமொழியில் "மஹாமாயா" என்று கூறப் பட்டதைக் குறிக்கின்றது. அது மும்மலங்களில் ஒன்றான "மாயை" அல்ல என்பதை உணரவேண்டும். ஈண்டு கூறப் படும் "மஹாமாயை" என்பது நித்தியமாய் ஒன்றாய், சகலத் துக்கும் முதற்காரணமாய், ஜடமாய், ஸர்வ வியாபகமாய் இறைவனுக்கு பரிக்கிரம சக்தியாய் இறைவனின் வியாப்ய மாய், மெய்ப்பொருளாய், அருவாய் உள்ளது. இது சுத்த மாயை, அசுத்த மாயை என இருவகைப்படும். சுத்த மாயை, மஹாமாயை, குடிலை, குண்டலினி, விந்து என்பன ஒரு பொருட்கிளவி. சுத்தம் என்றால் துன்பத்தோடு விரவுத லின்றி இன்ப வடிவாயிருப்பது.

இறைவன் ஐந்தொழில் செய்கின்றான். அவ்வாறு தொழிற் பட ஏதுவாயிருப்பதுதான் மஹாமாயை. அவனுடைய ஆற்றல் அவனோடு ஒன்றியிருக்கும்வரை சக்தியெனவும், அவனை விட்டுப் பிரிந்து நிற்கும் நிலையில் மஹாமாயை எனவும் படும். இறைவனாகிய ஸர்வசக்தனிடத்தில் அவனுடைய பரிக்கிரம சக்தி சலன ரூபமாயிருக்கும்.

இனி மகமாயை களைந்திட வல்லபிரான் என்றவிடத்து சாமான்யப் பொருள் கொள்வோர் கூற்று "என் அறிவை மயக்கும் மிகவும் பெரிதான மாயையை உனது உபதேசத் தினால் நீக்க வல்லமையுடைய கடவுள்" என்பது. இது மஹா மாயையின் தத்துவத்திற்குப் பொருந்தாது. பிரபஞ்சத்துக்கு

முதற்காரணம் மாயை, துணைக்காரணம் சக்தி. நிமித்த காரணம் இறைவன். சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் மஹா சங்கார காலத்தில் யாவும் மாயையில் ஒடுங்க, மாயை சக்தியில் ஒடுங்க சக்தி இறைவனில் ஒடுங்கும் அவனிடத்தி லிருந்தே தோன்றிய மாயை அவனிடமே ஒடுங்கும் என்ற தத்துவத்தை விளக்க மகமாயை களைந்திட வல்லபிரான் என்றார். களைதல், வேரறுத்தல், நீக்குதல், விலக்குதல் என்று பொருள்படும். ஆகையால் மஹாமாயையைத் தன்னுள் ஒடுக்கிக் களையும் ஆற்றலுடைய கடவுள் என்ற பொருள்தான் பொருத்தமுடையதாகும்.

இனி, சகமாயை என்னவென்று பார்ப்போம். சகமாயை என்பது பிரபஞ்ச மாயை, பிரகிருதி மாயை, மாயை என்ற மலம் இதுவும் நித்தமாய் ஒன்றாய் கலைமுதல் நிலம் ஈறாக உள்ள அசுத்த பிரபஞ்சத்துக்குக் காரணமாய் அவற்றில் வியாபித்து வினைக்குப் பற்றுக்கோடாய் வினையால் கட்டுண்ட ஆன்மாக்களை மயக்குவதாயிருக்கும். இதை சித்தாந்த பரிபாஷையில் மோகினி என்பர்.

இது ஐந்து விதமான தொழில்களையுடையதாதலால் ஐந்து நாமங்களைப் பெற்றது. சிவ சைதன்யத்தை மறைத்தலால் "தமம்" என்றும், அசுத்த பிரபஞ்சத்துக்குக் காரணமாய் இருப்பதால் "மாயை" என்றும் (அதாவது 'மா' என்றால் ஒடுங்குதல் 'யா' என்றால் வருதல். ஆதலின் எல்லாக்காரியங்களும் தன்பால் ஒடுங்குதலானும், தன்னின்றே அவை தோன்றக் காரணமாய் இருத்தல் பற்றியும் மாயா எனப்பட்டது.) விபரீத ஞானம் உண்டாக்குவதால் 'மோகம்' என்றும், அறிவை அழித்தலால் "அவித்தை" என்றும், உண்மை சொரூபத்திற்கு அந்நியமானதால் "அநிருதம்" என்றும் கூறப்படும். ஆன்மாக்கள் செய்த கர்மத்திற்கு ஈடாய் விஷயங்களில் பிரவர்த்திக்க இச்சை யுண்டுபண்ணுகிறது. இதுபற்றி மேலும் அறிய விரும்புவோர் சிவஞான போதபாடியம், சித்தியார் முதலிய சித்தாந்த சாஸ்திரங்களைப் பார்க்கலாம்.

ஆக மஹாமாயை ஆகிற தத்துவம் இறைவனிடமே தோன்றி அவனுள்ளே ஒடுங்கும் இயல்புடையது அவனால் செயல்படுவது, அவன் மாயாசம்பந்தமில்லாதவன். மாயை

அவனுள் அடக்கம். அவன் மாயையுள் அடக்கமல்ல. மாயையைத் தனக்கு அநுசரணையாக வைத்துக்கொண்டு பிரபஞ்ச சிருஷ்டி செய்கிறான் உயிர்கள் தத்தம் வினைக்கேற்ப தனு, கரண, புவன போகங்களை அடைந்து பிரபஞ்ச மாயையில் சிக்கி உழலும் இயல்புடையன. அந்த மாயை 'அகம்' 'ஆடை' மடந்தையர் என்று இத்யாதி ரூபங்களில் தோன்றும். புறப்பொருள்மீது நாம் கொள்ளும் விருப்புக்கு அபிமானம் என்று பெயர். நாம் நம் உயிர்மீது கொண்ட பிரியமே முன்னிலைப்பட்டு புறப்பொருள்களைப் பற்றி நிற்கும். "ஆத்மனஸ்து காமாய ஸர்வம் ப்ரியம் பவதி," என்பது சுருதி வாக்கு. ஆக இங்கு அகம் என்பதனை "வீடு" என்று கொள்ளாமல் சரீரம் என்ற பொருளில் கொள்ளவேண்டும். முதலில் சரீராபிமானம் அதற்கு அநுசரணையான ஆடை, ஆபரணங்கள் அச்சரீரத்திற்கு இன்பம் பயக்கும் மடந்தையர், போன்ற இதர சாதனங்கள். இவற்றின்மீது கொண்ட பற்றுத்தான் சகமாயை என்று குறிப்பிடப்படுகின்றது.

இறைவன் உயிர்களைப் படைத்தான். அவர்கள் உய்யும் பொருட்டு வழிகளையும் வகுத்தான். இந்த வழிகள் என்பவை 18 ஆக குறிப்பிடப்படுகின்றது. அவற்றை "அஷ்டாதச குணித வித்யா" என்கிறார் சங்கரர். அவை இறைவனால் ஆன்மாக்கள்மீது கொண்ட பரம கருணையினால் அவைகள் ஈடேறும் பொருட்டு உண்டாக்கப்பட்டவை.

அவை 4 வேதம் 6 சாஸ்திரம், புராணம், நியாயம், மீமாம்ஸை, தர்ம சாஸ்திரம், அர்த்த சாஸ்திரம், ஆயுர்வேதம், தனுர்வேதம், கந்தர்வ வேதம் ஆக 18. 'முகம்' என்ற வடமொழி சொல்லுக்கு 'வாய்' என்றுதான் பொருள். இறைவனுடைய முகத்திலிருந்தே அந்த அஷ்டாதச வித்யைகளும் உண்டாயின. அப்படியிருந்தும் சிலர்கள் சகமாயையில் நின்று தயங்குகிறார்கள், அவற்றால் பயனடையவில்லை. என்பதை "முகமாறும் மொழிந்தும் ஒழிந்திலேன்" என்பதில் குறிப்பிடுகின்றார். அப்படியில்லாமல் முருகன் தனது ஆறு முகங்களாலும் உபதேசம்செய்து ஆட்கொள்ளப்பட்ட போதிலும், சகமாயை நீங்கவில்லை என்பது முருகன் உபதேசத்திற்கே இழுக்காய் இருப்பதை அறிஞர்கள் உணரவேண்டும்.

ஆக இப்பாட்டின் பிண்டப் பொழிப்புரை :—

மஹாமாயையையே தன்னுள் ஒடுக்கிக் களைய வல்லவ னாகிய இறைவன் ஆன்மாக்கள் உய்யும்பொருட்டு வேத சாஸ்திரங்களை நல்கி வழிகோலிக்கொடுத்தும் மக்கள் அதனால் பயனடையாமல் சரீராபிமானத்தால் சகமாயையில் நின்று தயங்குகின்றனரே என்று இரங்குகிறார்.

முகமாறும் என்பது முருகனது ஆறு திருமுகங்களைக் குறிப்பதாயும் அவைகளினின்றும் ஆறு அக்ஷரங்கள் தோன்றி ஷடக்ஷர மந்திரமானதாயும் அவற்றை அவனே உபதேசித்த தாயும் அப்படி உபதேசிக்கப்பட்டும் சக மாயையில் நின்று தயங்குவதாய் பொருள்கொள்வர் உரையாசிரியர்கள் பலரும். இது பொருந்தாது என்பதை விளக்கவே இப்பாடலுக்கு நீண்டதொரு விரிவுரை அவசியமாயிற்று பழக்கத்தில் இருந்து மனதில் பதிந்துபோன ஒரு கருத்தை விடுத்துப் புதுக் கருத்தை ஒப்புக்கொள்வது சிரமம்தான். என் கருத்தும் ஒவ்வுமோ என்று அறிஞர்கள் சிந்திக்கவே இத்துணை எழுதினோம். முருகனே நேரில் தோன்றித் தன் ஆறு திரு முகங்களாலும் உபதேசித்த பின்பும் ஒருவர் அகம் ஆடை மடந்தையர் என்ற சகமாயையில் திண்டாடினர் என்ற கருத்து நம் மனதுக்கு ஒவ்வவேயில்லை.

திருஞானசம்பந்தர் தேவாரத்திலுள்ள பாட்டுக்கள் 2—43—6; 3—23—6; 3—80—6; மக்கள் உய்யும்பொருட்டு இறைவன் வேதம் நல்கினான் என்ற கருத்தையுடைய பாக்கள்.

## ஆறும் பாட்டு

திணியான மனோசிலை மீதுனதாள்
அணியா ரரவிந்த மரும்புமதோ
பணியா வென வள்ளி பதம் பணியும்
தணியா அதிமோக தயாபரனே.

### பதவுரை

பணியாவென் = என்ன சேவை செய்யவேண்டும் என்று கேட்டு, வள்ளி பதம் பணியும் = வள்ளி நாச்சியாரின் பதத்தை வணங்கும், தணியா = குன்றாத, அதிமோக = பெருங்காதலையுடைய, தயாபரனே = கருணையுடையவனே, திணியான = வன்மை பொருந்திய, மனோ சிலை மீது = மன

மாகிற கல்லின் மீது, உனதாள் = உன்னுடைய பாதங்களாகிய, அணியார் = அழகு பொருந்திய, அரவிந்தம் = தாமரை மலர்கள், அரும்புமதோ = முளைக்குமோ.

விரிவுரை

இப்பாடலும் ஆழ்ந்த கருத்துள்ள அழகான பாடல். இதன் உரையிலும் சில புதுக்கருத்துக்களைக்கூற ஆசைப்படுகின்றேன். உரையாசிரியர்கள் மனமாகிய கல்லின்மீது முருகனின் திருவடிகளாகிற தாமரை மலராது என்றே பொருள் கண்டனர். முன் இரண்டடிகட்கும், பின் இரண்டடிகட்கும் இயைபு காணூர். அன்பர் அகத்தேயன்றி கட்டாந்தரையான என் அகத்தில் உன் பாத பங்கயங்கள் முளையாது என்று அருணகிரியார் கூறியதாகவே முடிவு கட்டிவிட்டார். இது கந்தரனுபூதி பெற்ற அருணகிரியார் அவ்வநுபூதி பெற்ற பின், அநுபூதியின் இன்பத்தைக்கூறும் நூல் என்பதை ஏனே மறந்தேவிடுகின்றனர். கேட்கப்போனுல் தன்னை வியாஜமாக வைத்துக்கொண்டு உலகுக்கு உபதேசம் செய்கிறார் என்று சமாதானமும் கூறுவர். இங்கு கல்லிலும் தாமரை முளைத்ததையல்லவா வியந்து கூறுகின்றூர். என்னுடைய கல் மனதிலும் உன் பாதாம்புயம் தோன்றிவிட்டதே என்ற ஆச்சர்யமும், பெருமிதமும் இறும்பூதும் கொண்டல்லவா பாடுகிறூர்.

மாணிக்கவாசகர் இதே நிலையில் கூறுவதைக் கேளுங்கள். பல இடங்களில், " தகுதியற்ற எனக்கு நீ அருள் பாலித்தாயே என்ன ஆச்சரியம்" என்று கூறியுள்ளார். சில உதாரணங்கள் :—

" கல்நார் உரித்த கனியே போற்றி,"

" கல்நார் உரித்தன்ன என்னையும் தன் கருணையினுல் — —
— — ஆண்டபின் ",

" கல்நார் உரித்தென்னை ஆண்டுகொண்டான் ",

" கல்நெஞ்சம் சுருக்கிக் கருணையினுல் ஆண்டு கொண்டான்"

" கல்லை மென் கனியாக்கும் விச்சைகொண்
டென்னை நின் கழற் கன்பனுக்கினுய் ",

" கல்லா மனத்துக் கடைப்பட்ட நாயேனை
வல்லாளன் தென்னன் பெருந்துறையான் பிச்சேற்றிக்
கல்லைப் பிசைந்து கனியாக்கித் தன்கருணை
வெள்ளத் தழுத்தி,"

இவ்வாறு தனது தகுதியின்மையையும் ஆண்டவனது கருணையையும் ஒப்பிட்டு, "நாய்ச்சிவிகை ஏற்றுவித்த" விந்தையை நினைந்து பாடும் பாடல்கள் போன்றது இப் பாடலும். கந்தரலங்காரத்திலும் "பேற்றைத்தவஞ் சற்று மில்லாத என்னை ப்ரபஞ்சமென்னும் சேற்றைக்கழிய விட்டவா" என்று வியந்து ஓதுகின்றார்.

ஆகத் தனது கல் மனதில் முருகனின் பாதபங்கயம் அரும்பாதே என்று வருந்தவில்லை. அரும்பிவிட்டதே என்று மகிழ்கின்றார். இது அடுத்த இரண்டு வரிகளின் உள் பொருள் அறிந்தால் புரியும. அவை "பணியாவென வள்ளிபதம் பணியும் தணியா அதிமோக தயாபரன்" என்பது. "வள்ளி பதம்" என்பது கூர்ந்து கவனிக்கத்தக்கது. அது பாதம் என்பது பதம் என்று குறுகிற்று என்பதுதான் சாமானிய உரை. 'பதம்" என்பதற்கு நிலை, பக்குவம், புதவி என்ற பொருள்களும் உண்டு. வள்ளி நாச்சியாரைப் பல கோணங் களிலிருந்து ஆராய்தல் அவசியம். முருகன் சென்று வள்ளியை விவாகம் புரிந்துகொண்டதைச் சுருங்கச் சொன்னால் சிவஞான போத எட்டாம சூத்திரப்படி பரிபக்குவ ஆனமாவை இறைவனே குருநாதனாகச் சென்று ஆட்கொள்கிறான் என்ற தத்துவத்தின் உருவாகும். அவள் "ஐமபுல வேடரில் அயர்ந்தனை" என்றாற்போல் ஐந்து சகோதரர்களை உடையவள். மனம் என்னும் தத்துவத்தைத் தகப்பனாக உடையவள். அவள் அவ்வாறு இருந்தும குறிஞ்சிக்கடவு ளாகிய முருகன்மீது பெருங்காதல கொண்டு அவனையே காதலனாக அடையத்தவமிருந்தவள். "பெரும்பைம்புனத்தில் சிற்றேனல் காக்கின்றபேதை" ஆன்மாக்களின் பரிபக்குவ நிலையறிந்து தானே சென்று ஆட்கொள்ளும் தயாபரன் முருகன்.

ஆயின் "வள்ளி பதம் பணியும்" என்பது என்ன? ஈண்டு ஒரு பிரச்னோத்தரம் செய்துகொள்வோம். இறைவனை அடைவது ஆன்மாவுக்குப் பேறா அல்லது ஆன்மாவை அடைவது இறைவனுக்குப் பேறா? சாதாரணமாய் இறைவனை அடைவது ஆன்மாவுக்குத்தான் பேறு என்று தான் கருதுவோம். ஆனால் இறைவனும் பரிபக்குவ ஆன்மா தன்னை அடையவேண்டும் என்று ஆவலுடன் இருக்கிறான். பரிபக்குவ ஆன்மா கிடைப்பது துர்லபம் என்று கீதையில்

பகவான் கூறுகின்ருர். (7–19) அவ்வாறு கிடைத்தற்கரிய ஓர் பக்குவ ஆன்மா தனக்குக் கிடைத்துவிட்டால் பரமாத்மாவும் அதிக சந்துஷ்டி அடைகிருன். அத்தகைய ஆன்மாக்களைத் தன் வயமாக்க விழைகிருன். அவர்களுக்காக அவன் எதையும் செய்யச் சித்தமாக இருக்கிருன். பிட்டுக்கு மண் சுமந்தான், பிரம்பால் அடிபட்டான், வில்லால் அடிபட்டான். விறகு சுமந்தான். மேலும் இறைவன் பிக்ஷை எடுக்கிருன் என்பதின் கருத்து என்ன? அவன் கேட்பது ஆன்ம பிக்ஷையல்லவா? ஆக பக்குவ ஆன்மா ஒன்று தனக்குக் கிட்டிவிட்டால் அதைத் தன் வயமாக்கி ஆட்கொள்ள எதையும் செய்ய சித்தமாயிருக்கிறவன் பாதம் பணிவதுதாஞ ஆச்சரியம்! பதம் என்றதைப் பரிபக்குவம் என்று கொண்டால், பக்குவம் அடைந்த ஆன்மாவின் நிலைக்குத் தகுந்தபடி தன் நிலையை விட்டுக் கீழிறங்கி வந்து ஆட்கொள்கிருனல்லவா? இதுதான் அவன் பணிவு. கருணையால் ஏற்பட்ட பணிவு. ஆன்மாவை அடைவதில் அதிகக்காதல் கொண்டவனுய் தன் கருணையின் காரணத்தால் தன் நிலையிலிருந்து கீழிறங்குவதை "வள்ளி பதம் பணியும் அதிமோக தயாபரன்" என்ருர். இப்பொருள் சித்தாந்த சாஸ்திரக்கண்ணேடு பார்த்ததால் உண்டானது.

இன்னொரு விதமாகவும் பார்ப்போம். வள்ளியம்மை இச்சாசக்தி. இறைவன் சக்தியின் அதிஷ்டானத்தாலேயே தொழிற்படுகின்ருன் என்பது ஆன்றோர் கண்ட உண்மை, திருமூலர் சக்தியை இறைவனுக்குத் தாயாகவும், மகளாகவும், மனைவியாகவும் கூறிப்போந்தார். மாணிக்கவாசகர் சக்திக்கு இறைவன், "கேள்வன், மகன், தகப்பன், தமையன்", என்ற நான்கு முறைமைகளைக் கூறுகின்ருர். சக்தியின்றி சிவமில்லை என்பது சித்தியார் வாக்கு. ஆக அவளாலேயே தொழில்படும் இறைவன், சக்தியை "இன்னும் என்ன செய்யவேண்டும்" என்று பணிவதில் சிவசக்தி தத்துவத்தையே விளக்கும்.

மூன்ருவதாக அகப்பொருட்டுரையில் எடுத்துக் கொண்டால் தலைவனும் தலைவியும் ஏகாந்தமாய் இருக்கும் போது ஊடல் நிகழ அவ்வூடலைத் தவிர்க்கத் தலைவன் தலைவியின் பாதம் பணிவது சம்பிரதாயமாக ஒப்புக்கொள்ளப் பட்டிருக்கின்றது. ஜயதேவர் என்ற வடமொழி அருட்கவி தமது கீத கோவிந்த பிரபந்தத்தில் ஊடல் தணிப்பதற்காக கிருஷ்ணன் ராதையைப் பார்த்து 'ராதே! நான் உன்மீது

கொண்ட வேட்கை தீர உன் குளிர்ச்சியான பாதங்களை என் தலையில் சூட்டு'' என்று சொன்னதாக எழுதிவிட்டார். அது தவறு என்று எண்ணி அதைத் திருத்த முயன்ருர். கிருஷ்ணனே அதைத் தடுத்துவிட்டார் என்ற ஓர் வரலாற்றையும் பார்க்கிறோம். ஆக இம்மூன்று வகையிலும் வள்ளி பதம் பணிதலைப் பார்த்தோம். அதாவது

(1) பக்குவ ஆன்மா கிடைப்பதில் இறைவனே மகிழ்ச்சி அடைகிருன். அதற்காகத் தன் மேல் நிலையையும் விட்டுக் கீழ்நிலைக்கு இறங்க சித்தமாயிருக்கிருன் என்பது. ஒன்று

(2) மற்ருென்று சக்தியினுலேயே சிவம் தொழில்படும். ஆதலால் சக்தியின் ஆணையை சிவன் எதிர்பார்த்து பணிந்து நிற்கிருன் என்பது.

(3) தலைவன் தலைவி என்ற முறையில் ஊடலைத் தணிக்க இவ்வாறு பணிகிருன் என்பது மூன்ருவது.

இப்பொழுது இவ்வீற்றடிக்கும் முந்தின இரண்டடிகளுக்கும் உள்ள சம்பந்தம் என்ன? பக்குவ ஆன்மாக்களை நீயே சென்று ஆட்கொள்வது உன் கருணைத்திறம். அக்கருணைத் திறத்தால் கல்நெஞ்சக் கள்வனை என்னையும் பொருட்படுத்தி என் கல்நெஞ்சிலும் உன் பாதமலர் அரும்புமாறு கருணை புரிந்தாயே! உன் கருணைக்குத்தான் எல்லை உண்டா?, என்று பெருமிதம் கொண்டு பாடுகிருர். ஆதலால் மேற்சொன்ன மூன்று பாவங்களில் வள்ளிநாயகியை பக்குவ முதிர்ந்த ஆன்மா என்ற பொருளில் கொள்வதுதான் சிறந்ததாகப் படுகின்றது.

வள்ளி பதம் என்பது பக்குவ முதிர்ந்த ஆன்ம நிலை. அதை ஆட்கொள்ளத் தன் மேல்நிலைமையையும் விட்டு வேடனையும் விருத்தனையும், சென்று அவளைச் சோதித்து ஆட்கொள்ளுகிருன். அதிமோகம் என்பது பக்குவ ஆன்மாவை தன்வயமாக விழையும் ஆர்வத்தைக் காட்டுகின்றது. ஆன்மா இறைவனைத் தேடுவது ஒன்று. இறைவன் ஆன்மாவைத் தேடுவது மற்ருென்று. ஆக இறைவனை அடைதல் ஆன்மாவுக்கு எவ்வளவு பெற்றியோ அதுபோல ஆன்மாவை அடைதல் இறைவனுக்கும் பெற்றி என்ற ஓர் அருங்கருத்து. இப்பாடலில் தொனிக்கின்றது. அத்தகைய எல்லையற்ற

கருணையினால் கல்லும் கசிந்து கனியாகின்றது. கல்மீதும் தாமரை உதிக்கின்றது. ஆக இப்பாடல் இறைவனின் அவ்யாஜமான கருணையைக் காட்டி நிற்கின்றது. நடக்காத தொன்று நடந்துவிட்டால் இப்படியும் நடக்குமோ என்று ஆச்சர்யப்படுவதுபோல திணியான மனோசிலைமீது முருகனது அணியாரரவிந்தம் அரும்புவதை அனுபவித்த அருணகிரியார் ஆச்சர்யத்தில் ஆழ்ந்து இறும்பூதெய்தி மட்டில்லா மகிழ்ச்சியால் மலர்கின்றார்.

சில பதிப்புக்களில் இப்பாட்டிற்குக் கொடுக்கப்பட்டிருக்கும் தலைப்பு மிகக் கீழ்க்கடையானது. அதை நம்பி ஏமாறாதீர்கள். இத்தலைப்பின் இருள் பாட்டின் பொருளை மறைத்துவிட்டது.

## ஏழாவது பாட்டு

கெடுவாய் மனனே கதிகேள் கரவா
திடுவாய் வடிவே லிறைதாள் நினைவாய்
சுடுவாய் நெடுவே தனைதூள் படவே
விடுவாய் விடுவாய் வினையா வையுமே

### பதவுரை

கெடுவாய் — கெட்டுப்போகின்ற, மனனே — மனமே, கதி — உய்யும் வழி, கேள் — கேட்பாயாக, கரவாது — ஒளியாமல், மறைக்காமல், இடுவாய் — தானம் செய்வாய், வடிவேல் இறை — அழகிய வேலாயுதத்தையுடைய கடவுளான முருகனது, தாள் — திருப்பாதங்களை, நினைவாய் — தியானிப்பாயாக, நெடுவேதனை — நீண்ட துன்பம், தூள் பட — அழிந்துபோகும்படி, சுடுவாய் — சுட்டெரிப்பாய், வினை யாவையும் — எல்லா வினைகளையும், விடுவாய் விடுவாய் — விட்டொழிக்கக் கடவாய்.

குறிப்பு:— இது சாதாரண பதவுரை. இதன் பிண்டப் பொழிப்புரை:—

ஐம்புலனால் ஈர்க்கப்பட்டுக் கெட்டு அலைகின்ற மனமே! உய்யும் வகை சொல்லுகிறேன் கேள். முருகனுடைய உபாஸனை தியானத்தால் நெடுவேதனையாகிய பிறவிச் சுழல்

அறியும்படி கர்மங்களை விட்டுவிடுவாய். கர்மா தொலைவதினால் பிறவி அறும். பிறவி அறுவதற்காக கர்மாவை விட வேண்டும்.

நெடுவேதனை தூள்படவே, என்பதை தூள்படுவதற்காக என்று பொருள் கொண்டோம். தாள் நினைவாய் என்பதை முருகனுடைய திருவடி தியானம் அல்லது உபாஸனையால் என்றோம். நினைவாய் என்றதால் எப்போதும் அத்தாளினையே சிந்தித்தல் வேண்டும், "இமைப் பொழுதும் என் நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க" என்றபடி

நெடுவேதனை என்பதை, தாபத்ரயம் என்று பொருள் கொள்கின்றனர் சில உரையாசிரியர்கள். ஆதி தெய்விகம், ஆதி பௌதிகம், ஆதி ஆத்மிகம் என்பன. அதாவது தெய்வத்தால் வருவது, பிற உயிர்பற்றி வருவது, தன் சுயங்கிருதமாக வருவது என்ற துன்பங்கள் இவைகளைச் சுடுவாய் என்று பொருள் கொள்கின்றனர். தாபத்ரயம் ஆன்மாக்களை அனாதியாகப் பற்றியிருப்பவை. அவையும் வினைப்பயனால் வருபவை தான். வினை அறுந்தால் தாபத்ரயமும் ஒழியும். ஆக, விடுவாய் விடுவாய் வினையாவையுமே எதற்காக? நெடுவேதனை தூள்படுவதற்காக, வினையை விடு, சுடுவாய், நெடுவேதனை தூள்படும்படி சுடு, அது வினையை விட்டால் ஒழியும்.

விடுவாய், விடுவாய் என்று இரட்டித்தது ஏன்? கர்மா செய்யாமல் இருப்பது ஒன்று. அதன்பலனை எதிர்பார்க்காமலிருப்பது மற்றொன்று. ஆக கர்மா செய்வதைவிடு. ஆனால் தேகத்தோடு இருக்கும் உயிர் கர்மா செய்யாமலிருக்க முடியாது. சிலவற்றைத்தான் செய்யாதிருக்கலாம் செய்ய வேண்டியவற்றையும், செய்ய முடியாமலிருக்க முடியாதவற்றையும், செய்யும் அவற்றின் பயனைக் கருதாது செய். நிஷ்காமிய கர்மாவிற்கு வினைப்பயன் கிடையாது. இது கிருஷ்ணபகவான் கீதையில் சொல்லிய சரம சுலோகத்தை நினைவூட்டுகிறது. வினையாவையுமே என்றதால் நல்வினை தீவினை இரண்டையுமே விடச்சொன்னார். அதுபோல கீதையில்,

"ஸர்வ தர்மாங் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ"
இங்கேயும் முருகனையே பற்றிக்கொண்டு ஸர்வவினைகளையும் விடு என்கின்றார். அப்படி விடுவதனால் என்ன ஆகும்? நெடு

வேதனையாகிய பிறவி நீங்கும், அல்லது சில உரையாசிரியர்கள் கூறுவதுபோல தாபத்ரயங்கள் சுடப்படும். நெடுவேதனை என்பதை நீண்ட வேதனை என்று பிறந்து பிறந்து இறந்து இறந்து உழலும் வேதனையைக் குறிப்பதாகக் கொள்ளுதல் தான் உசிதம். தாபத்ரயம் போவதைக்காட்டிலும் பிறவி தொலைவது மிக மேம்பட்ட பலனல்லவா? முருக உபாஸனையால் க்ஷுத்ர பலமான தாபத்ரய நீக்கமாகிற இம்மைப் பயன் மட்டுமா அகலும்!

இந்தப் பாட்டிற்கும் மணிவாசகர் திருவாசகப் பாடலுக்கும் மிகத் தொடர்பு உண்டு. அதே கருத்து, அதே சொற்கள்.

"வாழ்கின்றாய் வாழாதநெஞ்சமே வல்வினைப்பட்டு
ஆழ்கின்றாய் ஆழாமற்காப்பானை ஏத்தாதே
சூழ்கின்றாய் கேடு உனக்குச் சொல்லுகின்றேன்
பலகாலும்
வீழ்கின்றாய் நீ அவலக்கடலாய வெள்ளத்தே-"

வாழாத நெஞ்சமே = பேரின்ப வாழ்க்கையில் ஈடுபடாத மனமே, வாழ்கின்றாய் = பிரபஞ்சத்தில் இன்னும் உயிர் வைத்துக்கொண்டு திரிகிறாயே, வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய்= வலிய தீவினைப்பட்டு அதனுள்ளே ஆழ்கின்றாய், ஆழாமற் காப்பானை ஏத்தாது = அங்ஙனம் அழுந்தாமற் காப்பாற்றும் இறைவனைப் புகழ்ந்து பாராட்டாமல், உனக்குக் கேடு சூழ்கின்றாய் = உனக்கு நீயே கேடு தேடிக்கொள்கிறாய், பலகாலும் உனக்குச் சொல்கின்றேன் = உனக்குப் பலமுறை இடித்துக் கூறி வருகிறேன், அவலக் கடலாய வெள்ளத்து = துன்பம் ஆகின்ற கடல் வெள்ளத்தில், வீழ்கின்றாய்=நீ விழுந்து மூழ்கின்றாய்.

அதே கருத்து, அதே சொற்கள், என்ன ஒற்றுமை!

வாழாத நெஞ்சமே = கெடுவாய் மனனே
வல்வினை = நெடுவேதனை
சொல்கின்றேன் = கதிகேள்

ஆன்மாவானது அழியாத பேரின்பத்தில் தலைப்பட்டு உய்தற்கும் - சிற்றின்பத்தில் அழுந்திக்கெடுவதற்கும் மனமே காரணம். இத்தகைய நெஞ்சம் தம் வயப்படாது அலைவதைத்

நினைத்து கெடுவாய் மனமே என்றும், வாழாத நெஞ்சமே என்றும் இரு பெருந்தகைகளும் கூறினர்.

இன்னும் நீ வாழ்கின்றாயே! என்றார். இங்கு நீ இறக்கவில்லையே என்று இரங்குகின்றார். அநாத்ம விருத்திகளில் வீழ்ந்து ஏதோ வாழ்வதாக நீ நினைத்துக்கொண்டிருக்கிறாய். உண்மையில் நீ கெட்டுத்தான் போகின்றாய். அதை அறியவில்லையே.

வினை என்பது வல்வினை என்றும் மெல்வினை என்றும் இரண்டு வகை. அறம் பாவம் என்னும் அருங்கயிற்றால் கட்டி என்றதில் இது இரண்டும் கூறுகின்றார். வல்வினைப் பட்டு என்பதனால் மெல்வினையை விட்டு என்று வருவித்துக் கொள்ளலாம். ஆனால் அருணகிரியார் இன்னும் ஒரு படி மேலே போகின்றார்.

விடுவாய் விடுவாய் வினையாவையுமே. அது வல்வினையானாலும் சரி, மெல்வினையானாலும் சரி, அவை பயன்தரும் வரை பிறப்புண்டு. இந்தப் பிறப்பு இறப்பு என்ற சுழலைத்தான் நெடுவேதனை என்பார். இது கீதா வாக்கியத்திற்கு ஒத்து வருகின்றது.

"ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வரஜ!
அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மாஶுச:"

என்றபடி பிறவி அறவேண்டுமானால் பாபம், புண்ணியம் என்ற இரண்டையுமே விடவேண்டும். அதாவது புண்ணியம் செய்யுங்காலத்தில் அதன் பயனைக் கருதாது செய்வதும், பாபத்தைச் செய்யாமலே இருப்பதும் என இரண்டு. ஆக இது சரம சுலோகம் போன்று, பந்தத்தையும் கூறி, அது விலக உபாயத்தையும் கூறிற்று.

பந்தம் விலகி மோக்ஷம் தருபவன் இறைவன் என்பதை இம்மூன்று சுருதிகளிலும் கூறியிருப்பது காண்க. மாணிக்கவாசகர் கூறுகின்றார் "ஆழாமற்காப்பானை ஏத்து" என்று, அருணகிரியார் கூறினார் "வடிவேலிறைதாள் நினை," கீதை "மாமேகம் சரணம் வ்ரஜ" என்றது. என்ன ஒற்றுமை! மாணிக்கவாசகர் ஒரே உபாயத்தைக்கூறினார். அருணகிரி மூன்று சாதனைகளைக் கூறுகிறார்.

1. கரவாது இடு. 2. வடிவேல் இறைதாள் நினை 3. விடுவாய் வினையாவையுமே. கீதை இரண்டைக் கூறுகிறது. 1. ஸர்வதர்மான் பரித்யஜ்ய 2. மாமேகம் சரணம் வ்ரஜ.

கரவாதிடுதல் அருணகிரியாரின் பல பாடல்களில் அழுத்தமாகக் கூறப்படுகின்றது. ஈண்டு கரவாது இடுதல் மெல்வினை தானே. வினையாவையும் விடு என்றதால் முரணாகாதோ என்றால் முன் கூறியபடி மெல்வினை செய்யும்போது பலன் கருதாது செய்தலும் வல்வினையைச் செய்யாதிருத்தலும், ஆக இரண்டும் கூறப்படுவதால் கரவாது இடு என்புழி அதன் பலனைக் கருதாது செய் என்றார்.

ஏசுநாதர் மிகச் சுருக்கமாகக் கூறிவிட்டார்.

"Let not thy left hand know
What thy right hand doeth" என்று

வேதனை தூள்படச் சுடுவாய் :—

பிறப்பு இறப்பு என்ற நீண்ட துன்பம் முழுதும் அற்றுப் போகும்படி சுடுவாய் அதாவது சுடலாம், சுடமுடியும் என்று கொள்ளல்வேண்டும். சுடுவாய் என்பதை முன்னிலை ஏவலாகக் கொள்ளலாகாது. அது எதிர்கால வியங்கோள் வினைமுற்று. வினையை விட்டால் சுடலாம் என்றபடி.

கரவாது இடுவதும், இருதாள் நினைவதும் வினையாவும் விடுதலும் சாதனங்கள். பலன் நெடுவேதனை கெடுதல். கெடுவாய் மனனே! என்பதை மனமே இவ்வாறு செய்யாவிடில் நீ கெட்டுப்போவாய் என்ற பொருளிலும் கொள்ளலாம்.

கந்தரலங்கார மேற்கோள் செய்யுள் :- பல பாடல்களில் தானம் இடுவதை வற்புறுத்திக் கூறியிருக்கிறார். குறிப்பாய் இந்தப்பாட்டின் விரிவுரைபோல் அமைந்ததொன்று ஈண்டு கூறுவாம்.

" தடுங்கோள் மனத்தை, விடுங்கோள் வெகுளியைத்
தானமென்றும்
இடுங்கோள் இருந்தபடி இருங்கோள் எழு பாருமுய்யக்
கொடுங்கோபச்சூருடன் குன்றம் திறக்கத் துளைக்கைவேல்
விடுங்கோன் அருள் வந்து தானே உமக்கு வெளிப்படுமே."

(இருந்தபடி இருத்தல் — இருவினை ஒப்பு)

## எட்டாவது பாட்டு

அமரும் பதிகேள் அகமாமெனுமிப்
பிமரம் கெட மெய்ப் பொருள் பேசியவா
குமரன் கிரிராச குமாரி மகன்
சமரம் பொரு தானவ நாசகனே.

### பதவுரை

அமரும்பதி—வசிக்கின்ற ஊர், கேள்—சுற்றம், அகம்—சரீரம், ஆம் எனும்—இவை என்ற, பிமரம்—பிரமை, மயக்கம் (பிரமம் என்ற வடமொழிச்சொல்லின் திரிபு), கெட—அழிய மெய்ப்பொருள்—நிலையான பொருளை, பிரம்மஞானத்தை, உண்மைப்பொருளை, பேசியவா—உபதேசித்த விதத்தை, (என் சொல்லேன் ?) குமரன்—என்றும் இளையோன், கிரிராச குமாரி—பர்வதராஜனாகிய ஹிமவானின் புத்ரியாகிய பார்வதி தேவியாரின், மகன்—குமாரன், சமரம் பொரு—சண்டையிட்டு தானவ நாசகனே—அசுரரை அழித்தவனே.

என்றும் இளமையோடு இருப்பவனே ! பார்வதி தேவியாரின் திருக்குமாரனே ! போரில் சூரரை அழித்தவனே, என் ஊர், என் சுற்றம், என் சரீரம் என்ற மயக்கம் ஒழியும்படி பிரம்மஞானத்தை உபதேசித்தருளிய விதத்தை என்னென்று சொல்லுவேன் ! என்று

முந்தின ஐந்தாவது பாட்டில் அகம் ஆடை மடந்தையர் என்றயரும் சகமாயை கண்டும், என் ஊர், என் சுற்றம், என் சரீரம் என்று வேறு விதமாகச் சொல்லி, அங்கு அஷ்டாதச வித்தைகளை நீயருளியும் அவை நீங்காது இருந்த எனக்கு நீயே குருநாதனாக உபதேசம் செய்ததால் அந்த சகமாயை அகன்றதை இந்தப் பாட்டில் கூறுகின்றார்.

மாணிக்கவாசகருக்கு சிவபெருமான் குருந்த மரத்தடியில் இருந்து உபதேசம் செய்தான். அதனால் அவர் உலக மாயையினின்று விடுதலை அடைந்தார். அதுபோல் அருணகிரியாருக்கு கோபுர வாசலில் உபதேசம் செய்தார் முருகன். அதனால் அவருக்கும் உலகமாயை அகன்றது. இருவர் அனுபவத்தையும் ஒப்பு நோக்கப் பயனளிக்கும்.

"வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வியென்னும்
பித்த வுலகிற் பிறப்போடிறப் பென்னும்
சித்த விகாரக்கலக்கம் தெளிவித்த
வித்தகத்தேவர்க்கே சென்றூதாய்க்கோத்தும்பீ."

இதனையே அருணகிரியார் பலவாகப் பிரித்து பலபாடல் களில் கூறுகின்றார். 'அகம் ஆடை மடந்தையர்' என்றும், 'அமரும் பதிகேள் அகமாமெனும் பிமரம்' என்றும் பின்னும் பலவாகக் கூறினார்.

அவ்வாறு உபதேசித்த குருநாதனாகிய முருகன் எத் தகையன்? அவன் என்றும் இளமையோடு இருப்பவன், அழியாதவன். சாச்வதமான தன்மை உடையவனாலேயே சாச்வதமான பொருள் உணர்த்தமுடியும். அகளமாயிருக்கும் சிவம் சக்தியின் சேர்க்கையால் சகளமாய் விரிந்து உருக் கொண்டது. உருக்கொண்ட குருவாலேயே உபதேசம் செய்ய இயலும். அருவமாயிருக்கும் ஒன்று தன்முன் உருவந்தாங்கி உபதேசித்தாலும் அவ்வாறு உருவம் தாங்குவது பராசக்தியின் செயலாதலாலும் இங்கு முருகனை பார்வதி புத்ரன் என்றார். "அத்ரிஜா சுதன்" என்கிறது சஹஸ்ர நாமம். "பார்வதீ ப்ரியநந்தனன்" என்கின்றது அஷ்டோத்தரம். முருகன் பார்வதி தேவியின் கர்ப்பத்தில் தங்கிப் பிறக்கவில்லை. ஆயினும் அவள் புத்ரன் என்பது எதனால் எனில் அருவமாகிய பிரம்மம் சக்தியின் ஸம்பந்தத்தாலேயே உருவமாய் வரும் என்ற சுருதி -பிரமாணத்தால் அவ்வாறு உருவாக வந்த பிரம்மத்தை பார்வதீ புத்ரன் என்று கூறியதாகக் கொள்ள வேண்டும். தானே தனக்கு மகனாகிய தத்துவன் சிவபெருமான்.

மும்மல சொருபமான சூரரை அழித்தவனே நமது மலங் களையும் அழிக்கவல்லவன். ஆக தானே மெய்ப்பொருளா யிருப்பவனும், கருணையினால் உருவத்திருமேனி கொண்ட வனும், மும்மலச் சூரரை அழித்தவனுமாகிய முருகன் உபதேசித்தருளியதால் என்னைப்பற்றியிருந்த என் ஊர், என் சுற்றம், என் சரீரம் என்ற மயக்கம் தெளியப்பெற்றேன். இது விந்தையே! அதைச் சொல்லவும் முடியாது. ஏனெனில் அனாதியாய் ஆன்மாவைப்பற்றியிருக்கும் மும்மலங்கள் ஒழிவதென்றால் அது சொல்லொணாத ஆச்சரியமல்லவா!

கந்தரலங்கார மேற்கோள் பாடல்,

"நீயான ஞான விநோதந்தனை யென்று நீ யருள்வாய்
சேயான வேற் கந்தனே செந்திலாய் சித்ர மாதரல்குற்
றோயா வுருகிப் பருகிப் பெருகித் துவளுமிந்த
மாயா விநோத மனோதுக்க மானது மாய்வதற்கே"

## ஒன்பதாம் பாட்டு

மட்டூர் குழன் மங்கையர் மையல் வலைப்
பட்டூசல் படும் பரிசென் றொழிவேன்
தட்டூடற வேல் சயிலத் தெறியும்
நிட்டூர நிராகுல நிர்ப்பயனே.

ஊடு தட்டு அற—இடையிலே தோன்றும் தடைகள் யாவும் நீங்க, சயிலத்து—கிரௌஞ்ச மலைமீது, வேல் எறியும்—வேலை ஏவி அழித்தவனே, நிட்டூர—கோபக்காரனே, நிராகுல—துன்பம் இல்லாதவனே, நிர்ப்பயனே—பயமில்லாதவனே, மட்டு ஊர் குழல்—தேனூருகின்ற (மலர்களை அணிந்த) கூந்தலையுடைய, மங்கையர்—பெண்கள் மீது கொண்ட, மையல்—ஆசை, வலைப்பட்டு—வலையில் சிக்கி, ஊசல்படும்—ஊஞ்சல்போல் அலையும், பரிசு—வியாபகத்தை என்றொழிவேன்—என்று விடப்பெறுவேன்.

### விரிவுரை

மட்டு என்பது தேன், கள், என்ற பொருளில் வந்தது. கள் போன்று போதையை மயக்கத்தைத்தரும் கூந்தல் எனினுமாம். மட்டூர் என்பதை மனம் ஊருகின்ற எனச்சில உரைகள் கூறியிருக்கின்றன. மங்கையர் பொதுவாய்ப் பெண்களையும், சிறப்பாய் பதிமூன்று வயதுப்பெண்களையும் குறித்து நிற்கும். ஊசல்படுவது: போவதும் வருவதுமாய் அலைவது. மனமானது மங்கையர் மீது கொண்ட காமத்தால் உழலும் செய்கையைக் குறித்து நின்றது. பரிசு—படர் என்றும் பாடம்.

தட்டு ஊடு அற, என்பதில் மலையின் அடுக்கான தட்டுகள் ஊடுருவிப்போகும்படி என்று ஓர் உரை கூறுகின்றது. தாரகாசுரனைக் கொல்வதற்கு இடையே தடையாக நின்றது

கிரௌஞ்சம். ஆகையால் ஊடே தடையாய் நின்ற மலையாகிய இடையூற்றை வேலால் அடித்தவன் என்பது பொருத்தம். கிரௌஞ்சம் பொன்னிற முடையது. "சொன்ன கிரௌஞ்ச" மென அருணகிரியார் பிறிதோரிடத்தில் குறிப்பிடுகின்றார். மலையாகிய மாயையை அழித்தவன். அது சூர ஸம்ஹாரத் துக்குத் தடையாய் நின்றது. அதாவது மும்மல நாசத்திற்குத் தடையாய் நின்றது. அதை ஞானசக்தியான வேலால் அழித்தான். இங்கு மங்கையர்மீது காதல் ஆன்ம முன்னேற்றத் திற்குத் தடையாய் நின்றது பொன்மயமான நிறத்தாலும் மயக்கத்தைக்கொடுக்கும் கூந்தலாலும் மாயாசொரூபமான கிரௌஞ்ச மங்கையர்மீது கொண்ட மோகத்துக்கு உபமானம் போல வைத்து அதனை அழித்த வேலனே என் மயக்கத்தையும் தீர்க்கவேண்டுமென்கிறார்.

அநுபூதிப்பாடல்களிலும் மங்கையர் ஆசையைப்பற்றி சில பாடல்கள் காணப்படுகின்றன. முன்பு 4வது பாடலில் "வளைப்பட்ட கைமாதர்" என்றும் 5-வது பாடலில் 'அகம் ஆடை மடந்தையர்" என்றும் பின்னால் 24வது பாடலில் "கூர்வேல் விழி மங்கையர்" என்றும் 34வது பாடலில் "சிங்கார மடந்தையர்" என்றும் திரும்பத் திரும்பக் கூறு கின்றார். திருப்புகழ் பாடல்களில் மாதர்களைப் பற்றிய பிரஸ்தாபம் வருகின்றது. கந்தரலங்காரத்திலும் அப்படியே. தான் பெண்கள் வலையில் சிக்கி உழன்று, நோய், தரித்திரம் முதலிய தசைகளையும் அதன் காரணமாக அடைந்து, அவதிப் பட்டவராகையினாலே இந்தக் கருத்து அடிக்கடி அவரால் வலியுறுத்தப்படுகின்றது. மேலும் "மூவேடணை"கள் என்ற மண், பெண் பொன் என்ற ஆசைகளிலே பெண்ணாசையே மிகப் பொல்லாதது. அது நினைத்தாலும் சுடுவது. சொப்பனத் திலும் அதன் வேகம் குறைவதில்லை. மேலும் அருணகிரியார் கந்தரலங்காரப் பாடலொன்றில் கூறுவது போல துறந்தோர் உள்ளத்தையும் வளைத்துப் பிடித்துப் பதைக்கப் பதைக்க வதைக்கும் இயல்புடையவர் மாதர். புராணாந்தரங்களிலே மங்கையர் மோகத்தால் கெட்டவர்கள் கணக்கிறந்தவர். விச்வாமித்திரர், காச்யபர், ரிச்ய சிருங்கர் போன்ற தபோ தனர்களும் அதற்கு இலக்காகி இருக்கின்றனர். ஆதலால் இந்த ஒரு விஷயத்தில் யாவரும் ஸர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டுமென்று வலியுறுத்தவே அருணகிரியார் திரும்பத்

திரும்ப மாதர் மீது கொள்ளும் மோகத்தைப் பற்றிக் கூறுகின்றார். ஆயினும் அருணகிரியார் முருகனின் உபதேசம் பெற்றபின் அவர் இவ்வாறு அவஸ்தைப்பட்டார் என்று நினைத்துவிடக்கூடாது. தான் பெண்ணாசையை வென்று விட்ட விஷயத்தை கந்தரலங்கார ஓர் ஒப்பற்ற சிலேடையணிப் பாடல் ஒன்றில் அழுத்தமாகக் கூறுகின்றார்.

"கடத்திற் குறத்தி பிரானருளாற் கலங்காத சித்தத்
திடத்திற் புணையென யான்கடந்தேன் சித்ர மாதரல்குற்
படத்திற் கழுத்திற் பழுத்த செவ்வாயிற் பணையில் உந்தித்
தடத்திற் தனத்திற் கிடக்கும் வெங்காம சமுத்ரமே" —29

மாதருக்கும் ஸமுத்திரத்திற்கும் சிலேடை.

அல்குல் – கடற்பாம்பு
கழுத்து – சங்கு
வாய் – பவளம்
பணை – முத்து
உந்தி – சுழி
தனம் – மலை

மங்கையரின் தனம் ஆசையைப் பெருக்கும் அவயவம். அது மலையெனக்கொண்டு ஆன்ம வளர்ச்சிக்குத் தடையாய் இருப்பது. எப்படி கிரௌஞ்சமானது மும்மலநாசத்திற்குத் தடையாக வந்ததோ அதுபோன்று. அதை வேலினால் சங்கரித்தவனே நமது மயக்கத்தைத் தீர்க்க வல்லவன் என்ற குறிப்பு. கந்தரலங்காரத்தில் தன்னை மாதர் வலையினின்றும் விடுவிக்க வேண்டுமென்ற பிரார்த்தனை அடங்கிய பாடல்கள் சில உள்ளன.

"பந்தாடு மங்கையர் செங்கயல் பார்வையிற் பட்டுழலும்
சிந்தா குலந்தனைத் தீர்த்தருள்வாய் செய்யவேல் முருகா
கொந்தார் கடம்பு புடைசூழ் திருத்தணிக் குன்றினிற்கும்
கந்தா இளங்குமரா அமராவதி காவலனே" —79

## பத்தாம் பாட்டு

கார்மா மிசை காலன் வரிற் கலபத்
தேர்மா மிசை வந்தெதிரப் படுவாய்

**தார்மார்ப வலாரி தலாரி யெனும்**
**சூர்மா மடியத் தொடு வேலவனே**

பதவுரை

தார் மார்ப!—மாலை திகழும் திருமார்புடையவனே, வலாரி—வலன் என்ற சூரனை சம்ஹரித்த இந்திரனுடைய, தலாரி—தலமாகிற தேவலோகத்தை ஜெயித்தவன், எனும்—என்று பெயர் பெற்ற, சூர்மா—பத்மாசுரனாகிய மாமரம் அல்லது மாமரமாய் நின்ற சூரன், மடிய—இறக்க, தொடு வேலவனே—வேலை ஏவினவனே!, கார் மாமிசை—கரிய எருமைக்கடா மீது, காலன் வரின்—யமன் என் உயிரைக் கவ்வ வந்தால் (அந்தச் சமயத்தில்), கலபத்தேர் மாமிசை—கலபத்து+ஏர்+மா—தோகையுடைய அழகிய குதிரையாகிய மயிலின்மீது, வந்து எதிரப்படுவாய்—என் முன்னே வந்து தோன்றி தரிசனம் கொடுத்தருளவேண்டும்.

விரிவுரை

இது ஒரு விசேஷமான பாடல். தேஹ யாத்திரை முடியும் அந்திய காலத்தில் முருகன் வந்து தரிசனம் தரவேண்டு மென்று பிரார்த்திக்கிறார். இந்தமாதிரிப் பிரார்த்தனை திருப் புகழில் பல இடங்களில் காணப்படுகின்றது.

*" மங்கை யழுது விழவே யமபடர்கள் நின்று சருவ மலமே ஒழுக உயிர்*
*மங்கும் பொழுது கடிதே மயிலின் மிசை வரவேண்டும் "*

*" அந்தகனும் எனை அடர்ந்து வருகையில்*
*அஞ்சலெனு வலிய மயில் மேல்நீ*
*அந்த மறவியொடு கந்த மனிதன் நம*
*தன்பன் என மொழிய வருவாயே "*

இன்னும் பல்வேறு இடங்களிலும் இந்தப்பிரார்த்தனை யைப்பார்க்கிறோம்.

*கந்தரலங்காரப் பாடல் 80ல்*

*" மாகத்தை முட்டிவரு நெடுங்கூற்றன் வந்தால் என்முன்னே*
*தோகைப் புரவியிற் றோன்றி நிற்பாய் சுத்த நித்த முத்தித்*

*தியாகப் பொருப்பைத் த்ரிபுராந்தகனை த்ரயம்பகனைப்*
*பாகத்தில் வைக்கும் பரமகல்யாணி தன் பாலகனே,"*

என்றும் பாடியுள்ளார். இப்பாடலில் இருக்கும் விசேஷம்

"*த்ர்யம்பகம் யஜாமஹே ஸுகந்திம் புஷ்டி வர்த்தனம்*"

என்ற மிருத்யுஞ்ஜய மந்திரத்தில் வரும் த்ர்யம்பக நாமாவைப் பிரயோகித்திருப்பதும், ருத்ரத்தில் வரும்,

"*நமஸ்தே அஸ்து பகவன் விச்வேச்வராய மஹாதேவாய த்ரியம்பகாய, த்ரிபுராந்தகாய த்ரிகாக்னி காலாய காலாக்னி ருத்ராய நீலகண்டாய ம்ருத்யுஞ்ஜயாய ஸர்வேச்வராய ஸதா சிவாய ஸ்ரீ மன்மஹாதேவாய நம:*"

என்ற மந்திரத்தில் வரும் த்ர்யம்பகன், த்ரிபுராந்தகன் என்ற நாமாக்களை பிரயோகித்திருப்பதும் சிந்திக்கத்தகுந்தவை.

இப்பாடலை ஓர் ஜபகர்மாவாகக்கொண்டு அனுதினம் படுக்கப் போகுமுன் ஒரு முறை சொல்லிக்கொள்வது மிகச் சிறந்தது. இப்பாடலை தினம் மனனம் பண்ணிவருவதும் நல்லது. இதனால் பயனடைந்தோர் பலர்.

சில உரையாசிரியர்கள் கலபத்தேர்+மா+மிசை என்று பிரித்து, மயிலாகிய பெரிய தேர் என்று பொருள் கொண்டுமிருக்கின்றனர். ஆனால் கலபத்து+ஏர்+மா என்றுதான் பிரித்துப் பொருள், கொள்ளல்வேண்டும் மயிலாகிய அழகிய குதிரை என்பது பொருள்.

கந்தரலங்காரத்தில் தான் யமனை ஜெயித்துவிட்டதாயும், யமபயம் தமக்கு இல்லையென்றும், யமன் தன்னை ஒன்றும் செய்ய முடியாதென்றும் பாடிய பாடல்கள் ஏழு உள்ளன. அவை தனக்கு இனி பிறப்பில்லையாதலால் இறப்பும் இல்லை. பிறப்பு இறப்பு எனும் சுழியில் விழமாட்டேன் என்ற கருத்துக் கொண்டவை. இது, தான் இறக்கும் தருவாயில் காட்சி தர வேண்டுமென இறைஞ்சும்பாடல். அன்பர்கள் இந்த ஒரு பாட்டை அனுதினம் ஜபித்து வாருங்கள். உயிர் மங்கும் போது முருகன் கட்டாயம் வருவான். இது உண்மை. வெறும் ஏமாற்றுவித்தையல்ல. அடியேன் வாழ்க்கையிலே நடந்த ஓர் நிகழ்ச்சியால் இதனை இவ்வளவு துணிவாய் நிச்சயமாய்ச் சொல்லுகிறேன்.

கந்தரலங்காரத்தில் முன் சொன்ன 80வது பாட்டேயன்றி 50வது பாடலிலும் 65வது பாடலிலும் இதே பிரார்த்தனை இருக்கின்றது. கந்தரந்தாதி 41வது பாடலும் இத்தகையது. திருவகுப்பில் வேலைப்பற்றிக் கூறும்போது, ' தருக்கி நமன் முருக்க வரின், எருக்குமதி தரித்த முடிபடைத்த விறல் படைத்த இறைகழற்கு நிகராகும்'', என்றும்,

" முதலவினை முடிவிலிரு பிறை எயிறு கயிறுகொடு
முதுவடவை விழிசுழல, வருகால தூதர்கெட
மூடுகுவதும்'' என்று சீபாத வகுப்பிலும்,

" இறுகிய சிறுபிறை எயிறுடைய யமபடர்
எனதுயிர் கொளவரின், யான் ஏங்குதல்
கண்டு எதிர் தானேன்று கொளுங்குயில்''

என்று அம்பிகையை தேவேந்த்ர சங்க வகுப்பில் கூறியிருப்பதும் ஒப்புநோக்குக.

"தொடுவேலவன்'' வினைத்தொகை, இன்றும் சூர சம்ஹாரம் நடக்கிறது. அனாத்ம விருத்திகளே அசுரர். அவர்கள் அவன் வரம் பெற்று தேவர்களோடு பொருதனர். தேவர்கள் நல்ல சித்த விருத்திகள், அவர்களும் அவன் அருள் பெற்றே உய்ந்தனர்.

"மயில்வாஹனன்'' இதுவரை மயில் பிரணவ ஸ்வரூபம் என்றே கூறினோம். இங்கு ஒரு பொருள் கூறுகிறோம். சஹஸ்ரநாமத்தில் "சுத்த சித்தஸ்வரூப மயூராதிஷ்டானாய நம:'' என்று கூறப்பட்டிருக்கிறது. மூன்று மலங்களும் அற்று சுத்த நிலையடைந்தவருடைய அந்தக்கரணமே மயில் என்றும், அதற்கு அதிஷ்டானனே முருகன் என்றும் பொருள்.

## பதினோராம் பாட்டு

கூகா வென வென் கிளை கூடியழப்
போகா வகை மெய்ப் பொருள் பேசியவா
நாகாசல வேலவ நாலுகவித்
தியாகா சுரலோக சிகாமணியே.

## பதவுரை

நாகாசல வேல்வ = நாகாசலத்தில் எழுந்தருளியிருக்கும் வேலாயுதக்கடவுளே! நாலுகவித்தியாகா = நான்கு வகைக் கவிகளையும் பாடும் வல்லமையை அளித்தவனே! சுரலோக சிகாமணியே = தேவலோகத்தவர் தம் சென்னியில் சூடும் சூடாமணியே! (நீ என் மீது கருணை பாலித்து) என்கிளை = என் சுற்றத்தார், கூடி = கூட்டமாகச் சேர்ந்து, கூ கா வென் அழ = கே கே என்று சப்தமிட்டு அழ, போகா வகை = நான் இறந்து போகாத வகையாகிய, மெய்ப்பொருளை = உண்மைப் பொருளை உணர்த்தும் உபதேசத்தை, பேசிய = பேசியது, ஆ! = என்ன அற்புதம்.

## விரிவுரை

முன் பாட்டில் இறக்கும்போது முருகன் வரவேண்டு மென்று பிரார்த்தித்தார். இப்பாட்டில் நான் இறப்பை ஒழித்துவிட்டேன் என்கின்றார். நான் சாகமாட்டேன் என்கின்றார். அதாவது பிறந்தால் தானே சாவு. நான் இனி பிறக்கவும் மாட்டேன், இறக்கவும் மாட்டேன் என்கின்றார்.

அவிநாசித் திருப்புகழில்—

" இறவாமல் பிறவாமல் எனையாள் – சற்குருவாகி
பிறவாகித் திரமான பெருவாழ்வைத் – தருவாயே "

என்று கேட்பதை ஒப்பு நோக்குக.

கந்தரலங்காரத்தில் யமனை வெற்றிகொண்டதாக ஏழு பாடல்கள் இருப்பதோடு, பிரமனை விளித்து, 'எனக்கு மறு பிறப்பு கொடுப்பாயேல் உனக்கு முருகன் இன்னொரு விலங்கு பூட்டி விடுவான் என்று கூறுகின்றார் (89வது பாடல்). 31வது பாடலில் "பொக்கக் குடிலிற் புகுதா வகைப்புண்டரீகத்தினும் செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள்" என்று பிரார்த்திக்கிறார். முருகன் தன்னைத் தேற்றிய பின் காலன் என்னை என்ன செய்ய முடியும் என்று கேட்கின்றார் 69வது பாடலில்.

'நாகாசலம்' என்பது திருச்செங்கோடு. இதனை உரககிரி, உரக வெற்பு, கட்செவி வெற்பு, காளக்கிரி, சர்ப்பகிரி, நாககிரி, நாகமலை, பணிமலை என்று பல பெயர்களால் தமது

ருப்புகழில் பாடியுள்ளார். அவற்றில் "பத்தர் கணப்ரிய," எனத் தொடங்கும் பாட்டின் ஈற்றடியில், "மறைநூலின் தத்துவ தற்பர முற்றுமுணர்த்திய சர்ப்பகிரிபெருமாளே" என்பதால், செங்கோட்டு முருகன் அவருக்கு வேதத்தின் உட்பொருளை உணர்த்தியதாகக் கூறியிருப்பது சிந்திக்கற்பாலது. வேதத்தின் உட்பொருளாகிய மெய்ப்பொருளைத் தனக்கு ஈந்ததாகக் கூறுவதால் திருச்செங்கோட்டு முருகன் மெய்ப்பொருள் உபதேசம் செய்தார் என்று ஊகிக்கலாம். மேலும் கந்தரலங்காரம் 90வது பாடலில் 'செங்கோடனைக் கண்டு தொழ, நாலாயிரம் கண்படைத்திலனே அந்த நான்முகனே' என்று கூறியிருப்பதால் திருச்செங்கோட்டில முருகன் அவருக்குத்தன் உருவம் காட்டி தரிசனம் அருளியதாகவும் கூறலாம். திருச்செங்கோட்டு முருகன் மீது சுவாமிகளுக்கு மிகுந்த ஈடுபாடு இருந்ததாகத் தெரிகின்றது. ஆகையால் இப்பாடலில் நாகாசல வேலன் என்பதை திருச்செங்கோட்டு முருகன் என்றே கூறினேம். இனி சில உரையாசிரியர்கள் நாகாசலம் என்பது திருவேங்கிடத்தைக் குறிக்கும் என்றும் கூறியிருக்கின்றனர். ஏனெனில் அதற்கு சேஷாசலம் என்று பெயர் இருப்பதாலேயே, திருவேங்கிடம் என்று பொருள்கொள்வோர். அருணகிரியார் காலத்தில் அது முருகன் தலமாக இருந்து பிற்காலத்தில் வைணவத்தலமாக ஆக்கப்பட்டது என்று கூறியிருக்கின்றனர். இது பொருந்தாது. ஏனெனில் அருணகிரியாரே, திருவாஞ்சியத்துத் திருப்புகழில்,

"உபசாந்த சித்த குருகுல
பவ பாண்டவர்க்கு வரதன்மை
யுருவோன் ப்ரசித்த நெடியவன்—ரிஷிகேசன்
உலகீன்ற பச்சை யுமையணன்
வட வேங்கிடத்தி லுறைபவன்
உயர் சார்ங்க சக்ரகரதலன்—மருகோனே"

என்று பாடியிருப்பதால், அருணகிரியார் காலத்தில் திருமாலுக்கும் முருகனுக்கும் கோயில்கள் இருந்திருக்கவேண்டுமென்று யூகிக்கலாம. பழமுதிர்சோலை போல திருமால் வழிபாடு ஓங்கி, முருகன் வழிபாடு குன்றியிருக்கலாம் என்று சொல்லுவதே பொருத்தமுடைத்து.

கந்தரலங்கார மேற்கோள் (21-வது செய்யுள்)

" மரண ப்ரமாதம் நமக்கில்லை யாமென்றும் வாய்த்ததுணை
கிரணக் கலாபியும் வேலுமுண்டே கிங்கிணி முகுள
சரண ப்ரதாப சசிதேவி மங்கல்ய தந்துரக்ஷா
பரண க்ருபாகர ஞானகர சுர பாஸ்கரனே "

## பன்னிரெண்டாம் பாட்டு

செம்மான் மகளைத் திருடுந் திருடன்
பெம்மான் முருகன் பிறவான் இறவான்
சும்மா இரு சொல்லற வென்றலுமே
அம்மா பொருளொன்று மறிந்திலனே.

### பதவுரை

செம்மான்—சிவந்த மானின் அல்லது செம்மையான மாலின், மகளை—குமாரத்தியான வள்ளியை, திருடும்—அவளுடைய தகப்பன் தமயன் முதலியோர் அறியாமல் கவர்ந்த, திருடன்—கள்வன், பெம்மான்—மிகப்பெரியவன், முருகன்—வாடாத மணமும், குன்றாத இளமையும், அழியாத அழகும், தெய்வத்தன்மையும் பொருந்தியவன், பிறவான் இறவான்—ஆதி அந்தமில்லாதவன், (அவன் என்னிடம்) சும்மா இரு சொல்லற—உரையற்று சும்மா இரு, என்றலுமே—என்று உபதேசித்த மாத்திரத்தில், அம்மா!—ஆச்சரியக் குறிப்பு, பொருள் ஒன்றும்—அது இது என்ற சுட்டுணர்வும், பேத உணர்வும் போய், யாவும் அவனாகவே பார்க்க, அறிந்திலனே—வேறு ஒன்றையும் நான் அறியவில்லையே.

### விரிவுரை

சில உரையாசிரியர்கள், " அம்மா பொருளொன்றும் அறிந்திலனே ", அம்+மா + பொருள் + ஒன்றும்+ அறிந்திலனே ", எனச் சிதைத்து, அந்தப் பெரிய உபதேசத்தின் பொருளை அறியமாட்டாதவனானேன் என்று பிதற்றியிருக்கின்றனர். அதாவது அவன் " சும்மா இரு சொல்லற " என்றான். நான் அதன் தத்துவத்தை உணரமாட்டாதவனாக இருக்கின்றேன் என்று பொருள் கூறி இடர்படுகின்றனர்.

இப்பாடலில் சுருதி வாக்கியங்களும் கருத்தும் சம்புடமாய் எடுத்தாளப்படுகின்றன. ஆழ்ந்த கருத்தும் கொண்டது.

பெம்மான்: மிகப் பெரியவன். அவனுக்குமேல் பெரியது ஒன்றில்லை. "மஹதோ மஹீயான்" என்பது சுருதி.

பிறவான் இறவான்: அவன் ஆதி அந்தமற்றவன். 'அஜரம்' 'ஜன்ம நிரோதம்', என்பன சுருதி வாக்கு (சுவேதாச்வதரோபநிஷத் அத் 3 ரிக் 20-21)

செம்மான் மகளைத் திருடும் திருடன்: வள்ளி நாச்சியாராகிய பக்குவ ஆன்மாவை ஐம்புலன்களாகிய சகோதரருக்கும் மனம் ஆகிற தகப்பனுக்கும் தெரியாமல் அவர் உள்ளத்தைக் கவர்ந்த கள்வன். அவ்வித பக்குவ ஆன்மாவையே அவன் ஆட்கொள்வான். அவன் செய்யும் உபதேசம் "சும்மா இரு சொல்லற", என்றதில், இரண்டு கருத்துக்கள் இருக்கின்றன.

"சும்மா இரு', "சொல்லற இரு" என இரண்டு, சும்மா இருத்தல் என்பது விருப்பு வெறுப்பு, இன்பம் துன்பம் என்ற த்வந்துவ உணர்ச்சிகளில் நடுநிலைமை வகித்தல். வெற்றியால் மகிழ்ச்சியும், தோல்வியால் விசனமுமடையாத மனோநிலை. இதற்கு நிர்விகற்ப சமாதிநிலை என்றும், விருத்தி சூன்யநிலை என்றும் கூறப. 'ஸித்தி அஸித்யோ: ஸமோ பூத்வா" என்றது கீதை. இதனை "இருவினை ஒப்பு" என்பர் சித்தாந்திகள். இவ்வாறு நிர்விகற்ப சமாதியிலிருப்போர் பார்க்குமிடமெங்கும் இறைவனையன்றி வேறொன்றையுமே காணார், அல்லது தன்னைத்தவிர வேறு அன்னியமான பொருளைக் காணார். அருணகிரியார் பிறிதோரிடத்தில் (49-வது பாடல்)

> "தன்னந்தனி னின்றது தானறிய
> இன்னம் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ?",

என்று கேட்பதை ஒப்புநோக்குக.

நக்கீரர் கூறுவதுபோல், "இருள் நிறமுந்நீர் வளைஇய உலகத்து ஒரு நீயாகத் தோன்ற" இருக்கும் காட்சியை வாய் விட்டுச் சொல்லமுடியாததாகையாலே "சொல்லற இரு". இவ்வாறு தன்னந்தனியானவர்கள் தன்னைவிட்டு வேறொன்றும் காணார் என்பதைத்தான் "பொருள் ஒன்றும் அறிந்திலனே" என்றதால் குறிப்பிடுகின்றார். இதுவும் உபநிஷத் வாக்கு, ஈசோபநிஷத் 6-வது 7-வது மந்த்ரங்கள். "எவனொருவன் தன்னிடத்தில் எல்லாப்பொருள்களையும், எல்லாப்பொருள்களிடத்திலும் தன்னையும் பார்க்கிறானோ அவனுக்கு விருப்பு

வெறுப்பு என்பதில்லை அவ்வாறு எல்லாப்பொருள்களிடத்திலும் தன்னையே பார்க்கிறவனுக்கு விசனம் ஏது? ஆசை ஏது? அவன் எல்லாவற்றையும் ஒன்றாகவே பார்க்கிறான்" என்பது சுருதி.

கீதையிலும் (6-29) "எல்லாப் பொருள்களிலும் தன்னையும், தன்னிடமே எல்லாப் பொருள்களையும் எவன் பார்க்கிறானோ அவனே யோகி. அவன் சமதிருஷ்டியுள்ளவன்" என்று கூறுகிறார். இந்த சமதிருஷ்டிதான் நிர்விகல்பநிலை. அது, இது, என்று தனக்கு அன்னியமாய்ச் சுட்டிக்காட்டும் பொருள் ஒன்றுமேயில்லை. ஆகவே "சும்மா இருக்க சுகம்" என்று அமர்வதைவிடப் பேச ஒன்றுமில்லை. இதை அருணகிரியார் திருவகுப்பில்,

"உரையவிழ உணர்வவிழ உளமவிழ
உயிரவிழ உளபடியை உணருமவர்
அநுபூதி ஆனது"

என்று முருகன் திருவடியைக் குறிக்கின்றார்.

திருடன் என்றார். சம்பந்தப் பெருமான் "கள்வன்" என்றார். வேதம் "தஸ்கராணும் பதி" என்கின்றது. திருடனுக்குத் தலைவன் என்பது பொருள். சாமான்யத் திருடன் பௌதிகமான பொருளையோ, உடலையோ தான் திருடுவான். இவனோ உள்ளத்தைக் கவர்கின்றான். ஆன்மாவைத் திருடி விடுகின்றான். சாமான்யத் திருடன் தூங்கும்போதும், கவனக் குறைவாயிருக்கும் போதும் திருடுவான். இவனோ ஐம்புலன்களும், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற அந்தக்கரணங்களும், பிராணனும் விழித்துக்கொண்டு ஸர்வஜாக்ரதையாயிருக்கும்போதே திருடி விடுவான். சாமான்யத் திருடர்களால் நமக்கு ஏற்படுவது நஷ்டம். இந்தத் திருடனால் ஏற்படுவது மஹத்தான லாபம். சாதாரணத் திருடரால் நாம் அடைவது துன்பம், இந்தத் திருடரால் நாம் அடைவது பேரின்பம்.

ஸ்வாமிகள் முருகனுடைய உபதேசத்தால் தான் அடைந்த நிர்விகல்ப சமாதி நிலையையும், பேசா அநுபூதியையும், இதில் கூறுகின்றார். இந்த ஆனந்தானுபவத்தை வாய் விட்டுச் சொல்லமுடியாது. அதை, "ஓதவரிய துரியங்

கடந்தது, போத அருவ சொரூபம் ப்ரபஞ்சமும், ஊனும், உயிரும் முழுதும் கலந்த சிவஞானம்'' என்கின்றார் திருவானைக்காத் திருப்புகழில்.

கந்தரலங்காரம் 28வது பாடலில்

"வேலே விளங்கு கையான் செய்யதாளினில் வீழ்ந்து இறைஞ்சி
மாலே கொள இங்ஙன் காண்பதல்லால் மனவாக்குச் செய
லாலே அடைதற்கு அரிதாய் அருவுருவாகி ஒன்று
போலே இருக்கும் பொருளை எவ்வாறு புகல்வதுவே"

என்றார். 10வது பாடலில்,

"சொல்லுகைக்கு இல்லை என்று எல்லாமிழந்து சும்மா இருக்கும்
எல்லையுட் செல்ல எனை விட்டவா"

என்றும், 17வது பாடலில்,

"வேதாகம சித்ர வேலாயுதன் வெட்சி பூத்த தண்டைப்
பாதார விந்தம் அரணாக அல்லும் பகலுமில்லாச்
சூதானதற்றவெளிக்கே ஒளித்துச் சும்மா இருக்கப்
போதாய் இனிமனமே தெரியாது ஒரு பூதர்க்குமே,''

என்றும் காண்பதை ஒப்புநோக்குக.

இவ்வாறு நிர்விகல்ப சமாதி அடைந்தவர்கள் மௌன நிலையடைவர். ஆதலால் "சும்மா இரு சொல்லற" என்றனர். பேசுவதற்கு என்ன இருக்கிறது? பேசத்தான் முடியுமோ? "யதோ வாசோ நிவர்த்தந்தே அப்ராப்ய மனஸா ஸஹ" என்பது சுருதி. இது ஒரு அருமையான பாடல்.

## பதிமூன்றாவது பாட்டு

முருகன் தனி வேல் முனிநங் குருவென்
றருள் கொண்டறியா ரறியுந் தரமோ
வுருவன் றருவன் றுளதன்று இலதன்று
இருளன்று ஒளியன்று என நின்றதுவே.

## பதவுரை

உருவன்று – ஓர் உருவத்தைத் தாங்கியதல்ல, அருவன்று – உருவம் இல்லாததுமல்ல, உளதன்று – உள் பொருளுமல்ல, இலதன்று – இல் பொருளுமல்ல, இருளன்று – இருட்டும் அன்று, ஒளியன்று – வெளிச்சமும் அன்று, என நின்றது – என்று இருக்கும் பொருளை, முருகன் – முருகப் பெருமானாகிய, தனிவேல் முனி – ஒப்பற்ற வேலாயுதத்தையுடைய முனிவன், நம் குரு என்று – நமக்கு ஆசான் என்று வந்து, அருள்கொண்டு – அவன் அருளைப்பெற்று, அறியார் – அவ்வருளினால் அறியாதவர்கள் அல்லது அருள்கொண்டு நம் குருவென்று அறியார் என்று பொருள்கொள்ளலாம். (அருள்கொண்டு என்பதை இரண்டு இடத்திலும் சேர்க்க) அறியும் தரமோ – அறியமுடியுமோ ?

## விரிவுரை

*இப்பாட்டில் மெய்ப்பொருளாகிய முருகப்பெருமானின் சொரூப லக்ஷணம் கூறுகின்றார் சிவஞான சித்தியார் சுபக்கம், பிரமாணவியல், முதற் சூத்திரம், இரண்டாம் அதிகரணம், 63-வது செய்யுளில்*

*" பந்தமும் வீடும் ஆய பத பதார்த்தங்கள் அல்லான்*
*அந்தமும் ஆதியில்லான் அளப்பிலன் ஆதலாலே*
*எந்தை தான் இன்னன் என்றும் இன்னதாம் இன்னதாகி*
*வந்திடான் என்றும் சொல்ல வழக்கொடு மாற்றம் இன்றே".*

*என்று கூறப்பட்டிருப்பது காண்க.*

*அப்பர் பெருமான் அருளிய திருத்தாண்டகத்தில்,*

*" மைப்படிந்த கண்ணாளும் தானும் கச்சி*
*மயானத்தான் வார்சடையான் என்னினல்லான்*
*ஒப்புடைய னல்லன் ஒருவனல்லன்*
*ஓரூரனல்லன் ஓர் உவமனில்லி*
*அப்படியும் அந்நிறமும் அவ்வண்ணமும்*
*அவனருளே கண்ணாகக் காணின் அல்லால்*
*இப்படியன் இந்நிறத்தன் இவ்வண்ணத்தன்*
*இவன் இறைவன் என்றெழுதிக் காட்டொணாதே."*

என்று திருவாய் மலர்ந்தருளினர். அப்பரடிகள் ஸ்வரூப லக்ஷணத்தில் அருவமாய் இருக்கும் பரம்பொருளை அவனருளாலே உருவமாய்க் காணலாம் என்றார். அருணகிரியார் தனக்கு உபதேசம் செய்த உருவத் திருமேனியின் ஸ்வரூப லக்ஷணத்தை அதாவது அருவத் திருமேனியை அவனருளாலேயே காணமுடியும் என்றார். அதாவது அருவமாய் இருக்கும் ஒன்று உருவமாகக் காட்சியளிக்கவும், உருவமான ஒன்று அருவமாகக் காட்சியளிக்கவும் அவன் அருளினல்தான் முடியும் என்பது குறிப்பு- தடஸ்த லக்ஷணத்தில் சொரூப லக்ஷணம் கூறுகின்றார் அருணகிரி; ஸ்வரூப லக்ஷணத்தில் தடஸ்த லக்ஷணம் கூறுகின்றார் அப்பர்.

மணிவாசகப் பெருந்தகை சிவபுராண அகவலில்,

"இன்பமும் துன்பமும் இல்லானே உள்ளானே
அன்பருக்கு அன்பனே யாவையுமாய் அல்லையுமாய்
சோதியனே துன்னிருளே தோன்றாப் பெருமையனே
ஆதியனே அந்தம் நடுவாகி அல்லானே" என்றருளினர்.

பின்னும் பொற்சுண்ணத்தில்,

"வேதமும் வேள்வியும் ஆயினார்க்கு
மெய்ம்மையும் பொய்ம்மையும் ஆயினார்க்குச்
சோதியுமாய் இருளும் ஆயினார்க்குத்
துன்பமுமாய் இன்பமு மாயினார்க்குப்
பாதியுமாய் முற்றும் ஆயினார்க்குப்
பந்தமுமாய் வீடும் ஆயினார்க்கு
ஆதியும் அந்தமும் ஆயினார்கு
ஆடப்பொற் சுண்ணம் இடித்தும் நாமே"

என்கின்றார். இறைவன் ஒன்றோடொன்று மாறுபட்ட பொருள்களாக இருப்பதை இப்பாடல்கள் கூறுகின்றன. அதாவது த்வந்துவ உணர்ச்சிக்கு அப்பாற்பட்டவன் என்பது பொருள். அஃது அன்றி உருவமாய்த் தோன்றும் பிரபஞ்சமும் அவனல்ல. அவ்யக்தமான மாயையும் அவனல்ல. உண்டு என்பவர்க்கு உளனாயும், இல்லை என்பவர்க்கு இலனாயும், அஞ்ஞானிகளுக்கு இருளாயும், ஞானிகளுக்கு ஒளியாயுமிருப்ப வனாதலால், அவனை உள்ளபடி உணர அவனருளே வேண்டும், என்பது குறிப்பு. இதுதான் சாதாரண உரை.

விசேஷ உரை யாதெனில், சிவானந்த அநுபூதி பெற்ற ஜீவன் முக்தர்கள், மெய்-பொய், சோதி-இருள், துன்பம்-இன்பம், உருவம்-அருவம் என்ற இரட்டை உணர்ச்சிகள் இறந்து யாவற்றையும் அத்துவிதமாகக் காணும் பேரின்ப நிலை. அந்நிலையில் இறைவன் உருவனல்லன், அருவனல்லன், பொய்யும் அல்லன், மெய்யும் அல்லன், சோதியும் அல்லன், இருளும் அல்லன், என்ற சமதிருஷ்டி உண்டாகும். திருச்செந்திற்கலம்பகத்தில் சுவாமிநாத தேசிகர்,

"மெய்யு நீஇ பொய்யு நீஇ
விண்ணு நீஇ மண்ணு நீஇ
ஐயை நீஇ செய்யை நீஇ
ஆதி நீஇ சோதி நீஇ"

என்றதும் காண்க. அவனல்லது இல்லை என்ற நிலையில் பிரபஞ்சத்திலிருக்கும் சகல வியாபகங்களும் அவனாகத்தானே இருக்கமுடியும். இருளும் வெளிச்சமும், உருவும் அருவும், மெய்யும் பொய்யும், சூதும் நேர்மையும், ஒழுக்கமும் இழுக்கமும், புகழும் இகழ்ச்சியும், யாவும் அவனாகவேதான் இருக்க முடியுமாகையாலே, இதுதான் என்றும், இதுவல்ல என்றும் சுட்டிச் சொல்லமுடியாது. அவனருளாலன்றி அவனது உண்மைச் சொரூபத்தைக் காணமுடியாது. ஏனெனில் அவன் ஒன்றோடொன்று மாறுபட்ட இரட்டை அறிவு துவந்துவ உணர்ச்சிக்கு அப்பாற்பட்டவன். இதனைக் கூறவந்த அருணகிரியார் கந்தரலங்காரத்தில் (68 பாடல்),

"சாடும் சமரத் தனிவேல்
முருகன் சரணத்திலே
ஓடும் கருத்தை இருத்த வல்லார்க்கு
யுகம் போய் சகம்போய்ப்
பாடும் கவுரி பவுரி கொண்டாடப்
பசுபதி நின்று
ஆடும் பொழுது பரமாய்
இருக்கும் அதீதத்திலே."

என்று துவந்துவ உணர்ச்சி நீங்கிய துரிய நிலை அனுபவத்தைக் கூறுகின்றார். 61வது பாடலில்,

"வரையற்று அவுணர் சிரம் அற்று
வாரிதி வற்றச் செற்ற

புரையற்ற வேலவன் போதித்தவா!
பஞ்ச பூதமற்று
உரையற்று உணர்வற்று உடல் அற்று
உயிர் அற்று உபாயம் அற்றுக்
கரையற்று இருள் அற்று எனது அற்று
இருக்கும் அக் காட்சியதே",

என்று நமக்கு அந்தக் காட்சியைக் காட்டுகின்றார்.

## பதினன்காம் பாட்டு

கைவாய் கதிர்வேன் முருகன் கழல்பெற்று
உய்வாய் மனமே ஒழிவாய் ஒழிவாய்
மெய்வாய் விழி நாசியொடுஞ் செவியாம்
ஐவாய் வழி செல்லும் அவாவினையே.

### பதவுரை

மனமே – நெஞ்சமே, கைவாய் – கையில் பொருந்திய, கதிர்வேல் – ஞானச்சுடர் வீசுகின்ற வேலையுடைய, முருகன் – முருகனுடைய, கழல்பெற்று – திருவடிகளைப் புகலிடமாகப் பெற்று, உய்வாய் – ஈடேறக்கடவாய். மெய் வாய் விழி நாசியொடும் செவியாம் – ஞானேந்திரியங்கள் என்று சொல்லப்பட்ட மெய்வாய் கண் மூக்கு செவி, ஐவாய்வழி – பஞ்சேந்திரியங்களின் வழியே, செல்லும் – செல்லுகின்ற, அவாவினையே – ஆசையை, ஒழிவாய் ஒழிவாய் – உதறித் தள்ளுவாயாக.

### விரிவுரை

இப்பாட்டில் ஆன்ம விகாசத்திற்குத் தடைகளாயிருக்கும் ஐம்புலன்களின் அதிக்ரமத்தை அடக்கவேண்டும், அவ்வாறு அடக்குவதே முருகனின் அருள் பெறுவதற்குச் சிறந்த சாதனமாகும் என்பதை அறிவுறுத்துகின்றார். இந்த்ரியங்களை அடக்கி ஆளவல்லமை உடையவருக்கு "ஜிதேந்திரியர்கள்" என்று பெயர். அத்தகைய ஜிதேந்திரியர்களே முருகன் அருளைப் பெறமுடியும். ஐம்புலன்களின் செயலை கந்தரலங்கார நான்காம் பாடலில்,

"ஓரவொட்டார் ஒன்றை உன்ன வொட்டார்
மலரிட்டு உனது தாள்
சேரவொட்டார் ஐவர் செய்வதென்"

என்று கூறியுள்ளார். சகல சாஸ்திரங்களாலும், சகல மகான்களாலும் சகல மதங்களாலும், ஏகோபித்து வலியுறுத்தப் படுவது இந்திரிய நிக்ரஹமே ஆகும். அவை அடங்கினால் இறைவன் அருள் தானே வந்து கூடும்.

ஞானேந்திரிய பஞ்சகம் என்பவை எவை? பௌதிகமாகத் தோன்றுகின்ற காது கண் மூக்கு என்ற அவயவங்கள் தானா? அப்படியாயில் அவ்வவயவங்களையுடையவர்கள் செவிடராயும், குருடராயும், ஊமைகளாயும் இருப்பதைப் பார்க்கிறோமே? ஏன்? பிணத்துக்கும்கூட அவ்வவயவங்கள் இருக்கின்றனவே? அவை தொழிற் படுவதில்லையே? ஆகையால் இந்திரியங்கள் என்பவை பூத அவயவங்கள் இல்லை என்பது ஏற்படுகின்றது. கண் என்றால் பார்க்கும் சக்தி, காது என்றால் கேட்கும் சக்தி, என்ற முறையில் தான் அவற்றைப் புரிந்துகொள்ளல் வேண்டும். செவிடனுக்குச் செவி என்ற உறுப்பு இருந்தும் கேளாமைக்குக்காரணம், செவி என்னும் உறுப்பிற்கு வேறாய் அதனை அதிட்டித்து நிற்கும் ஓர் சூக்ஷ்ம வஸ்து செயல் படாமையே. அந்த வஸ்துவிற்கே இந்திரியம் என்று பெயர். ஸ்வப்னத்தில் ஐம்புலன்கள் வேலை செய்வதை அனுபவிக்கிறோம். அப்போது தொழில் படுவது பௌதிக இந்திரியமல்ல. சூக்ஷ்ம இந்திரியங்கள்.

இந்த இந்திரியமும் மனதோடு இயைந்தாலன்றி தொழில் படாது. மனம் வேறு இடத்தில் லயித்திருக்கும்போது இந்திரியங்கள் வேலை செய்வதில்லை என்பதை அனுபவவாயிலாகவே அறியலாம். கண் ஒன்றை ஊன்றிப் பார்த்துக் கொண்டிருக்கும்போது, காது கேளாமல் இருப்பதும், காது ஒன்றைக் கேட்டுக்கொண்டிருக்கும்போது, கண் பாராதிருத்தலும் சாதாரண அனுபவமல்லவா? ஞானேந்திரியங்கள் என்பவை வெளியுலகத்துப் பொருள்களை மனதில் கொண்டு போய்ச் சேர்க்கும் வாயில்கள். இந்திரியங்கள் பார்ப்பதை மனம் உணர்கின்றது. ஆக இந்திரிய அடக்கம் உண்டாக வேண்டுமானால் மன அடக்கம் அவசியம். அம்மனத்தை முருகன் கழல்களில் சிக்க வைத்துவிட்டால் ஐம்புலன்கள்

வேலை செய்யா. அதைத்தான் இப்பாட்டில் கூறுகின்றார். மனமே! முருகன் கழல் பெற்று உய்வாய், அப்பொழுது ஐவாய் செல்லும் அவா விலகும் என்கிறார். ஐம்புலன்களால் ஏற்படும் தடையைச் சொன்னவர், அத்தடை நீக்கத்திற்கு உபாயமாக மனதை முருகன் கழல்களில் சேர்க்கச்சொல் கிறார்.

இக்கருத்தை ஆளுடைய பிள்ளையார் திருக்கலிக்காமூர் தேவாரத்தில் (3-105-2),

"மெய்வரையான் மகள் பாகன் தன்னை
விரும்ப உடல் வாழும்
ஐவரை யாசறுத்தாளுமென்பர்
அதுவும் சரதமே" என்றார்.

ஆளுடை அரசும், (4—32—9)

"புலன்களைப் போக நீக்கிப்
புந்தியை யொருங்கவைத்து
இலங்களைப் போக நின்று
இரண்டையும் நீக்கி யொன்றாய்
மலங்களை மாற்றவல்லார்
மனத்தினுட் போக மாகிச்
சினங்களைக் களைவர் போலும்
திருப்பயற்றூரனாரே"

என்றருளிமை காண்க. 4-52ல் திரு ஆரூர் திருநேரிசைத் திருப்பாடல்கள் முழுவதும் இந்த ஐம்புலன்கள் விளைக்கும் துன்பங்களையே வைதது பாடப்பட்டிருக்கின்றன.

ஐம்புல நுகர்ச்சியே உலகத்தின் விஷயங்களின் மீது நமக்குப் பற்றை ஏற்படுத்துகின்றது. ஐம்புலன்கள் மனதின் சேர்க்கையன்றி வேலை செய்யா. ஆசைகள் விளைவது ஐ புலன்களாலேதான். ஆசை அல்லது அவா என்பது பிறபபினும் வித்து என்று வள்ளுவர் கூறுவது போல, மறுபடியும் மறுபடியும் பிறப்பைக் கொடுத்துக்கொண்டே யிருக்கும் 'ஆசை அறுமின் ஈசனோடாயினும் ஆசை அறுமின்' என்று ஆன்றோர் கூறியபோந்தனர்.

ஆக பிறப்பறுக்க ஆசை அறவேண்டும், ஆசை அற ஐம்புலனடக்கம் வேண்டும். புலனடங்க மனம் அடங்க வேண்டும். மனம் அடங்க, அதை இறைவனுடைய திருவடி

களிலே பக்தி (அன்பு) என்னும் கயிற்றால் கட்டிவிடவேண்டும். மாட்டை முளையில் கட்டி மேய விடுவதுபோல, மனதை முருகனிடம் கட்டிவிட்டால் அகலாது அவனையே பற்றி இருக்கும். அப்போது இந்திரியங்கள் வேலை செய்வதில்லை. இவ்வாறு முருகன் சரணத்திலே ஓடும் மனத்தை இருத்த வல்லவர்களே காலத்தை வென்றிருப்பார். ஐம்புலனடக்கம் மிக மிக அவசியம் என்பதை வலியுறுத்தவே "ஒழிவாய் ஒழிவாய்" என இரு முறை கூறினர்.

## பதினைந்தாம் பாட்டு

**முருகன் குமரன் குகன் என்று மொழிந்து**
**உருகும் செயல் தந்து உணர்வு என்று அருள்வாய்?**
**பொரு புங்கவரும் புவியும் பரவும்**
**குருபுங்கவ! எண்குண பஞ்சரனே**

## பதவுரை

பொருபுங்கவரும் – சண்டையில் ஈடுபட்ட வானுலகத்தவரும், புவியும் – மண்ணுலகத்தவரும், பரவும் – வணங்கித் துதிக்கின்ற, குருபுங்கவ – ஆச்சார்ய சிரேஷ்டனே! எண் குணம் – எட்டுக் குணங்களையே, பஞ்சரனே! – திரு உருவமாகப் பெற்றவனே, முருகன் – முருகன் என்றும், குமரன் – குமரன் என்றும், குகன் என்று – குகன் என்றும், மொழிந்து சொல்லி, உருகும் – நெஞ்சம் கசிந்து உருகும், செயல் தந்து – தொழிலாகிய வாய்ப்பைப் கொடுத்து, உணர்வு – அறிவு, என்று – எப்பொழுது, அருள்வாய் – கொடுத்தருளப் போகிறாய்.

குறிப்பு:— விண்ணுலகத்தவர், யுத்தம் வந்தால்தான் முருகனைக் கூப்பிடுவார்கள், மண்ணுலகத்தவர் எப்போதும் கூப்பிடுவார்கள் என்று மண்ணுலகத்தாருக்கு ஓர் ஏற்றம் கொடுக்கின்றார்.

## விரிவுரை

பொருபுங்கவர்:— தேவலோகத்தவருக்குப் பகைவரால் ஆபத்து வந்து போர் செய்யவேண்டிய அவசியம் ஏற்பட்ட காலத்திலெல்லாம் முருகனையே துணையாகப் பரவிப் புகழ்ந்து அழைப்பார்களாம். சூரபத்மனால் தேவலோகம் ஆக்கிரமிக்கப்

பட்டு தேவர்களெல்லாம் சூரனுக்கு அடிமைகளாகி அவன் இட்ட குற்றேவல்களைச் செய்ய நேர்ந்த காலத்தில் தம்மை ரக்ஷிக்கும் பொருட்டு சிவபிரானை வேண்ட அவரால் நெற்றிக் கண்ணிலிருந்து உண்டாக்கப்பட்ட ஆறுமுகப்பெருமான் சூரரை வதைத்து, தேவர்களை சிறை மீட்டினான். அவர்கள் முருகனுடைய ஆற்றலைப் புகழ்ந்து வணங்கினர். "வானோர் வணங்கு வில்தானைத் தலைவ" என்றார் நக்கீரரும். அவன் தேவசேனாபதி. "ஸேனானீனாம் அஹம் ஸ்கந்த:" என்றார் கிருஷ்ணனும். ஒப்பற்ற வீரன், தேவர் குறை தீர்த்த செல்வன்.

குரு புங்கவன் :— ஆசார்யர்களில் சிறந்தவன். தன் தகப்பனுக்கே குருவானவன். சிவபிரான் தக்ஷிணாமூர்த்தியா யிருந்து நால்வருக்கு உபதேசம் செய்தார். அவருக்கே முருகன் உபதேசித்தானதலாலே அவன் சிறந்த குரு என்று கூறுகின்றார்.

எண்குண பஞ்சரன் :— பஞ்சரம் என்றால் இடம், உடல், கூடு எனப் பொருள்படும். எட்டுக் குணங்களையே தன் திருமேனியாகக் கொண்டவன், அல்லது எட்டு குணங்களுக்கு இருப்பிடமானவன். "எண்குணத்தான்" என்றார் திருவள்ளுவரும். எண்குணங்களாவன : (1) தன்வயத்தனாதல் (2) தூய உடம்பினனாதல். (3) இயற்கை உணர்வினனாதல் (4) முற்றும் உணர்தல் (5) இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல் (6) பேரருளுடைமை (7) முடிவிலாற்றலுடைமை (8) வரம்பிலின்பமுடைமை, என்று பரிமேலழகர் உரை கூறி இருக்கிறார். இவ்வாறு சைவாகமத்தில் கூறப்பட்டது என்றும் சொல்லியிருக்கிறார். பரிதியார் உரையில் (1) அனந்தஞானம் (2) அனந்த வீர்யம் (3) அனந்தகுணம் (4) அனந்ததெரிசனம் (5) நாமமின்மை (6) கோத்ரமின்மை (7) அவாவின்மை (8) அழியா இயல்பு என்று கூறிப் போந்தனர். இங்கு 'குணம்' என்றது 'இயல்பு', 'தன்மை' என்ற பொருளில் கொள்ள வேண்டும். இறைவனுடைய இயல்பு அல்லது தன்மை, எல்லாம் அறிந்த முற்றறிவுடையவனாயும் எங்கும் நிறைந்தவனாயும், என்றும் அழியாதவனாயும், ஸர்வ ஆற்றல் உள்ளவனாயும், பாசங்களால் பந்தப்படாதவனாயும், பரம கருணாமூர்த்தியாயும், முடிவிலா இன்பமுடையவனாயும், மனம் வாக்குகளுக்கெட்டாதவனாயும், இருப்பதுதான். இதை 'குணம்', 'குணி' என்ற

முறையில் கொள்ளலாகாது குணங்களே அவன், அவை அவனைவிட்டு வேறல்ல இந்த எட்டுத் தன்மைகளுக்கும் இருப்பிடமானவன், அவற்றைத் தன்னுள் அடக்கிக்கொண்டு இருக்கிறான் பிரபஞ்சம்போல என்றுமாம்.

முருகன், குமரன், குகன் என்ற மூன்று நாமாக்களின் தத்துவம் பார்க்கவேண்டியது அவசியம். அநேக நாமாக்கள் இருக்க, இம்மூன்றை மட்டும் கூறுவதற்கு ஏதாவது காரணம் இருந்தாகவேண்டும்.

1. முருகன்:— 'முருகு' என்றால் அழகு, இளமை, மணம் கடவுட்டன்மை என்ற நான்கு பொருள்கள் உண்டு. இவற்றை உடையவன் முருகன். முருகு என்பதோடு "அன்" விகுதி சேர்த்து முருகனாயிற்று. குன்றாத அழகு, மாறுபாடில்லாத இளமை, வாடாத மணம், இவற்றோடு கடவுட்டன்மை என்றால் முன் சொன்ன எட்டு இயல்புகளையும் குறிக்கும். எம் மதத்தினரும் தத்தம் கடவுளுக்குக்கூறும் இயல்புகள் அனைத்தை யும் ஒரே சொல்லில் அடக்கிய பெருமை தமிழ் மொழிக்கே உள்ளது. இது தனித்தமிழ்ச் சொல்.

மேலும் 'முருகா' என்பதே ஓர் மந்த்ராக்ஷரமாகக் கருதப் படுகின்றது. அதில் பிரணவத்தில் அடங்கிய அ உ. ம். என்ற மூன்று அக்ஷரங்களும் இருப்பதை உணரலாம். கந்தரலங்காரப் பாடல் 70ல "மெய்ம்மை குன்றா மொழிக்குத் துணை முருகா எனும் நாமங்கள்" என்று கூறியிருப்பதை உன்னிப்பார்க்க வேண்டும். முருகா எனும் நாமங்கள் எனப் பன்மையில் கூறி யிருக்கும் விசேஷத்தை உணரவேண்டும. 'அ'கார வாச்யனான இறைவனும், 'உ' கார வாச்சியையான இறைவியும் 'ம்' காரத் தால் குறிக்கப்படும் ஆன்மாவும், மூன்றும் அந்த நாமாவில் இருப்பதால் பன்மையில் கூறினார் என்னலாம். மேலும் பிரணவத்தில் அடங்கிய அகர உகர மகரங்களுக்கு வேதத் திலும். மஹான்களாலும் கொடுக்கப்படும் தத்துவார்த்தங்கள் அனைத்தையும் தன்னுள் அடக்கியிருப்பதால் பன்மையில் கூறவேண்டியதாயிற்று. விரிக்கிற் பெருகுமென இதோடு நிறுத்திக்கொள்வோம். அறிஞர் சிந்தனைக்கு விட்டுவிடுவோம்.

நக்கீரர், "பண்டைத் தன் மணம் கமழ் தெய்வத்து இள நலம் காட்டி" என்பதில் 'முருகு' என்ற பதத்தின் நால்வகை பொருளையும் அடக்கிக் கூறியிருப்பது நோக்கத்தக்கது. இதை

அவனுடைய பண்டைக்கோலம் என்கிறார். மணம் தெய்வத் தன்மை, இளமை அழகு என்ற பண்புகளை உடையவன் முருகன் என்று பண்டைத்தமிழன் தன் கடவுளுக்கு வைத்த பெயரில் தமிழனின் கூர்த்த மதி புலனாகின்றது என்றார் திரு வி. கலியாண சுந்தரனார்

2. குமரன்:—குமாரன் என்ற சொல் குமரன் என்றாயிற்று. இதற்குப் பல பொருள்கள் உள்ளன. (i) குத்ஸிதங்களான காமம் குரோதம் மோஹம் முதலிய அசுபவாசனவடிவான அசுரர்களைக் கொன்றவன் என்று ஒரு பொருள். ஆக அவனது தியானத்தால் நம்மிடமிருக்கும் இந்த அநாத்ம விருத்திகள் அழியும் என்றாயிற்று.

(ii) கு-அசுத்தம். மாரன்-அழிப்பவன் அசுத்தங்களாகிற ஆணவம், கர்மம், மாயை என்ற மும்மலங்கள் அனாதி காலமாய் ஆன்மாவைப் பற்றியிருப்பவற்றை அழிப்பவன் என்றாலும் பொருந்தும்.

(iii) "கௌ-ப்ருதிவ்யாம், மாம்-மோக்ஷ லக்ஷ்மீம், ராதி-ததாதி இதி குமார:" என்ற மேற்கோளின்படி இகலோகத்திலேயே ஜீவன் முக்தி நிலையை அருள்பவன் என்று பொருள்படுகின்றது. அதாவது "கௌ" என்ற பதத்தினால் இவ்வுலகத்திலேயே என்றும், "மா" என்ற பதத்தினால் மோக்ஷலக்ஷ்மீ என்றும், "ரா" என்ற பதத்தினால் கொடுப்பவன் என்றும் பொருள் இருப்பதால், அவன் பெயர் 'குமாரன்' என்றாயிற்று என்று மேற்சொன்ன மேற்கோளுக்கு பொருள்.

3. குஹன்:—சாந்தோக்ய உபநிஷத் 8வது ப்ரபாடகத்தில் கூறப்பட்டிருக்கிறதாவது இந்த உடலுக்கு பிரம்மபுரம் என்று பெயர். அதில் தாமரை மொட்டுப்போல் ஓர் ஸ்தானம் இருக்கின்றது. அந்த ஸ்தானத்தில் தகராகாசம் இருக்கின்றது. அதில் ப்ரம்மம் ப்ரதிஷ்டிதமாயிருக்கிறது. தைத்திரீய உபநிஷத், ப்ரம்மானந்தவல்லி, முதல் அநுவாகத்தில் "ஸத்யம் ஞானம் அனந்தம் ப்ரம்ம, யோ வேத நிஹிதம் குஹாயாம் பரமே வ்யோமந், ஸோ஽ச்நுதே ஸர்வான் காமான் ஸஹ" என்று கூறப்பட்டிருக்கின்றது. அதாவது ஹ்ருதய குகையாகிற பரமாகாசத்தில் ஸச்சிதானந்த ப்ரஹ்ம ஸ்வரூபகுஹனை எவன் அறிகிறானோ, அவன் ஸர்வகாமனைகளையும் அடைகிறான் என்பது பொருள்.

ஸ்காந்தத்தில் பரமசிவன் முருகனுடைய தத்துவத்தைப் பார்வதிக்கு விளக்கும்போது,

"குஹேதி தஹராகாசோ வேதாந்தேஷு ஹி பட்யதே ।
தந்நிஷ்டோ அயம் குஹ: ப்ரோக்த: ஸர்வஹ்ருத்
கமலாஸன: ॥"

என்று கூறுகிறார். அதாவது வேதாந்தங்களில் ஹிருதயத்திலுள்ள தஹராகாசமானது குகையெனக் கூறப்பட்டிருக்கின்றது ஸகல பிராணிகளின் இருதய கமலங்களில் இருக்கும் புத்தி குஹையிலிருப்பவனாதலால் குஹன் எனப்பட்டான் என்று பொருள்.

அருணகிரிநாதர் திருப்புகழ் ஒன்றில் "தகரத்தந்த சிகரத் தொன்றில் தடநற் கஞ்சத்துறைவோனே" என்று பாடியிருக்கிறார். ஆதலால் குஹன் என்ற பதத்திற்கு ஹ்ருதயத்தில் வஸிப்பவன் என்ற பொருள் சித்திக்கின்றது. மேலே சொன்ன தைத்திரீய உபநிஷத் பிரமாணப்படி குஹனை வழிபடுகிறவர்கள் ஸர்வ காமனைகளையும் அடைகிறார்கள். மேலும் 'குஹ்யம்' என்ற சொல்லுக்கு மிக ரகசியமானது என்று பொருள். சாமான்யர்களால் அறிய முடியாத ரஹஸ்யமாக அவனிருப்பதால் (குஹ்யமாயிருப்பதால்) குஹன் எனப்பெயர் பெற்றான் என்றும் கூறலாம். அருணகிரிநாதர் திருப்புகழில்,

"காணொணாதது, உருவோடருவது
பேசொணாது உரையே தருவது
காணுநான் மறை முடிவாய் நின்றது." என்றும்,

"எவராலும் ஓத அரியது துரியம் கடந்தது" என்றும்,

"ஓசைக்குத் தூரமானது
மாகத்துக்கிறதானது
லோகத்துக்காதியானது"

என்றும் கூறுகிறார். இவ்வாறு சாமான்யர்களால் அறிய முடியாத ரஹஸ்யப்பொருள் குஹன்.

ஆக இம்மூன்று நாமாக்களால் முருகனுடைய ஸ்வரூப தடஸ்தலக்ஷணங்கள் யாவும் சுருக்கமாகக் கூறப்பட்டிருக்கின்றது.

உருகும் செயல் என்பது என்ன? என்று பார்ப்போம். உருகுதல் என்றால் மனம் கசிதல், நெஞ்சம் நெகிழ்தல், உள்ளம் மலர்தல், என்றெல்லாம் சாதாரணப் பொருளாய்க் கூறலாம். இதற்குச் சிறப்புப்பொருள் ஒன்று கூறுவோம். மாணிக்கவாசகர் திருவெம்பாவையில்,

"மாதேவன் வார்கழல்கள் வாழ்த்திய வாழ்த்தொலிபோய்
வீதிவாய்க் கேட்டலுமே விம்மி விம்மி மெய்ம்மறந்து
போதார் அமளியின் மேல் நின்றும் புரண்டு இங்ஙன்
ஏதேனும் ஆகாள் கிடந்தாள்."

என்று அருளியிருக்கிறார். இது இறைவன்பால் கொண்ட தலையன்பின் அறிகுறி. பெயரைக் கேட்டமாத்திரத்திலே தன் வயமிழந்து, தற்போதம்கெட்டு, மூர்ச்சிக்கும் நிலை அடைதல் வேண்டும். இதனை "தீவிரதர சத்தி நிபாதம்" என்று சித்தாந்த சாஸ்திரங்கள் கூறும். அப்பர் பெருமான் ஓர் தலைவியின் செய்தியாக அகப்பொருட்டுறையில் பாடுகின்றார்.

"முன்னம் அவனுடைய நாமம் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்
பின்னை அவனுடைய ஆரூர் கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சியானாள்
அன்னையும அத்தனையும் அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசாரத்தைத்
தன்னை மறந்தாள், தன்னாமங்கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே".

என்ற பாட்டில் இறைவனுடைய பெயரும் வண்ணமும் ஊரும் கேட்டவுடனே அவன்மீது பித்துக்கொண்டு லௌகிக ஆசைகளைத் துறந்து, தன்னையும் மறந்து, இறைவனுடைய தாளைப் பற்றிக்கொண்டாள் இப்பாட்டிலிருக்கும் மற்றொரு விசேஷம், கேட்டல், சிந்தித்தல், தெளிதல், நிட்டை கைகூடல் என்ற நான்கு வகை நிலைகளையும் கூறியிருப்பது காண்க. ஆக 'உருகுதல்' என்ற சொல் மிக ஆழமான பொருளில் இங்கு பிரயோகப்பட்டிருக்கின்றது.

'அருள்வாய்' என்ற சொல்லும் அப்படியே. இதுவரை ஆன்மா பக்குவமாதற்பொருட்டு மலத்துக்கு அநுகூலமாய் செயல்பட்ட திரோதான சக்தியே, மலபரியாகம் ஏற்பட்ட

வுடன் அருள்சக்தியாக மாறி சத்தி நிபாதம் பதியச்செய்வான். அருணகிரியார் அருள்சக்தியானது தன்னிடம் தீவிர சத்தி நிபாதமாய் நிகழவேண்டும் என்றும், அவ்வாறு பதிவதாலேயே விஷயங்களில் விரக்தி ஏற்பட்டு இறைவனிடம் தனது ஆன்மா விரைய வேண்டுமென்றும் பிரார்த்திக்கின்றார். அநுபூதிமானாகிய அருணகிரியார் உருகும் செயலைக் கேட்கலாமோ என்பது கேள்வி அவருக்கு முருகன் அருள்தான் தேடாமல் கிடைத்த பிதிரார்ஜித சொத்துப்போன்றது. சுயார்ஜிதமாய் கொஞ்சம் தேட ஆவல் கொண்டார்போலும். பொருபுங்கவர் வழிபட்டு இழந்த பதவியைப் பெற்றனர். மண்ணுலகோரும் முருகனை வழிபட்டு வீடுற்றனர். உலகம் உயர்ந்தோர் மாட்டே என்றபடி இங்கு சந்தர்ப்பத்தைக் கருதி "புவியும் பரவும்" என்பதை தனக்கு முன்பு முருகனை வழிபட்டு வீடுற்ற மகான் களையே குறிப்பதாகும் என்று கூறுவதும் பொருந்தும்.

கந்தரலங்காரம் கூறும் அனுபவம்:—

'சொன்ன கிரௌஞ்ச கிரியூடுருவத்
துளைத்த வைவேல்
மன்ன! கடம்பின் மலர்மாலை மார்ப!
மௌனத்தை யுற்று
நின்னை உணர்ந்து உணர்ந்து எல்லாம்
ஒருங்கிய நிர்க்குணம் பூண்டு
என்னை மறந்திருந்தேன் இறந்தே
விட்டது இவ்வுடம்பே."

## பதினாறுவது பாட்டு

பேராசை எனும் பிணியில் பிணிபட்டு,
ஓரா வினையேன் உழலத் தகுமோ?
வீரா! முதுசூர் படவேல் எறியும்
சூரா! சுரலோக துரந் தரனே.

### பதவுரை

வீரா—பராக்ரமம் பொருந்தியவனே, முதுசூர்பட—சூரரில் முதல்வனாகிய சூரபன்மன் அழிய, வேலெறியும் சூரா—வேலைப்பிரயோகித்த தீரனே, சுரலோக-தெய்வலோகத்தை

துரந்தரனே — ரக்ஷித்தவனே, பேராசை எனும்—வளர்ந்து கொண்டேபோகும் ஆசையெனும், பிணியில்—நோயால் அல்லது பேயால் அல்லது பந்தத்தால், பிணிபட்டு—கட்டப் பட்டு; ஆக்ரமிக்கப்பட்டு; நோயுற்று, ஓரவினையேன்— ஆராய்ந்து அறிய திறன் இல்லாத வினையையுடையவனாகிய அடியேன், உழலத்தகுமோ?—கலங்குதல் நியாயமோ?

## விரிவுரை

மூந்தின் பாடல்களிலே ஆன்ம முன்னேற்றத்திற்குத் தடையாய் நின்ற விரோதி சொரூபத்தில் சிலவற்றைச் சொன்னார். "அகம் அடை மடந்தையர்" என்றும், "அமரும்பதி கேள் அகம்" என்றும், "வளைபட்ட கைமாதொடு மக்கள்" என்றும் "மங்கையர் மையல் வலை" என்றும், "ஐவாய் வழி செல்லும் அவா" என்றும் விரோதி சொரூபம் கூறினவர் இப்பாட்டில் பேராசை என்ற ஒரு விரோதியைச் சொல்லு கின்றார்.

பேராசையே உருவானவன் சூரபத்மன், 1008 அண்டங் களை 108 யுகங்கள் அரசாள வரம் வாங்கியும் சமாதானம் அடையாமல் தேவலோகத்தை ஆக்ரமித்துத் தேவர்களைச் சிறைப்படுத்தினன். ஆசையென்பது எல்லா உயிர்களுக்கும் சுபாவமாக இருக்கும் ஒன்று. அதை நல்வினைகளில் இருக்கும் ஆசை, தீவினைகளிலிருக்கும் ஆசை என்று வகுக்கலாம் நல்ல கிருத்யங்கள் செய்யவேண்டுமென்பதும் ஆசைதான். ஆனால் பேராசை என்பது பொதுவாய் கெட்டதாகவேதான் கருதப் படுகிறது கிடைத்ததைக்கொண்டு திருப்தி அடையாமல் மென்மேலும் ஆசையால் உந்தப்பட்டு பேராசையாகப் பெருத்து வளர்கிறது. இவ்வாறு பேராசைகொண்டவர் களுக்கு மனச்சாந்தியே ஏற்படாது. ஸதாஸர்வகாலம் தான் கொள்ளும் ஆசைகளை நிறைவேற்றுவதிலே புத்தியைச் செலுத்துவதால் மற்ற வியாபகங்களுக்கு இடமே இருப்ப தில்லை. அதனால் பிணி என்றார்.

பிணி என்ற சொல்லுக்கு, நோய், கட்டு, பேய் என்ற பொருள்கள் இருக்கின்றன. நோய் எப்படி நம் உடம்பிலேயே தோன்றி உடம்பை வாட்டுகிறதோ, அதுபோல பேராசையும்

நம் மனதிலேயே உதித்துத் துன்பப்படுத்துகின்றது. உடன் பிறந்தே கொல்லும் வியாதி என்பது ஆன்றோர் வாக்கு. பேராசைப் பேய் என்றே வழக்கில் இருப்பதும் தெரிந்ததே. பேய் பிடித்தவன் அதன் வசப்பட்டு வேறு வழி செல்ல இயலா தவனாய் அதனால் துன்புறுத்தப்படுகிறான். அதுபோல் பேராசை பிடித்தவனும் அதனால் பீடிக்கப்பட்டு, தற்போத மிழந்து தவிப்பான். பேராசை என்பது ஒரு கட்டு. பேராசைக்காரன் அதினின்றும் விடுபடுவது அரிது. "அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும் தவா அப்பிறப்பீனும் வித்து" என்பது பொய்யா மொழி. அது நம்மை மீண்டும் மீண்டும் பிறப்பெடுத்து உழலவைக்கும் தன்மையது. வினை யோடு நம்மைக் கட்டி பல பிறவிகளில் இழுத்துச் செல்லும். ஆதலால் பேராசைப்பட்டு உழல்பவனாகிய தன்னை 'வினையேன்' என்று கூறிக்கொள்ளுகிறார்.

அருணகிரியாருக்கு முருகன் ஆட்கொண்டபின் பேராசை இருந்தது என்று சொல்ல இயலாது. ஆயினும் இப்பாட்டில் தன்னை பேராசை எனும் பிணியில் பட்டவனாகக் கூறிக்கொள் கிறார். தன்னை வியாஜமாக வைத்துக்கொண்டு உலகுக்கு உபதேசம் செய்கிறாரென்று கூறலாம். ஆட்கொள்ளப்படு முன் இருந்த நிலையை நினைந்து அது அவனருளாலே ஒழிந்தது என்பதைக் கூறுகிறார், என்றும் கொள்ள இடமுண்டு. பேராசை பிடித்து உழலும் உயிர்களை விடுவிக்கப் பேராசையே உருவான சூரனை அழித்த முருகனேதான் சாதனம் என்பது கருத்து. "ஓரா வினை" என்றார். ஓராத என்றால் உணராத, ஆராயாத என்று பொருள். தன்னுடைய உண்மை நிலையை யும் பேராசையின் வன்மையையும் உணராமல் இருந்த நிலை யைக் கூறினார்.

அடியேன் மனதில் ஓர் ஐயப்பாடு. அறிஞர்கள் ஏற்றுக் கொள்வார்களா என்பதுதான் அது. முந்தின பாட்டில் "முருகன், குமரன், குகன் என்று மொழிந்து — உருகும் செயல் தந்து உணர்வென்றருள்வாய்" என்று கேட்டுவிட்டார். முருகனே குருநாதனாக எழுந்தருளி ஆட்கொண்டு உபதேசமும் செய்து கவிபாடும் வல்லமையையும் தன் அருளையும் கொடுத் தருளியிருக்கும்போது மேலும் அவனிடம் கேட்கவேண்டியது ஒன்றுமில்லை. அவனே நமது தேவைகளை அறிவான். அவனால் ஆட்கொள்ளப்பட்டதை விட வேறு பேறு இருக்கு

முடியாது என்று சும்மா இராமல், மேலும் தனக்கு "உருகும் செயல் தந்து உணர்வென்றருள்வாய்" என்று கேட்டு விட்டோமே; இது பேராசையில்லையா? இந்த ஆசை உன் அருளையே கோரும் ஆசையானலும், நீ ஆட்கொண்ட பின்னும் நான் ஏதோ கேட்டுவிட்டேனே, இந்தப் பேராசை என்னை விட்டகலாதா என்று தன்னை நொந்துகொள்ளுகிருரா என்று கேட்கத் தோன்றுகிறது. இப்பொருள் பொருந்துமோ, பொருந்தாதோ அறியேன். என் சிற்றறிவுக்கெட்டியதை அறிஞர் முன் சமப்பித்து விட்டேன். கொள்ளுவதோ, தள்ளுவதோ அவர்கள் பாடு. இதைத் தொடர்ந்தே அடுத்த பாட்டிலும் தான் பெற்ற கல்வியும் மெய்யறிவும் வேலவர் தந்ததனுல் பிரபஞ்சப்பற்றை ஒழித்து இருக்கவேண்டுமென்று உபதேசிப்பதால் நான் கொண்ட பொருளும் ஒவ்வும் என்பது என் நம்பிக்கை.

## பதினேழாவது பாட்டு

யாமோதிய கல்வியு மெய்யறிவுந்
தாமே பெற வேலவர் தந்தனராற்
பூமேன் மயல் போயற மெய்ப்புணர்வீர்
நாமே நடவீர் நடவீரினியே.

### பதவுரை.

யாம் ஓதிய கல்வியும்—நாம் படித்த படிப்பும், மெய்யறிவும்—மெய்ஞ்ஞானமும், தாமே பெற—நாம் பெறும்படி, வேலவர்—முருகப்பிரான், தந்தனரால்—கொடுத்தருளினராதலாலே, பூமேல்—புவியின் மீது, மயல்—ஆசை, போய் அற—நீங்கி அற்றுப்போகும்படி, மெய்—உண்மைப் பொருளை புணர்வீர்—சேர்பவர்களே, இனியே—இனிமேல், நாமேல்—நாவின் மீது, நடவீர் நடவீர்—ஒழுகி வாழுங்கள் வாழுங்கள்

### விரிவுரை

"பூ மேல் மயல் போய் அறமெய்ப்புணர்வீர்" என்பதனை பிரபஞ்சப்பற்று நீங்கி அறத்தையும் சத்தியத்தையும் கடைப் பிடித்து ஒழுகும் சிலர்களே! என்று விளிவேற்றுமையாக முடிப்பது நல்லது. வித்யாகர்வம் என்பது ஒன்று உண்டு.

நாம் எல்லாம் கற்று விட்டோம், உணர்ந்து விட்டோமென்று ஆணவமுனைப்பிலே மார்தட்டுவது, அவர்கள் தாம் கற்ற கல்வியும் அறிவும் முருகன் அருளால் கிடைத்தது என்று உணரமாட்டார். அத்தகையாரைப்பார்த்து, நீங்கள் கற்ற கல்வியும் அறிவும் முருகன் அருளாலே கிடைத்தது என்பதை உணருங்கள் என்று கூறுகிறார். அவ்வாறு உணருகின்றவர்கள் பிரபஞ்சபற்றிலிருந்து விடுபட்டு தர்மம், சத்யம் என்ற ஒழுக்கங்களைக் கைப்பற்றுவர். அவர்களும் செய்யவேண்டியது ஒன்று உண்டு. தமது கல்வியும் அறிவும் முருகனின் பிரசாதம் என்று கருதுவதோடு நில்லாமல் "நாமேல் நடவீர்" அதாவது நாவைப் பெற்ற பயன் ஓதுவது மட்டுமல்ல, முருகன் நாமாவை எப்பொழுதும் சொல்லிக்கொண்டிருப்பது தான். அப்பொழுதுதான் அவர்கள் கடைப்பிடித்த தர்மம் சத்யம் என்ற ஒழுக்கம் பயன் கொடுக்கும். 'இனியே' என்பதில் தாம் கற்ற கல்வியும் ஞானமும் முருகனருளால் வந்தது என்பதையுணர்ந்து அறவாழ்க்கையும் மெய்யும் கடைபிடித்து ஒழுகியபின் அவன் நாமாவையே நாத்தழும்பேற ஜபித்து உங்கள் தர்ம ஸத்ய வாழ்க்கையை நடத்துங்கள் என்று கூறுகின்றார்.

இனி அருணகிரியார் தாம் முருகனால் ஆட்கொள்ளப்பட்ட போதே தனக்கு மெய்யறிவும் ஸகல வித்தைகளும் உண்டானதாகக் கூறுகின்றார். வேடிச்சி காவலன் திருவகுப்பில்,

"அறிவும் அறிதத்துவமும் அபரிமித வித்தைகளும்
அறியென இமைப்பொழுதில் — வாழ்வித்த வேதியன்"

என்கிறார். திருப்புகழில் பல பாடல்களில் முருகன் தனக்குக் கலைஞானமும் மெய்ஞ்ஞானமும் அருளியதைக் குறிப்பிட்டிருக்கின்றார். சமாஜப்பதிப்பில அகரவரிசையில் கொடுத்துள்ள திருப்புகழ் 154ம் பாடலில்

"ஆறுத ஞான புத்தியைக் கொடுத்தும்,
ஆராயு நூல்களிற் கருத்தளித்தும்"

என்றும், 767ம் திருப்புகழில்,

"தலைநாளிற் பதமேத்தியன்புற
உபதேசப் பொருளூட்டி மந்திர

தவஞானக் கடலாட்டி என்றனை – அருளாலுன்
சதுராகத்தொடு கூட்டி யண்டர்கள்
அறியா முத்தமிழ் ஊட்டி முண்டக
தனிர் வேதத்துறை காட்டி.........."

என்று பாடியுள்ளார். 595, 629 திருப்புகழ்களையும் பார்க்க. கந்தரலங்காரத்தில் "நாலு கவி த்யாகா" என்கின்றார்.

இவற்றையெல்லாம் பார்க்கும்போது இப்பாடலிலும் தனக்கு முருகன் கல்வி ஞானமும் மெய்ஞ்ஞானமும் ஒருங்கே அருள அதனால் தனக்கு பிரபஞ்சப்பற்று நீங்கி மெய்வாழ்வு பெற்று அவன் நாமமேபாடிக்காலம் கழித்ததை வியந்தோதும் முறையில் நெஞ்சோடு கிளத்தல் துறையில் பாடினாரோ என்று தோன்றுகின்றது.

ஞானசம்பந்தப் பிள்ளையாருக்கு திருமுலைப்பால் அருளிய அத்தனமே,

"உவமை யிலா கலைஞானம்
உணர்வரிய மெய்ஞ்ஞானம்"

இரண்டையும் பெற்றது போன்று அருணகிரியார் 'யாம் ஓதிய கல்வி' என்பதனில் கலைஞானத்தையும், 'மெய்யறிவும்' என்றதில் மெய்ஞானத்தையும பெற்றார் என்று கொள்ளலாம். கல்வி வேறு மெய்ஞானம் வேறு என்பதனை உணரவேண்டும். முண்டகோபநிஷத்தில் சௌனகர், அங்கிரஸ்ஸைக்கேட்க, அவர் பரஞானம் அபரஞானம் என இரண்டு என்று கூறுவதை இங்கு ஒப்பு நோக்கலாம். அபரஞானம் என்பது கலைஞானம். பரஞானம் என்பது மெய்ஞானம். "அறம் மெய்புணர்வீர்" என்றது வேதத்தில் விதித்த "தர்மம் சர" "ஸத்யம் வத" என்ற ஒழுக்கமுறை எனினுமாம். அல்லது போய் அற என்று கொண்டு மெய்புணர்வீர் என்று பிரித்து "ஸத்" பொருளையடைந்து ஜீவன் முக்தரான நிலைமையாயும் கொள்ளலாம். "பூேதல் மயல்" என்றது வெளதிகப்பற்று. பிரபஞ்ச விஷயங்களை நுகர்வதில் ஆசை. முன்பு கூறப்பட்ட "அகம் ஆடை மடந்தையர்" போன்றவை, "சகமாயை" என்று குறிக்கப்பட்டது. "புணர்வீர்" என்பதை புணருங்கள் என்ற முன்னிலை வினைமுற்றாகவும், புணருகின்றவர்களே! என்று விளிவேற்றுமை ஏறிய பெயர்ச்சொல்லாகவும்

கொள்ளலாம். கந்தரலங்காரத்தில் இவ்வாறு பிரபஞ்சப்பற்று கொண்டவர்களைப் பார்த்துக் கூறும் ஒரு பாடல் அமைந்துளது.

"கூர்கொண்ட வேலனைப் போற்றாமல்
ஏற்றங்கொண்டாடுவீர்காள்!
போர்கொண்ட காலன் உமைக்கொண்டு
போமன்று பூண்பனவும்
தார்கொண்ட மாதரும் மாளிகையும்
பணச்சாளிகையும்
யார்கொண்டு போவர் ஐயோ கெடுவீர்!
நும் அறிவின்மையே" (78வது பாடல்)

இன்னொரு பாடலில் (20)

"கோழிக்கொடியன் அடிபணியாமல் குவலயத்தே
வாழக்கருதும் மதியிலிகாள்! உங்கள் வல்வினைநோய்
ஊழிற் பெருவலி உண்ண ஒட்டாது உங்கள்
அத்த மெல்லாம்
ஆழப்புதைத்து வைத்தால் வருமோ
நும் அடிப்பிறகே?"

என்றும் கூறுவது காண்க.

## பதினெட்டாம் பாட்டு

உதியா மரியா உணரா மறவா
விதிமா லறியா விமலன் புதல்வா!
அதிகா! அநகா! அபயா! அமரா
பதிகாவல! சூர பயங்கரனே!

### பதவுரை

உதியா மரியா—பிறப்பு இறப்பு இல்லாத, உணரா மறவா—நினைவும் மறதியும் இல்லாத, விதிமாலறியா—நான் முகனும் திருமாலும் தேடிக் காணமுடியாத, விமலன் புதல்வா—இயற்கையாகவே மலங்களிலிருந்து நீங்கிய பரம சிவனின் குமாரனே, (அமலன்—மலமில்லாதவன், விமலன்—மலங்களுக்கு அப்பாற்பட்டவன், நிமலன்—மலங்களால் பீடிக்கப்படாதவன்) அதிகா—ஒப்புயர்வற்ற மேன்மை,

ஏற்றம், பொலிவு இவற்றை உடையவனே (அதிகன் என்பதற்கு சிவன் என்றே பொருள் உண்டு) அநகா—பாப மற்றவனே (இதற்கும் சிவன் என்ற பொருள் உண்டு) அபயா—ஸர்வலோக சரண்யனே அச்சமறுத்தவனே, (இதற்கும் கடவுள் என்ற பொருள் உண்டு) அமராபதி காவல-தெய்வலோகத்திற்கு காவலனாக இருப்பவனே, சூர பயங்கரனே—சூரர்களுக்கு அச்சத்தை விளைவித்தவனே.

## விரிவுரை

அமராபதியைக் காத்தவனும் சூரரை அழித்தவனுமாகிய முருகன் வேறு யாருமில்லை. அவன் சிவப்பரம்பொருளேதான் என்று சிவனுக்கும் முருகனுக்கும் அபேதம் கூறவந்தது இப் பாடல். கந்த புராணத்தில பார்வதி தேவியாருக்குச் சிவ பெருமான் முருகன் தத்துவம் கூறுமிடத்து,

"நன்முகம் இருமூன்றுண்டாம் நமக்கவைதாமே, கந்தன்
தன்முகமாயுற்ற தராக பிரமமாகி
முன்மொழிகின்ற நந்தம் மூவிரண் டெழுத்துமொன்றாய்
உன்மகன் நாமத் தோராறெழுத்தென உற்றவன்றே"

"ஆதலின் நமது சக்தி அறுமுகன் அவனும் யாமும்
பேதகமன்றால் நம்போல் பிரிவிலன் யாண்டும் நின்றான்
ஏதமில் குழவி போலவான் யாவையும் உணர்ந்தான் சீரும்
போதமும் அழிவில் வீடும் போற்றினர்க்கு அருளவல்லான்"

என்று கூறுவது ஒப்பு நோக்குக. முருகனின் விச்வரூபத்தில் சகலமும் அவனுள் அடங்கியிருக்கக் கண்ட தேவர்கள் கூற்றாகக் கூறினதில்

"அம்புவி முதலாம் பல்பேரண்டமும் அங்கங்குள்ள
உம்பரும் உயிர்கள் யாவும் உயிரிலாப் பொருளும், மாலும்
செம்பதுமத்தினோனும் சிவனுனோடும் செறிதல்
கண்டோம்
எம்பெருமானின் மெய்யோ அகிலமும் இருப்பதம்மா,"

என்று பிரம்மா, விஷ்ணு, சிவன் ஏனைய தேவர்கள் யாவரும் ஸமஷ்டியானதே முருகன் என்றார்.

சிவகுமர அபேதம் அருணகிரிநாதரின் பல திருப்புகழ் பாடல்களில் காணப்படுகின்றது. "திரிபுர மெரி செய்த கோவே," என்றும் "நமசிவாயப் பொருளானே." என்றும் இன்னும் பல்வேறு இடங்களில் சிவப்பரம்பொருளே முருகன் என்பதை வலியுறுத்துகின்றார். தணிகைப்புராண ஆசிரியரும் "தனக்குத்தானே மகனாகிய தத்துவன்" என்று கூறுகின்றார். ஆக கௌமார மதசித்தாந்தப்படி முருகன் உலகெலாமாகி, அவற்றோடு ஒன்றாய், உடனாய், வேறாய் நிற்கும் முழுமுதற் கடவுளே என்றும், சிருஷ்டி ஸ்திதி லய கர்த்தாக்களான மூவர்க்கும் மேலான துரீயப் பொருள் என்றும் நிர்ணயம் செய்கின்றார். இன்னும் வடமொழி ஸ்காந்தத்தில் சிவன் பார்வதிக்குக் கூறும்போது,

"ஹந்த தே கதயிஷ்யாமி ரஹஸ்யம் ச்ருணு ஸுந்தரி ।
சிவோ அஹம் நிஷ்கள: பூர்ண: சக்தி: த்வம் அநபாயினி ॥

பஞ்சக்ருத்யபர: ச அஹம் பஞ்ச வக்த்ர: ஸதாசிவ: ।
ஏக வக்த்ராஸி பஹுதா பிந்நாபி பரமேச்வரி ॥

த்வந்மயோ மன்மயோ யஸ்மாத் ஷட்வக்த்ர: பரிகீர்த்தித:
பஞ்சக்ருத்யபரோ அயம் ச ப்ரபஞ்சஸ்யாஸ்ய லீலயா ॥,

என்றார். இதன் பொருள்,

"ஓஹோ! இது மிகவும் ஆச்சரியம் ஸுந்தரி! அந்த ரகஸ்யத்தைக் கூறுகிறேன் கேள். நானே களங்கமற்றவன், பரிபூரணன், சிவன் நீயோ என்றும் அழியாத பராசக்தி. நான் பஞ்சக்ருத்யங்களையும் செய்வதில் ஈடுபட்டவன். நீ பலவாய் விளங்கினாலும் ஒரே முகத்தையுடைய பரமேச்வரி, உன் ஸ்வரூபத்தையும் என் ஸ்வரூபத்தையும் சேர்த்து ஆறுமுகங்களோடு, இவன் விளங்குகிறான் என்று,

"ஈசனே அவன் ஆடலால் மதலையாயினன் காண்
ஆசிலா அவன் அறுமுகத்துண்மையால் அறிநீ
பேசில் ஆங்கவன் பரனொடு பேதகம் அல்லன்
தேசுலா வகன் மணியிடைக் கதிர் வருதிறம்போல",

என்பது (கந்தபுராணம் மகேந்த்ர காண்டம் 12ம் படலம்) வீரவாகுதேவர் கூற்று.

## பத்தொன்பதாம் பாட்டு

வடிவுந் தனமு மனமுங் குணமுங்
குடியுங் குலமுங் குடிபோகியவா
அடியந் தமிலா வயில் வேலரசே
மிடியென் றொரு பாவி வெளிப்படினே

### பதவுரை

அடியந்தமிலா—பிறப்பும் இறப்பும் இல்லாத, அயில் வேலரசே—கூரிய வேலாயுதத்தையுடைய இறைவனே, மிடிஎன்றொருபாவி—வறுமை என்ற ஒரு பாவி, வெளிப்படின்-வெளிப்பட்டால், தோன்றினுல், வடிவும்—அழகும், தனமும்-இருக்கும் இடமும், மனமும் குணமும்—நல்லமனமும், நல்ல குணங்களும், குடியும்—நல்ல குடிப்பிறப்பும் குலமும்—வம்ச பரம்பரையும், குடிபோகியவா—விட்டு நீங்கி விடுகின்றவகை என்ன அதிசயம்.

### விரிவுரை

அருணகிரிநாதர் நல்ல குடியிலும், குலத்திலும் பிறந்தவராயும் நல்ல செல்வந்தராயும், இருந்தார். விலை மாதர் பழக்கத்திலும், குடி மாம்சம் அருந்துவதிலும் ஈடுபட்டவராய் வறுமையுற்ருர் என்பது இவரது திருப்புகழ் பாடல்களிலிருந்து ஊகிக்கலாம். 105வது பாடலில் "வறுமையாகிற தீயின் மேற்கிடந்து நெளிய நீள் புழுவாயினேற்கிரங்கி" என்றும், 1276ம் பாடலில், "புலிவேட்டைக்குளே வரு பசுவைப்போல் மிடியாற்பட்ட பாடொரு கதையைப்பாரினில் ஆர்க்குச்சொல்வேன் இனி" என்றும் கூறியிருக்கிருர். இதிலிருந்து வறுமையால் பெருவேதனைப் பட்டார் என்று தெரிகிறது. வறுமையுற்றவரை உலகம். அவனது குலத்தையும் குடியையும் மனத்தையும் குணத்தையும் பாராது அலக்ஷியம் செய்வது இயல்பு ஏழை சொல் அம்பலம் ஏருது என்பது பழமொழி. செல்வமிருந்தபோது யாவரும் மதித்தனர். வறுமையுற்றபோது யாவரும் இகழ்ந்தனர். ஆக வறுமையால் இவருடைய வடிவுக்கும் இடத்துக்கும் மனத்துக்கும், குணத்துக்கும், குடிக்கும், குலத்துக்கும் மரியாதை

கொடுப்பவரில்லை, என்பதை இப்பாடலில் கூறுவதாகக் கொள்ளலாம்.

அதனை விடுத்து தான் வறுமையுற்றதால் அழகை யிழந்தேன், செல்வத்தை யிழந்தேன், மனத்தை யிழந்தேன், குணத்தை இழந்தேன், குடியை மறந்தேன், குலத்தை மறந்தேன், அடாது செய்தேன், மானங்கெட்டு குணங்கெட்டு அலைந்தேன், என்று பொருள் கொள்வது சிறப்பாகத் தோன்றவில்லை.

இனி செல்வமிருந்தபோது நான் என் அழகு, செல்வம் மனம், குணம், குடி, குலம் இவற்றில் பெருமைகொண்டு அதிகர்வியாக இருந்தேன். வறுமையுற்றபோது இவையெல்லாம் நீங்கினதால் என் கர்வம், அகம்பாவம் குறைந்தது என்று சொல்லவும் கூடும்.

செல்வமிருந்தபோது செல்வச் செருக்கால் இறைவனை நினைக்கவில்லை வறுமையால் இவையெல்லாம் என்னை விட்டகன்றபோது என் அகம்பாவம் மறைந்து இறைவனை நினைக்கலானேன். ஆக வறுமையாலும் ஓர் அனுகூலமே உண்டாயது என்று கூறின், "மிடியென்றொருபாவி" என்று கூறியிருக்க மாட்டார்.

அல்லது வறுமை வந்தால் இவையாவும் சாதாரணமாய் குடியோடிப்போகும். மனமும் குணமும் மாறும், குடிப் பெருமையும் குலப்பழமையும் மறந்து இழிவான செயலில் ஈடுபடத்தூண்டும். அவ்வாறு ஆகாமல் வறுமையிற் செம்மையாயிருக்கவேண்டுமென்றும் கருத்தாகக் கூறவும் இடமுண்டு. ஓர் உரையில் இவையாவும் என்னை விட்டகன்றன. உன்னைத்தவிர வேறு எனக்கு கதி ஒன்றுமில்லை என்று கூறுவதாகக் காணப்படுகின்றது.

தான் குலத்தையும் குடியையும் மறந்து வறுமையின் காரணமாக பிறரிடத்தில் குற்றேவல் செய்து பொருள்தேடி அதையும் விலைமாதர் வகையில் செலவிட்டார் என்பது 525வது திருப்புகழ் பாடலிலிருந்து ஊகிக்கலாம். மனமும் குணமும் கெட்டது, வறுமையால் பீடிக்கப்பட்டபோது போலிச்சந்நியாசி வேடங்கொண்டு பொருளீட்டி, அதையும் விலை மாதர்க்கு அர்ப்பணித்தாரென்று 769வது பாடலில் புலனாகிறது. மேலும் பல செல்வந்தர்களைப் புகழ்ந்து பாடிக்

கிடைத்த பரிசுகளையும், விலை மாதர் வழியில் செலவிட்டார் என்பது 105, 1062ம் பாடல்களில் தெரிகின்றது. இன்னும் விலை மாதரையே புகழ்ந்துபாடி அவரோடு இணக்கம் கொண்டார் என்பது 179, 1265 பாடல்களில் புலப்படுகிறது ஆக வறுமையினால் இவர் ஈனமான செயல்களில் ஈடுபட்டாரென்று ஊகிக்க இடமுண்டாதலால் மனமும், குணமும், குடியும், குலமும் குடிபோகியதாகக் கூறுகின்றார். இது ஓர் அதிசயம் என்கின்றார் வறுமையாயிருத்தல் மட்டும் போதாது, வறுமை வெளியில் தெரியவேண்டும். அவ்வாறு வெளிப்பட்டால்தான் பிறர் இவரை மதிக்கமாட்டார்கள். நேற்றுவரை இவரை மதித்து வந்தவர்கள், இவர் வறுமையுற்றவர் என்று வெளியில் தெரிந்தவுடன் கைவிட்டனர் என்பது இவருக்கு ஆச்சரியத்தை உண்டாக்குகிறது. மிடி என்ற பாவி என்பதால் அவர் பட்ட துன்பம் இவர் உள்ளத்தில் ஆழப் பதிந்திருக்கவேண்டும்.

கந்தரலங்காரப் பாடல் ஒன்றில்

> "முடியாப் பிறவிக் கடலில் புகார் முழுதுங் கெடுக்கும்
> மிடியாற் படியில் விதனப்படார் வெற்றிவேல் பெருமான்
> அடியார்க்கு நல்ல பெருமான் அவுணர் குலமடங்கப்
> பொடியாக்கிய பெருமான் திருநாமம் புகல்பவரே",

என்று கூறுவது ஒப்பு நோக்குக.

பொதுவாக, மிடியின் கொடுமையும் அதனால் மனம், குணம், குலம் குடி இவை கெடுதலும், வறுமையுற்றவன் என்று தெரிந்த மாத்திரத்தில் முன்பு நெருங்கிப் பழகியவர்களும் கைவிடுதலாகிய உலக இயல்பையும் கூறியிருக்கிறார் என்னலாம். வறுமையுற்ற போதும், அறிவு கலங்காமல், குணம் கெடாமல் இருக்கவேண்டும், அதாவது வறுமையில் செம்மை வேண்டும் என்பது உபதேசம்.

## இருபதாவது பாட்டு

**அரிதாகிய மெய்ப்பொருளுக்கு அடியேன்**
**உரிதா வுபதேச முணர்த்தியவா**
**விரிதாரண விக்ரம வேளிமையோர்**
**புரிதாரக நாக புரந்தரனே**

## பதவுரை

*விரிதாரண*—(வினைத்தொகை) விரிந்த சமநோக்குள்ளவனே அல்லது மிகுந்த உறுதியுள்ளவனே, *விக்ரம*—பராக்ரம சாலியே, *வேள்*—மன்மதனுக்கொப்பான அழகையுடையவனே, *இமையோர் புரிதாரக*—தேவர்களுக்கு ஆதாரமானவனே! தேவர்கள் விரும்பும் பிரணவப் பொருளே! *நாக புரந்தரனே*—மலைகள் போன்ற புஜங்களையுடையவனே! அல்லது தேவலோகத்தை ரக்ஷித்தவனே, மலையில் உறைபவனே, மலைக்கிழவோனே, *அரிதாகிய*—சாமான்யருக்குக் கிடைக்கக்கூடாத, *மெய்ப்பொருளுக்கு*—மெய்ஞ்ஞானத்தை அடைவதற்கு, *அடியேன் உரிதா*—அடியேனும் தகுதி உடையவன் என்று (திருவுளத்திற் கருதி), *உபதேசம் உணர்த்தியவா*—உபதேசம் செய்ததின் மூலம் அம்மெய்ப் பொருளை நானும் அறியும்படி உணர்த்தியவாறு என்னே!

## விரிவுரை

மாணிக்கவாசகர் போன்று அருணகிரியாரும் பல இடங்களில் தனது தகுதியின்மையையும் இறைவனுடைய பெருங் கருணையையும் எடுத்தோதியிருக்கின்றார்.

"கடையவனேனைக் கருணையினாற் கலந்து ஆண்டுகொண்ட."—
நீ விண்.,

"நாயினேனை ஆவ என்று அருளு நீ" — திருச்சதகம் 74,

"அறிவனே அமுதே அடி நாயினேன்
அறிவனாகக் கொண்டோ எனை ஆண்டது?
அறிவிலாமையன்றே கண்டது ஆண்ட நான்
அறிவனோ அல்லனோ அருள் ஈசனே" — திருச்சதகம் 50.

(கந்தரனுபூதி பாடலின் அமைப்பே இதில் இருப்பது நோக்குக)

"செறியும் இப்பிறப்பிறப்பு இவை நினையாது செறிகுழலார் செய்யும்
வெறியும் கேழ்மையும் கெண்டை அம் கண்களும் உன்னியே கிடப்பேனை

இறைவன் எம்பிரான் எல்லையில்லாத தன் இணைமலர்க்
கழல் காட்டி
அறிவுதந்து என்னை ஆண்டு கொண்டருளிய அற்புதம்
அறியேனே"

இந்த அற்புதப் பத்துச் செய்யுள் நாம் எடுத்துக்கொண்ட பாடலுக்கும் அருணகிரியார் வாழ்க்கைக்கும் எவ்வளவு பொருத்தமாய் அமைந்திருக்கின்றது பாருங்கள்.

அருணகிரியார் தான் பெற்ற மெய்ப்பொருள் உபதேசத்தை கந்தரனுபூதியிலேயே 8வது பாடலில் கூறியதோடு அல்லாமல் கந்தரலங்காரம் 8வது பாட்டில் இம்மெய்ப் பொருளையே விளக்கியுமிருக்கிறார்.

" ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்துச்சியின்மேல்
அளியில் விளைந்த தோரானந்தத்தேனை அநாதியிலே
வெளியில் விளைந்த வெறும் பாழைப்பெற்று
வெறுந்தனியைத்
தெளிய விளம்பியவா முகமாறுடைத் தேசிகனே"

என்றும், 9ம் பாட்டில்,

" தேனென்றும் பாகென்றும் உவமிக்கொணு மொழிந்
தெய்வ வள்ளி
கோன் அன்று எனக்கு உபதேசித்தது ஒன்று உண்டு
கூறவற்றோ
வான் அன்று, காலன்று, தீயன்று, நீரன்று,
மண்ணுமன்று
தான் அன்று, நானன்று, அசரீரியன்று, சரீரியன்றே"

என்றும் 10ம் பாட்டிலும் திருப்புகழ் பாடல்களிலும் கூறு கின்றார்.

## இருபத்தி ஒன்றும் பாட்டு

கருதா மறவா நெறிகாண வெனக்
கிருதாள் வனசந்தர வென்றிசைவாய்
வரதா முருகா மயில் வாகனனே
விரதா சுரசூர விபாடணனே.

### பதவுரை

கருதா மறவாநெறி — நினைப்பு மறப்பு என்ற இரண்டும்கெட்ட நிர்விகல்ப நிலையை, காண எனக்கு — நான் என் அறிவால் பார்க்க அடியேனுக்கு, இருதாள் வனசம் தர — இரண்டு திருவடித்தாமரைகளை அளிப்பதற்கு, என்று இசைவாய் - என்று திருவுள்ளம் பற்றுவாயோ, வரதா, முருகா — வரையாது கொடுக்கும் வள்ளலே, அழகனே, மயில் வாகனனே — மயிலை வாகனமாக உடையவனே, விரதா — ஸத்ய ஸங்கல்பனே, சுர — தேவாதி தேவனே, சூர் — சூரபத்மனை, அவி — அழித்த, பாடணனே — கல்போன்ற திண்மையுடையவனே.

### விரிவுரை

(144) **வரதா :—**

"வேண்டிய போதடியர் வேண்டிய போகமது
வேண்டிய வறுதவும் — பெருமாளே" (604)

"வேண்டுமடியர் புலவர் வேண்ட
அரியபொருளை வேண்டுமளவி உதவும் — பெருமாளே" (603)

"நசையு நர்க்கார்த்தும் இசை பேராளா
அலந்தோர்க் களிக்கும் பொலம் பூட் சேஎய்
மண்டமர் கடந்நின் வென்றுடலத்துப்
பரிசிலர் தாங்கும் உருகெழு நெடுவேள்", (நக்கீரர்)

முருகனுக்கு கலியுக வரதன் என்றே பெயருண்டு.

**விரதா :** விரதன் என்பதற்கு "யோகி" என்ற பொருளும் உண்டு. அல்லது அடியார்களை ரக்ஷிக்கும் விரதத்தைப் பூண்டவன் என்றுமாம், அல்லது விரதத்தால் அடையப்பட்டவனே. விரதம் என்பது வேதத்தின் கர்மகாண்டத்தில் கூறப்பட்ட யாக யக்ஞாதிகளையும் குறிக்கும். அவற்றிற்கு அதிஷ்டாதாவாக இருக்கும் யக்ஞ புருஷன் என்றும் பொருள் கொள்ளலாம்.

**சூர்அவிபாடணன் :—** சூர+விபாடணன் என்றும் பிரித்து சூரனை அழித்தவனே என்றும் பொருள் கூறுவர். விபாடம் என்பது அம்பு அல்லது மரணம் என்றும் பொருள்.

**இருதாள் வனசம் தர :—** அருணகிரியார் திருவடி தரிசனம் திருவடி தீக்ஷை பெற்றார் என்பதனைத் திருப்புகழ் பாக்களில் பல இடங்களில் பார்க்கின்றோம்.

" தகையா தெனக்குன் அடிகாண வைத்த
தனி ஏரகத்தின் — முருகோனே " (620)

" அருணை நகர் மிசை கருணை யொடருளிய
பரமவொரு வசனமும் இரு சரணமும் — மறவேனே " (1070)

" மருளும் அறிவினன் அடிமுடி அறிகிலன்
அருணை நகர்மிசை கருணை யொடருளிய
மவுன வசனமு மிருபெருசரணமும் — மறவேனே " (1194)

**திருவடி தீக்ஷை பெற்றது :—**

" இபமுகவனுக்குகந்த இளையமுருக் கடம்ப
எனது தலையிற் பதங்கள் — அருள்வோனே " (443)

" கிண்கிணி முகவித பதயுக் மலர்
தந்த பேரருள் கனவிலு நனவிலு — மறவேனே " (595)

" அணுகி முன் அளித்த பாதம் — அருள்வாயே " (1131)

**குறிப்பு :—** இந்தப்பாடல் மிக முக்கியமானது. அருணகிரிநாதர் உயிர் மீது வெறுப்புற்று தற்கொலை செய்துகொள்ள யத்தனித்ததையும் அச்சமயம் முருகன் வந்து ஆட் கொண்டதையும் அருமையான அகச்சான்று கொண்ட திருப்புகழிது.

" காமுகன் அகப்பட்ட ஆசையை மறப்பித்த
கால்களை மறக்கைக்கும் வருமோதான் " (994)

" தலைநாளிற் பதமேத்தி அன்புற
உபதேசப் பொருளூட்டி " (767)

இதுமட்டுமன்றி முருகனின் நடன தரிசனம் கொடுங்குன்றம், செந்தில்பதி, திருவெண்ணெய்நல்லூர், வயலூர், விராலிமலை முதலிய இடங்களில் கண்டிருக்கின்றார். வயலூரில்,

" வயலி நகரியில் அருள்பெற மயில் மிசை
உதவு பரிமள மதுகர வெகுவித
வனசமலரடி கனவிலு நனவிலு — மறவேனே " என்றார்.

கந்தரலங்காரத்தின் 15வது பாடலில் தனது பாவடி ஏட்டில் முருகன் திருவடிபட்டதாகக் கூறுகின்றார். 40-வது பாடலில்

" ....................................... அவன்
காலபட்டழிந்ததிங்கு என் தலை
மேல் அயன் கையெழுத்தே " என்றார்.

கந்தரனுபூதிப் பாடல் 44-ல்

" சாடும் தனி வேல் முருகன் சரணம்
சூடும்படி தந்தது சொல்லுமதோ "

என்று இந்த 21வது பாடலில் கேட்கும் பிரார்த்தனை நிறைவேறிய தாகப் பாடியுள்ளார்.

இதுபோன்று நாயன்மார்களில் அப்பருக்கும், சுந்தரருக்கும் இறைவன் திருவடி சூட்டினதை இங்கு ஞாபகப்படுத்துகிறோம்.

## இருபத்திரண்டாவது பாட்டு

காளைக்குமரேசன் எனக் கருதித்
தாளைப்பணியத் தவம் எய்தியவா
பாளைக்குழல் வள்ளிபதம் பணியும்
வேளைச்சுர பூபதி மேருவையே

### பதவுரை.

பாளைக்குழல் வள்ளி — கூந்தல் பனைப் பாளைபோன்று நீண்டு அடர்ந்த கூந்தலையுடைய வள்ளியம்மையின், பதம் பணியும் — பாதங்களை ஆச்ரயிக்கின்ற, வணங்குகின்ற, வேளை — முருகனை, சுர பூபதி மேருவையே — தேவலோகத்திற்குத் தலைவனும் மேருமலைபோன்ற கம்பீரமும், உயர்வும் திண்மையும் கலங்காமையுமுள்ளவனையே, காளைக் குமரேசன் — ரிஷபம்போன்ற அழகும், நடையும், அஞ்சாமையுமுடைய குமரக்கடவுள், எனக்கருதி — என்று நிர்ணயம் செய்து அவனது தாளைப்பணிய — திருவடிகளை வணங்கும்படியான, தவம் எய்தியவா — தவத்தை நான் பெற்றவகை அதிசயிக்கத்தக்கது.

### விரிவுரை

" வள்ளி பதம் பணியும் முருகனே குமரசன்," என்ற விஷயம் முன், " திணியான மனோசிலை மீது " என்றபாடலுக்கு எழுதிய விரிவுரை ஈண்டும் பொருந்தும். பக்குவ ஆன்மாக்களை அடைவதில் இறைவன் ஆவல்கொண்டு, அவனே வலுவில் சென்று ஆட்கொள்வான் என்ற

கருத்தில் அவ்வாறு செய்யும் முருகனே, இம்மையிலேயே ஜீவன் முக்தி அருளும் குமாரனாக இருக்கிறான் என்று பொருள். முன்பு குமாரன் என்ற சொல்லின் உள் பொருள் விளக்கப்பட்டிருக்கிறது. "கு" என்றால் பிருதிவி என்றும், "மா" என்றால் மோக்ஷ லக்ஷ்மி என்றும், "ரா" என்றால் கொடுத்தல் என்றும், மந்த்ரார்த்த மேற்கோளோடு 15வது பாட்டில் கூறினோம். அதைப் பார்க்கவும்.

ஆக இப்பாட்டில் 6ம் பாட்டுத் தத்துவமும் 15வது பாட்டுத் தத்துவமும் சேர்ந்து அமைந்திருக்கின்றது. ஆன்ம பரிபக்குவ மெய்திய உயிர்களை இறைவனே குருநாதனாகச் சென்று ஆள் கொள்வான் என்பது சிவஞானபோதம் 8ம் சூத்திர முடிபு. அவ்வாறு இறைவன் ஆட்கொள்ளும் காரணத்தாலேயே ஜீவன் முக்தி நிலை ஏற்படுகின்றது. இதுவே நிர்விகல்ப சமாதி நிலை என்றும் கூறுவர். மாணிக்கவாசகர் இவ்வாறு ஆட்கொள்ளப்பட்டு ஜீவன் முக்தரானவர். அதுபோன்றே அருணகிரியாரும் அந்த அநுபவத்தைத்தான் இப்பாட்டில் கூறுகின்றார். வள்ளியை மணந்த முருகனே குமரக்கடவுள் என்பது சாமான்யமான கருத்தல்ல என்பதை நாம் உணரவேண்டும்.

நிற்க, "குமரேசன் எனக்கருதி தாளைப்பணிய" என்ற சொற்றொடரில், "என," என்பதால், என்று வாயினால் சொல்லியும், 'கருதி' மனதால் நினைத்தும், "தாளைப்பணிய," என்பதால், உடம்பால் வணங்கியும் என்று கூறியதாகவும் பொருள் கொள்ள இடமுண்டாயினும், "மேருவையே குமரேசனாகக் கருதி", என்பதில் ஆழ்ந்த கருத்து இருக்கிறது. ஆதலால் இதுவே சிறப்பான பொருளாகக் கொள்ளலாம். வள்ளி மணாளனே குமரக்கடவுள் என்று சொல்வது சுலபம். இதில் என்ன ஐயம் உளது? என்றுகூட கேட்கத்தோன்றும். ஆனால் அப்பதங்களில் அடங்கிய உட்பொருளை சிந்தித்தால் ஆழ்ந்த கருத்து வெளியாகின்றது. அருணகிரியாருக்கு முருகன் வள்ளியை மணந்தவன் என்று கூறுவதில் அலாதி திருப்தி இருக்கிறது. தனக்கு வலிய வந்து ஆட்கொண்டு செய்த உபதேசத்தை வள்ளியைக் கலியாணஞ் செய்ததோடு ஒப்பிட்டுக் கந்தரலங்காரத்தில் கூறுகிறார்.

"சின்னம் குறித்தடியேன் செவி
நீ அன்று கேட்கச் சொன்ன
குன்னம் குறிச்சி வெளியாக்கி
விட்டது கோடு குழல்

*சின்னங் குறிக்கக் குறிஞ்சிக்*
*கிழவர் சிறுமிதனை*
*முன்னம் குறிச்சியில் சென்று*
*கல்யாணம் முயன்றவனே"* (24வது பாடல்)

## இருபத்திமூன்றுவது பாட்டு

**அடியைக் குறியா தறியாமையினுன்**
**முடியக் கெடவோ முறையோ முறையோ**
**வடிவிக்ரம வேள் மகிபா குறமின்**
**கொடியைப் புணரும்குண பூதரனே**

### பதவுரை

வடி — அழகும் கூர்மையும் பொருந்திய, விக்கிரம — பராக்கிரமம் பொருந்திய, வேல் — வேலாயுதத்தைத் தாங்கிய, மகிபா — ஜகத்திற்கு ஈச்வரனானவனே, குறமின் — குறவர் வளர்த்த மின்னலைப்போன்ற, கொடியை — வள்ளியை, புணரும் — சேருகின்ற, குணபூதரனே — குணக்குன்றே, அடியைக் குறியாது — உன் திருவடிகளில் லக்ஷியம் வைக்காமல், அறியாமையினால் — அவித்தையால், அஞ்ஞானத்தால், மடமையால், முடியக்கெடவோ — முழுதும் அழிந்துபோகவோ, முறையோ முறையோ — இது நியாயமாகுமோ.

### விரிவுரை

*வல்லி என்ற வடமொழிப் பதத்திற்கே கொடி என்று பொருள். கொடி என்றால் அது தாவிப்படர ஓர் கொழும் கொம்பு தேவை, என்பது புலப்படும். அதாவது ஆன்மா சுதந்தரமற்றது. அவாப்த ஸமஸ்த காமனும் ஸர்வ சுதந்தரனும் இருக்கிற இறைவனையே அது பற்றவேண்டுமென்பதுதான் முறை. அதைவிட்டு, அவித்தை யின் காரணமாகத் தனது ஆதாரத்தை அறியாது உயிர்கள் மயங்கு கின்றன. "அடி" என்பதற்கு திருவடி என்பது சாமான்யப் பொருள். அதற்கு "ஆதி, தாது, மூலம், கடவுள்" என்றெல்லாம் பொருள்களிருக்கின்றன. ஆன்மா தன்னையும் அறிவதில்லை, தனக்கு அடியான, ஆதியான முதல்வனையும் அறிவதில்லை. இது அவித்தையால் ஏற்படுவது. இது அசுத்த மாயையின் ஐந்துவகையி லொன்று. 5ம் பாட்டு விரிவுரையில் காண்க.*

இவ்வாறு ஆன்மா மாயையின் வசப்பட்டு அவித்தையின் *காரணமாகத் தன்னையும் அறியாமல் தனது மூலத்தையும் அறியாமல்*

மயங்கிப் பல ஜன்மங்களை யெடுத்து ஈடேறமுடியாமல் உழலும். இவ்வாறு உழலுவது ஆன்ம லக்ஷணத்திற்கும் பொருந்தாது. இறைவனின் கருணைத்திறத்திற்கும் பொருந்தாது என்று இருவகையும் தோன்ற "முறையோ? முறையோ?" என இரட்டித்தார். முன்பு 4ம் பாட்டிலும் "தகுமோ தகுமோ" என்று இரட்டித்ததையும் காண்க. இறைவனருள் கிட்டினுல் அது தன்னையும் உணரும் இறைவனையும் உணரும். ஈண்டும் வள்ளியின் கணவன் என்று குறித்தமையால் அவன் அருள்பெற்ற ஆன்மாவே தனது 'அடி' யாகிய மூலத்தையும் தன்னையும் உணரும் என்று குறிப்பிடுகின்றார். இதனைப் பட்டினத்தடிகள் திருவிடைமருதூர் மும்மணிக்கோவையில் (11ம் திருமுறை)

"இன்னது யான் என்று அறியேன் என்னை
ஏதினும் தேடினேன் யாதினும் காணேன் ...
... ... ...
மங்கை பங்க கங்கை நாயக நின்
தெய்வத் திருவருள் கைவந்து கிடைத்தலின்
மாயப்படலம் கீறித்தூய
ஞான நாட்டம் பெற்றபின் நானும்
நின்பெருந்தன்மையுங் கண்டேன் காண்டலும்
என்னையுங் கண்டேன் பிறரையுங் கண்டேன்
நின்னிலை யனைத்தையும் கண்டேன் என்னை?
நின்னைக் காணு மாந்தர்
தன்னையுங் காணுத் தன்மையோரே",

என்று அழகாகக் கூறுகின்றார்.

ஆக "அடியைக் குறியாது" என்பதில் ஆன்மா தனது மூலமாகிய முதல்வனைத் தேட முற்படாமல், என்று பொருள் கொண்டோம். இதற்கேற்ப வள்ளியைக் கொடி என்பதால் அதற்கு ஆதாரமான கொழுங் கொம்பையும் குறித்தது என்றும் கூறினேம்.

சுருங்கச் சொன்னுல் இப்பாட்டில் அஞ்ஞான இருள் சூழ்ந்த ஆன்மா தனது ஆதாரத்தை உணராது அழியும் என்பதும், வேலைச் சொன்னதால் அஞ்ஞானத்தை அழிக்கும் மெய்ஞ்ஞானத்தைச் சொன்னது என்பதும், மின்கொடியைப் புணரும் என்பதனுல் பக்குவ ஆன்மாவை, அவன் வலிய வந்து கலக்கும் கருணையும், குணபூதரன் என்றதால் இறைவனின் குணபூர்த்தியைக் கூறி, அதோடு ஆன்மாவின் கிஞ்சிக்ஞதையையும் குறிப்பிடுகிறார் என்பதுமான,

அரிய பெரிய சித்தாந்த உண்மைகள் இப்பாட்டில் புலப்படுவது கண்டு தெளிக. இவ்வாறு அறிவார் சிவயோகிகள் என்றும் ஏனையோர் கர்மிகள் என்றும் கூறுகிறார் கந்தரலங்காரம் 26-ம் பாடலில்,

" நீலச்சிகண்டியில் ஏறும் பிரான் எந்த நேரத்திலும்
கோலக் குறத்தி உடன் வருவான் குருநாதன் சொன்ன
சீலத்தை மெள்ளத் தெளிந்தறிவார் சிவயோகிகளே
காலத்தை வென்றிருப்பார் மரிப்பார் வெறும் கர்மிகளே "

## இருபத்திநான்காம் பாட்டு

**கூர்வேல் விழிமங்கையர் கொங்கையிலே**
**சேர்வேனருள் சேரவு மெண்ணுமதோ**
**சூர் வேரொடு குன்று தொளைத்த நெடும்**
**போர் வேல புரந்தர பூபதியே**

### பதவுரை

சூர்வேரொடு குன்று — சூரர் குலத்தையும் கிரௌஞ்சம் என்னும் மலையையும் அடியோடு, தொளைத்த — பிளந்து அழித்த, நெடும் போர் வேல — நீண்டதாயும், போர் செய்ய வல்லதாயுமிருக்கும் வேற்படையை உடையவனே, புரந்தர பூபதியே - இந்திரனுடைய உலகத்திற்குத் தலைவனே, கூர்வேல் விழி — வேல்போன்று வடிவிலும் கூர்மையிலும் ஒத்தகண்களையுடைய, மங்கையர் கொங்கையிலே — பெண்களின் ஸ்தனங்களில், சேர்வேன் — தோய்வதற்கு விருப்பமுள்ள நாயேன் அருள் சேரவும் எண்ணுமதோ — உன்னுடைய திருவருளைப்பெற எண்ணுவேனோ.

### விரிவுரை

ஈண்டும், 9ம் பாடலிலும், 34வது பாடலிலும் ' மங்கையர் ' என்று பன்மையில் கூறியிருப்பதும், 4ம் பாடலில் " மாதொடு " என்று ஒருமையில் கூறியிருப்பதும் கவனிக்கத்தக்கது. 4ம் பாட்டில் ஒருமையில் குறிப்பது ' மனைவி ' என்ற பொருளிலும், 9, 24, 34 பாடல்களில் கூறிய பன்மை ' பரத்தையர் ' என்ற பொருளிலும் கொள்ளல்வேண்டும்.

அருணகிரிநாதர் தனது இளமையில் விலைமாதர் ஆசையில் சிக்கி உழன்றவராதலால் அதைத் தன்னுடைய நூல்கள் பல வற்றிலும், பல இடங்களிலும் பல வகையாகவும் கண்டித்திருக்கிறார்.

பெண்கள்மீது கொள்ளும் காம இச்சை ஆன்ம முன்னேற்றத் திற்கு முற்றிலும் தடையாகும் என்பதை வலியுறுத்தவே இவ்வாறு பல பாடல்களில் கூறுகின்றார். மங்கையரைச் சேர தீரா ஆசை கொண்டவனுக்கு வேறு நினைப்பே வராது. அதிலும் இறைவன் ஞாபகம் அறவே வராது என்பதை உறுதியாகச் சொல்லுகிறார். மங்கையர் கொங்கையை விரும்புகின்றவன் மனம் இறைவனருளைப் பெற எண்ணுமோ, எண்ணவே எண்ணாது என்று முடிக்கின்றார்.

### இருபத்தைந்தாம் பாட்டு

**மெய்யே யென வெவ்வினை வாழ்வை யுகந்து**
**ஐயோ அடியேன் அலையத் தகுமோ**
**கையோ அயிலோ கழலோ முழுதுஞ்**
**செய்யோய் மயிலேறிய சேவகனே**

### பதவுரை

கையோ, அயிலோ, கழலோ முழுதும் செய்யோய் — உனது திருக் கரங்கள், வேல், திருவடிகளேயன்றி திருமேனி முழுதுமே சிவந்ததா யிருப்பவனே, மயிலேறிய சேவகனே — மயில்மீதமர்ந்த காவலனே, வெவ்வினை வாழ்வை — வினைப்பயனால் ஏற்பட்ட இவ்வுலக வாழ்வை, மெய்யே என உகந்து — சாஸ்வதமென்றெண்ணி, அதில் மகிழ்ச்சியுடன் விரும்பி, அடியேன் நினது அடிமையாகிய நான், அலையத் தகுமோ — திண்டாடத் தகுமோ, ஐயோ — அந்தோ பரிதாபம்!

### விரிவுரை

முருகனைச், "சேயோன்" என்று தொல்காப்பியம் கூறுகின்றது

"செய்யன் சிவந்த ஆடையன் செவ்வரைச்
செயலைத் தண்டளிர் துயல் வரும் காதினன்,"

என்கிறார் நக்கீரர். "செக்கர் நிறமாயிருக்கும் பெருமானே" என்று திருத்தணித் திருப்புகழில் (280) அருணகிரியாரும் கூறுகின்றார். 'பவழநிறமேனி' (வித்ருமாபம்) என்று கௌமார தந்த்ரம் கூறு கின்றது. இளம் சூரியன் போன்றமேனி (தருணாருண ஸங்காசம்) என்றும் கூறுகின்றது. குங்கும வர்ணம் (ஸிந்தூராருணம்) என்றும் கூறும். பாலசூர்ய ஸமப்ரபம், கமலாருணாபம், தருணாரவிஸமாபம், பால ஸூர்ய ப்ரதீகாசம், ரக்த வர்ணம், என்று சில்பசாஸ்திரங்கள் கூறுகின்றன. இவ்வாறு சிவப்பு நிறமான முருகனை, "மயிலேறிய

சேவகன்," என்றார். இந்தக் காட்சியைக் கண்ட நக்கீரர், "பலர் புகழ் ஞாயிறு கடற் கண்டாங்கு," எனப் பச்சை மயில் வாகனத்தில் சிவப்புநிற முருகன் வருவதை உவமிக்கிறார்.

இனி, சிவப்பு நிறத்திற்கு தந்த்ர சாஸ்திரங்கள் கூறும் கருத்தை அறிவது அவசியம். வெள்ளை நிறத்தை, "நிருபாதிகமான ப்ரம்மம்," என்றும், அது "பிரகாசாம்சம்" என்றும், சிவப்பு நிறம் அதனுடைய "விமர்சாம்சம்" என்றும் கூறும். சிவப்பு நிறம் பிரம்மத்தின் விமர்சாம்சமே என்பதை நாம் அறியவேண்டும். இதுபோலவே உருவ நிலையில் சிவபெருமானும் சிவப்பு நிறம்தான். அருவமான பிரம்மத்தின் பிரகாசாம்சம், சிவப்பு நிறமாய் உருவமான சிவனும் முருகனும் காட்சியளிக்கின்றது. வேல் சிவப்பாயிருப்பது சூரரின் ரத்தத்தில் தோய்ந்ததால் என்று கொள்க. இவ்வாறு பிரம்மம் முருகனாகத்தோன்றியதைக் கூறவந்த கச்சியப்ப சிவாச்சாரியார், அவன் அவ்வாறு வந்தது "உலகமுய்ய" என்றார்.

"அருவமும் உருவுமாகி அநாதியாய்ப் பலவாய் ஒன்றாய்
பிரம்மமாய் நின்ற ஜோதிப் பிழம்பதோர் மேனியாக
கருணைகூர் முகங்களாறும் கரங்கள் பன்னிரண்டுங்கொண்டே
ஒரு திருமுருகன் வந்தாங்கு உதித்தனன் உலகமுய்ய"

இவ்வாறு உலகமுய்யத் தோன்றியவனாதலாலே, அவனை நோக்கி ஜீரக்ஷணத்திற்காகத் தோன்றியவன், நான் இவ்வாறு தவிக்கலாமோ, என்று விண்ணப்பித்துக்கொள்கிறார். "வெவ்வினை வாழ்வு" என்றார். வினையின் பயனாலே உயிர்கள் தனு கரண புவன போகங்களைப் பெற்று, அவ்வினையைப் புசித்து உலகில் வாழ்கின்றன. இவ்வாறு உயிர்கள் வினையைப் புசிக்க உதவுகின்ற சக்திக்குத் "திரோதான சக்தி," என்றும், "திரோதான மலம்," என்றும், "திரோதாயி" என்றும் சித்தாந்த சாஸ்திரங்கள் கூறுகின்றன. இந்தத் திரோதான சக்திதான் பொய்யான உலக வாழ்வை மெய்யென நினைக்கச் செய்கின்றது. உலக வாழ்க்கையை மெய்யென எண்ணியிருக்கும் வரையில் வினை நாசம் ஆகாது. அது திரும்பத் திரும்பப் பிறவியைக் கொடுத்துக்கொண்டேயிருக்கும். உயிர், சுழலில் அகப்பட்ட துரும்புபோல் போவதும், மீள்வதுமாய் சுழன்று கொண்டேயிருக்கும். அதைத்தான், "அலைதல்" என்று இப் பாட்டில் கூறுகின்றார். முந்தின பாட்டில் மங்கையர் மீது கொண்ட காமத்தைத் தடையாகச் சொல்லி, இப்பாட்டில் உலக வாழ்வைச் சதமென நம்பும் பேதமையும் தடைதான் என்று கூறுகின்றார்,

அதைத் தவிர்க்கவேண்டுமானல், உலகம் உய்யவே உருக்கொண்ட விமர்சாம்சமான முருகனைப் பற்றுதலன்றி வேறு வழியில்லை யென்பது கருத்து. கந்தரலங்காரம் 98 வது பாடல்

" கதிதனை யொன்றையுங்காண் கின்றிலேன் கந்தவேல்முருகா
நதிதனையன்ன பொய்வாழ்வில் அன்பாய் நரம்பாற் பொதிந்த
பொதிதனையும் கொண்டு திண்டாடுமாறெனைப் போதவிட்ட
விதிதனை நொந்து நொந்து இங்கே என்மனம் வேகின்றதே "

## இருபத்தாறும் பாட்டு

ஆதாரமிலேன் அருளைப் பெறவே
நீதானொரு சற்று நினைந்திலேயோ
வேதாகம ஞான விநோதமனோ
தீதா சுரலோக சிகாமணியே

### பதவுரை

வேதாகம ஞான விநோத – வேதங்கள், ஆகமங்கள் உபதேசிக்கும் ஞானத்தில் நன்கு விளங்கும் சிங்காரரஸ சம்பூர்ண, மனோதீதா – மனதினல் கிரஹித்து உணரமுடியாதவனே, சுரலோக சிகாமணியே – தெய்வலோகத்திற்கு சிரோரத்னம் போன்ற முருகா, அருளைப்பெற ஆதாரமிலேன் – உன் அருளைப் பெறுவதற்கு எனக்கு யாதொரு உபாயமும் ஆதாரமும் தோன்றவில்லை, நீதானொரு சற்று நினைந் திலேயோ – நான் நிராதரவாயிருக்கும் நிலைமையைப் பார்த்து இரங்காமல் நீயும் திருவுள்ளம் கொள்ளாதிருக்கின்றாயே, பின் எனக்கு என்னதான் கதி ?

### விரிவுரை

ஆன்மா சுதந்தரமற்றது. சிற்றறிவுடையது. மலங்களால் பிணிப்புண்டது. ஆதலால் அதுவாக இறைவனைத் தேடியடைய ஆற்றலில்லாதது, இறைவன் அருள் ஒன்றே ஆன்மாவிற்கு ஆதாரம். " அவனருளாலே அவன் தாள் வணங்கி " என்றாற்போல் அவனை வழிபடுவதற்கும் அவனருள் தேவையாகயிருக்கின்றது. ஆகையால் இறைவனருளைத் தன்னிச்சையால் பெற உயிருக்கு சுதந்தரமும் ஆற்றலுமில்லை என்பதும் இறைவனாக சங்கல்பித்து அருள்பாலிக்க முன்வந்தாலன்றி ஆன்மாவிற்கு அவனருள் கிட்டாது என்பதும் இப்பாட்டில் வலியுறுத்தப்படுகிறது.

முருகன் வேதாகம ஞானத்தின் உருவானவன் வேதாகமங்கள் போதிப்பது அவனருளன்றி ஆன்மாவிற்கு வேறு உபேயோபாயம் இல்லை என்று. ஆதலால் வேதாகமங்களில் சொன்னபடி காப்பது அவன் கடன். ஆன்மா தனது உபாய சூன்யத்தை உணர்ந்து, தனக்கு ஆதாரமில்லாத தன்மையையறிந்து அவனருளை எதிர் பார்த்திருப்பதல்லால் வேறு என்ன செய்யமுடியும்? நீயோ மனோதீதன் என்றால் உன் உண்மை சொரூபத்தை உணர்ந்து பற்றவும் இயலாது. அவ்வகையிலும் ஆதாரமற்றவனாக இருக் கிறேன். ஆனால் இன்னலடைந்த உயிர்கள் உன்னைச் சரணடைந்த போது நீ காப்பாற்றும் இயல்பும் வல்லமையும் உடையவன் என்பது நீ தேவர்களை ரக்ஷித்து அவர்களுக்கு நற்கதியளித்து அவர்களின் சிரோபூஷணமாய் விளங்குவதனால் தெரிகிறது. அவ்வாறு ஆதார மில்லாத, ஆதாரம் அறியாத என்மீதும் அருள் பாலிப்பது உன் பாரம் என்பதை அறிந்து உன்னையே ஆதாரமாகப் பற்றினேன் என்பது இப்பாட்டின் திரண்ட கருத்து.

"காக்கக் கடவிய நீ காவா திருந்தக்கால்
ஆர்க்குப் பரமாம் அறுமுகவா—பூக்குங்
கடம்பா முருகா கதிர்வேலா நல்ல
இடங்காண் இரங்காயினி"

என்ற கருத்தை ஒப்பு நோக்குக. திருப்புகழ் 304ம் பாடலில்,

"ஏதுபுத்தி ஐயா எனக்கு இனி
யாரை நத்திடுவேன் அவத்தினிலே
இறத்தல் கொலோ எனக்குநீ — தந்தை தாயென்

றே இருக்கவும் நானும் இப்படி
யே தவித்திடவோ சகத்தவர்
ஏசலிற் படவோ நகைத்தவர் — கண்கள் காண

பாதம் வைத்து இடை ஆதரித்து உன
தாளில் வைக்க நீயே மறுத்திடில்
பார் நகைக்கும் ஐயா தகப்பன் முன் — மைந்தன் ஓடிப்

பால் மொழிக் குரல் ஓலமிட்டிடில்
யார் எடுப்பது எனு வெறுத்து அழப்
பார் விடுப்பர்களோ எனக்கு இது — சிந்தியாதோ,"

என்று தன்னுடைய ஆதாரசூன்யத்தை எவ்வளவு அழகாகக்கூறு கிறார் பாருங்கள்!

"விழிக்குத்துணை திருமென் மலர்ப்பாதங்கள் மெய்ம்மை குன்றா
மொழிக்குத்துணை முருகா என்னும் நாமங்கள் முன்பு செய்த
பழிக்குத்துணை அவன் பன்னிருதோளும் பயந்தனி
விழிக்குத்துணை வடிவேலும் செங்கோடன் மயூரமும்"

—கந்தரலங்காரம் 70

ஆன்மா தன் உபாய சூன்யத்தையும் கிஞ்சிக்ஞதையையும் உணர்ந்து அவன் தாளையே உபேயோபாயமாகப் பற்றவேண்டுமென்பது இப்பாட்டில் அருணகிரியார் கூறும் அநுபூதி உபதேசம்.

## இருபத்தேழாம் பாட்டு

**மின்னே நிகர்வாழ்வை விரும்பியயா**
**னென்னே விதியின் பயனிங்கிதுவோ**
**பொன்னே மணியே பொருளே அருளே**
**மன்னே மயிலேறிய வானவனே**

### பதவுரை

பொன்னே – யாவரும் விரும்பும் தங்கமே, மணியே – ஸ்வயம் ப்ரகாசமான மாணிக்கமே! பொருளே – உலகத்திற்கு ஆதாரமான செம்பொருளே! அருளே – அருளே வடிவமானவனே! மன்னே – ஸர்வலோக சரண்யனான ராஜாதி ராஜனே! மயிலேறிய வானவனே! – மயில் ஊர்தியில் அமர்ந்த வானுலகத்தவனே, யான் – உன்னடிமையாகிய அடியேன், மின்னே நிகர் – மின்னலைப்போன்றுத் தோன்றி மறையும், வாழ்வை – உலக வாழ்வை, விரும்பியது – ஆசையோடு மேற்கொண்டது, விதியின் பயன் இங்கு இதுவோ – இவ்வையத்தில் இப்படி இருக்கவேண்டுமென்றமைந்த என் ஊழ்வினைப்பயனோ, என்னே – என்ன ஆச்சரியம்!

### விரிவுரை

உயிர்கள் அநித்யமான பிரபஞ்ச வாழ்க்கையில் பற்றுக்கொண்டிருப்பதற்குக் காரணம் கூறுகின்றார். அது விதியின் பயன் என்கின்றார். சாதாரணமாகத் தோன்றி உடனே அழியும் ஒன்றின் மீது பற்றுதல் ஏற்படுவது அதிசயிக்கத்தக்கதுதான். அநித்யம் என்று அறிந்தும் அதன்மீது பற்று ஏற்படுவது என்றால், அதற்கு மூலகாரணம் ஒன்றிருத்தல் வேண்டும். பொய்யான வாழ்வை மெய்யென நம்புதல், அவித்தை அல்லது அஞ்ஞானம் எனப்படும்.

மூன்றொரு பாட்டில், "அறியாமையினால்" என்றார். அந்த அறியாமையாகிய அவித்தை விதியின் பயன் என்கின்றார். பின்னால் வரும் 31வது பாடலில் "பாழ்வாழ்வெனும் படு மாயையில் வீழ்வாய் என விதித்தனையே?" என்கின்றார்.

விதி என்பது என்ன? நியதி, முறை, ஊழ், தெய்வம் என்பன ஒரு பொருட் கிளவி. முன்பு செய்த வினை பின்பு விளையும் நியதியே விதி என்பது. முந்தின ஜன்மங்களில் செய்த வினையை இப்பிறப்பில் அனுபவிப்பதே விதி எனப்படும். உயிர்கள் தாம் செய்த வினையின் பயனால் இவ்வுலகில் அவ்வினையை அனுபவிப்பதற்கேற்ப, தனு, கரண, புவன, போகங்களைப் பெறுகின்றன. ஊழ் என்பது இரு வகைத்து. அதை ஆகூழ், போகூழ் என்றும் பிரிக்கின்றார் வள்ளுவர். ஆகூழால் முயற்சியும் அறிவும் பிறக்கும். போகூழால் சோம்பலும் அஞ்ஞானமும் உண்டாகும். இங்கு மின்னே நிகர் வாழ்வை விரும்புவது போகூழால் வந்தது என்று கூறலாம். முன் சென்மங்களில் செய்த தீவினைப் பயனாலேயே மக்கள் நிலையற்ற வாழ்வை, சதமென நம்பி இறைவனைத் தேடாது இருக்கின்றனர் என்பது கருத்து. "நுண்ணிய நூல் பல கற்பினும், மற்றும் தன் உண்மை அறிவே மிகும்" என்பது வள்ளுவர் வாசகம். இதில் "உண்மை" என்றது விதியைக் குறிக்கும். இதற்கு, நன்னெறி பெறுதற்குக் காரணமாகிய ஞானத்தைத் தரும் நுண்ணிய நூல்கள் பலவற்றைக் கற்றோராயினும் ஊழின் வலியால், மெய்ஞ்ஞானம் தோன்றாமல், பிரபஞ்ச மாயையிலேயே கிடந்து உழல்வர் என்பது பொருள். "உண்மையறிவு" என்று இங்கு கூறப்பட்டது, "ஊழினலாகிய பேதமை உணர்வு" என்று நுண்பொருள் மாலை உரை கூறிற்று.

என்னே! என்ற ஆச்சரியக் குறியின் விளக்கம். சிவஞான பாடிய ஆசிரியர் "மூலமலம் காரிய வேறுபாட்டால், எழுவகைப்படும். அவையாவன, மோகம், மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்பனவாம்" என்று கூறி இவ்வேழுக்கும் விளக்கம் கூறும்போது, "மோகம்" என்பதை, "கொள்ளற்பாலது இது, நீக்கற்பாலது இது, என நான்முகத்தால் உணர்ந்தும் அரிவையர் முதலிய விடங்களில் மயங்குவதற்கு ஏதுவாயது என்றும், "விசித்திரம்" என்பதை விளக்குங்கால், "தான் பெற்ற உலக வாழ்க்கையை நோக்கும் தோறும் இவர் எமக்கு உரிமைச் சுற்றத்தார், இவள் உரிமையுடைய மனைவி, ஆடை அணி, பொன், முதலிய செல்வங்களுக்குக் குறைவில்லை, மனை, கழனி முதலிய நிலங்களிற்குக்

குறைவில்லே, ஆதலான் இனிப் பெறக் கடவதென்னே" என்று சிந்தை செய்ததற்கு ஏதுவாயது" என்று கூறுகின்ருர்.

ஆகவே மும்மல விகாரங்களே பிரபஞ்சத்தில் நாம் வைக்கும் அன்புக்குக்காரணம். அம்மலம் அவரவர் செய்த வினேக்குத்தகுந்த படி பகுந்து அளிக்கப்படுகிறது.

கந்தரலங்காரச் செய்யுளொன்றில் தனக்கு வாய்த்த தனுகரணங் களே நான்முகன் தெரிந்து படைத்தனன் என்கின்ருர். அதாவது வினேக்கு ஏற்ப அளிக்கப்படுமென்ற நியதி தவருத விதி எனக் கென்று இந்தக்கரணங்களே என் வினேயைத் தெரிந்து அளித்தது என்கின்ருர்.

"கோடாத வேதனுக்கு யான்செய்த குற்றமென்? குன்றெறிந்த
தாடாளனே தென் தணிகைக் குமரா நின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாத கையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே,"

என்று வினேயின் பயனுல் உயிர்கள் கரணங்களேப் பெறும் முறை கூறுகிருர்.

சுருங்கச் சொன்னுல் முன் ஜன்மங்களில் நல்ல வினே செய்த உயிர்களே, பிரபஞ்ச வாழ்க்கையில் மோகம் கொள்ளாமல் இறைவனே அடைய வழிதேடும் என்பது பிண்டக் கருத்து.

அருணகிரிநாதர் முருகனேக் கூப்பிடும் சொற்களேத்தான் என்ன அழகாக அமைத்திருக்கின்ருர். பொன்னே, மணியே, பொருளே, அருளே, மன்னே என்ற சொற்கள் பிரபஞ்ச மாயையில் அகப்பட்ட உயிர்கள் விரும்பும் பொன், மணி, பொருள் தன் சுற்றத்தின் அருள் (அன்பு) பதவி, இவையெல்லாம் உண்மையில் முருகனேதான். அதைவிட்டு உலகில் இருக்கும் பொருள்களே பொன்னே, மணியே என்று கருதுவது அறியாமை என்று சூசிப்பது போன்றிருக்கின்றது.

"பொருளே," என்ற சொல் மாணிக்கவாசகர் அருளிய அரிய கருத்தை நினேவூட்டுகின்றது.

"போதார் புனே முடியும் எல்லாப் பொருளும் முடிவே" என்ருர். வள்ளுவர் "செம்பொருள்" என்றும் "மெய்ப்பொருள்" என்றும் கூறுவது இதுதான். நாம் சாதாரணமாக நினேக்கும் பொருள் எல்லாம் பொருளல்ல. அவை மின்னல்போல் தோன்றி மறைவன. அவன் ஒருவனே நித்திய வஸ்து. அதுவே "பொருள்" என்ற சொல்லுக்கு உண்மைப் பொருளாகும் என்று கூறுகின்ருர். இதையே

" பொருளல்லவற்றைப் பொருள் என்றுணரும்
மருளால் ஆம் மாணுப் பிறப்பு "

என்று வள்ளுவரும் கூறுகின்ருர். " மயிலேறிய வானவனே " என்பதை பின்னுல் வரும் சந்தர்ப்பங்களில் விளக்குவோம்.

### இருபத்தியெட்டாம் பாட்டு

**ஆனு வமுதே யயில்வேலரசே**
**ஞானு கரனே நவிலத்தகுமோ**
**யானு கிய என்னை விழுங்கிவெறும்**
**தானுய் நிலைநின்றது தற்பரமே**

#### பதவுரை

ஆனுத — அழியாத, கெடாத, அமுதே — அமுதை ஒத்தவனே அயில்வேலரசே — கூரியவேலாயுதத்தைத் தாங்கிய இறைவனே, ஞானு கரனே — ஞானமே உருவாக உடையவனே ! சித்ருபியே ! யானுகிய என்னை — இவ்வுடலில் நான் என்பதற்குப் பொருளாயிருக்கும் என் ஆன்மாவை அல்லது, " நான் " என்று கூறும் ஆணவத்தை, தானுய் — வேறு ஆதாரமில்லாததாயும், நிலை நின்றது — சாஸ்வத மானதுமான, தற்பரம் — முருகப்பிரம்மம், விழுங்கி நின்றது — என்னைத் தானுக்கி நின்றது, நவிலத்தகுமோ — வாயினுல் ஓதுதற்கு இயலுமோ.

#### விரிவுரை

அழியாத அமுதமே, கூர்மையான வேலாயுதத்தையுடையவனே, சித்ருபியே, நான் என்று சொல்லப்படும் எனது ஆன்மாவை ( தற்பரம் ) விழுங்கித் தானுக ( வேருென்றின்றி ) சாஸ்வதமாக அந்தத் தற்பரம் மட்டுமே எஞ்சிய அனுபவத்தைக் கூறமுடியாது.

விழுங்கி என்பதற்கு எழுவாயாக தற்பரத்தையே கூறவேண்டும். அஃதன்றி, ஆன்மா தன்னையே விழுங்கி தற்பரமாய் நின்றது என்பது பொருந்தாது. எஞ்சுவது பரம்பொருளே ஆகுமின்றி, ஆன்மாவாகாது.

சித்தாந்த சாஸ்திரத்தில் கூறப்படும் " சாயுஜ்யம் " என்பதற்கும், அத்வைதிகளான வேதாந்திகள் கூறும் முக்திக்கும் வித்தியாச முண்டு. அத்வைதிகள் ஆ ன் மா வே பிரம்மமாகிவிடுகின்றது என்று கூறுவர். "ஆன்மா என்ற தனிப்பொருளே ஒன்றுமில்லை. யாவுமே பிரம்மம்தான், அவித்தையினுல் இரண்டாகத் தோற்ற

மளிக்கிறது. அவித்தை நீங்கி மெய்ஞ்ஞானம் பிறக்குங்கால் ஆன்மா என்று சொல்லப்படும் ஜீவனும், பிரம்மமும், ஏகீபாவமாக ஒன்ருகிவிடுகிறது. "தத்வமஸி" என்று த்வம்பத லக்ஷியார்த்த மாகிற ஆன்மாவும், தத்பத லக்ஷியார்த்தமாகிற பிரம்மமும் ஒன்றே தான். அதுவே நீயாக இருக்கிருய்" என்பார்கள். அவர்கள் கொள்கைப்படி பிரம்மம் ஒன்றைத் தவிர வேறு யாதொன்றும் உண்மையில் இல்லையென்றிருப்பதால் ஆன்மா என்ற ஒன்று பிரம்மம் என்ற ஒன்ருேடு இரண்டறக் கலத்தல் என்ற பிரச்னைக்கே இடமில்லை. அவித்தையாகின்ற ஆவரணம் நீங்கி, தான் அதுவாகப் பார்த்தலே முக்தி.

"சாயுஜ்யம்" என்ருல் சேருதல் என்று பொருள். (யுஜ் to unite) சேருதல் என்றபோதே, இரண்டு வஸ்துக்கள் அவசியம் ஆகின்றன. இரண்டும் ஒரு தன்மையதாயும் இருந்தால்தான் சேர முடியும். யானைக்கும் பானைக்கும் கலியாணம் செய்யமுடியாது. அதில் சேருதல் என்ருல் ஒன்று அழிந்து மற்ருென்ருதல் என்றும் கூறமுடியாது. அப்படியாயின் ஆன்மா சாஸ்வதன் என்ற கொள்கைக்கு இடமில்லை. அக்கொள்கை தவருக முடியும். இந்தச் சேர்க்கை எத்தகையது என்பதைப்பற்றி பலவேறு முடிவுகள் ஏற்பட்டிருக்கின்றன. விரிக்கிற் பெருகுமாயினும் சுருங்கச் சொல்லல் அவசியமாகின்றது.

1. கடாகாசம் மஹாகாசம் போல், குடம் உடைந்தவழி உள்ளிருக்கும் ஆகாயம் வெளியில் இருக்கும் ஆகாயத்தோடு சேருதல் போன்றதா?

2. சிப்பியில் வெள்ளி தோன்றியதாக நினைத்து, அத்திரிபு காட்சியால் ஒற்றுமைப்படுதலா?

3. மண்ணே குடம் என்பதுபோல குணி குணத் தன்மையால் ஒற்றுமைப்படுதலா?

4. தீயும் இரும்பும் போல ஒன்றின் ஒன்று விரவுதலால் ஒற்றுமைப்படுதலா?

5. பாலும் நீரும் போல பிரிக்கப்படாமல் சையோகத்தால் ஒற்றுமைப்படுதலா?

6. பேயும் பேய்பிடித்தவனும் போல ஆவேசத்தால் ஒற்றுமைப் படுதலா?

7. காட்டத்தின் தீ போல விளங்காமையால் அதாவது விறகு பூராவும் வெந்து ஒற்றுமைப்படுதலா ?

8. ஞாயிற்றின் ஒளியும் விளக்கொளியும் போல சக்திகெட்டு ஒற்றுமைப்படுதலா ?

9. தலைவனும் தலைவியும்போல இன்ப நுகர்ச்சி மாத்திரத்தால் ஒற்றுமைப்படுதலா ?

10. நண்பர்கள் இருவர்போல நட்பின் மிகுதியால் ஒற்றுமைப் படுதலா ?

11. பசுவும் மானும் போல ஒப்புமை மாத்திரத்தால் ஒற்றுமைப் படுதலா ?

இவற்றில் ஸாயுஜ்யம் எத்தன்மையது என்பதைத் தீர்மானிக்க வேண்டும். ஆன்மாவும் அழியாமல் சிவத்தோடு ஒன்றுவதே 'சிவஸாயுஜ்யம்' என்பது சித்தாந்தக் கொள்கை மஹா பிரளய காலத்தில் எல்லாம் ஒடுங்கி பிரம்மமே தனித்திருக்கும் என்றபோது ஆன்மா அழியவில்லையா ? என்று கேட்கலாம். குளத்தில் ஆம்பல், தாமரை முதலிய செடிகள் இருப்பதைப்பார்க்கிறோம். குளம் தண்ணீர் வற்றி வரண்டுபோகிறது. ஐந்து ஆறு ஆண்டுகள் மழையின்மை யால் குளத்தில் தண்ணீரில்லாமல் போயிற்று. பின்பு மழை பெய்தது. தண்ணீர் நிரம்பியது. உடனே ஆம்பல், தாமரை முதலியன அங்கு தோன்றுவதைப் பார்க்கிறோம். மரம் பழத்தைக் கொடுத்து அதினின்றும் விதை உண்டானது. மரம் பட்டுப் போயிற்று. மரம் அழிந்ததா ? விதையில் அதன் உருவம் பூராவும் சூக்ஷ்ம நிலையில் இருக்கின்றது. விதையைப்பயிரிட்டால் உடனே அம்மரம் தோன்றிவிடுகின்றது. அதுபோல பிரளயகாலத்தில் ஆன்மா அழிகிறதென்றால், பிரம்மத்திற்கே அங்கு வேலையில்லை, அதுவும் அழிந்ததுதான் என்று பொருள். ஆனால் பிரம்மத்தில் அக்னியில் சூடுபோல, புனர் சிருஷ்டிக்கு வேண்டிய ஆற்றல் சலன ரூபமாக இருந்துகொண்டேயிருக்கிறது. ஆக அழிந்துபோனதாகக் கருதப்பட்ட ஆன்மாவும் ஏனைய பிரபஞ்சங்களும் அதனுள் ஒன்றி சூக்ஷ்ம நிலையில் இருப்பதாகக் கொண்டால்தான் பிரம்மம் சத்யம் என்ற சொல்லுக்குப் பொருள் ஏற்படுகின்றது.

ஆக இப்பாட்டில் யானாகிய என்னை விழுங்கி, வெறும் தானாய் நிலை நின்றது தற்பரமே என்ற வாக்கியத்தில் ஆன்மா அழியவில்லை, அது பிரம்மத்தில் ஒன்றிவிட்டது என்று தான் பொருள்கொள்ள

இயலும். இதுவே "சிவ சாயுஜ்ய நிலை" ஆன்மா தன் மல வாசனையை யொழித்து இறைவன்போல் நிர்விகாரமாகி, அவனோடு ஒன்றி, தான் என்ற தற்போதமிழந்து ஆன்மாவிற்கும் இறைவனுக்கு முள்ள வேற்றுமைகள் ஒழிந்து அவனே தானாகிய தன்மையில் இருக்கிறது. அருணகிரியார் 879ம் திருப்புகழில்,

"நாவேறு பாமணத்த பாதாரமே நினைத்து
நாலாறு நாலுபற்று — வகையான
நாலாருமாகமத்தின் நூலாய ஞான முத்தி
நாடோறும் நான் நினைத்து — நெறியாக
நீ வேறெனாதிருக்க நான் வேறெனாதிருக்க
நேராக வாழ்வதற்குன் — அருள் கூர
நீடார் ஷடாதரத்தின் மீதே பராபத்தை
நீ காணெனா அனைச்சொல் — அருள்வாயே"

என்கின்றார். "நாலாறு நாலுபற்று," என்பது $(4\times6)+4=28$ சிவாகமங்கள். 'நாலாரும்," என்பது சரியை, கிரியை, யோகம், ஞானம்.

மணிவாசகர், "என்று நீ, அன்று நான்" என்றும், "தந்தது உன் தன்னைக்கொண்டது என் தன்னை," என்றும்,

"கடலின் திரை அதுபோல் வரு
கலக்கமலம் அறுத்து என்
உடலும் எனது உயிரும் புகுந்து
ஒழியாவண்ணம் நிறைந்தான்
சுடரும் சுடர் மதி சூடிய திருப்
பெருந்துறை உறையும்
படரும் சடை மகுடத்து எங்கள் பரன்
தான் செய்யும் படிறே"

என்றும் கூறுகிறார். ஆக முன் சொன்ன 11 வகைச் சேர்க்கையில், இரண்டும் அழியாமல், இரண்டும் ஒரேவிதமான இன்ப நிலையில், தன்னையும் மறந்து நிற்கும் ஒன்றுதல் கூறப்பட்டது என்பதை உணர்ந்து 9-வது ஒற்றுமையாகக் கூறப்பட்ட தலைவன் தலைவியின் இன்ப நுகர்ச்சியில் ஒன்றுவது தான் சித்தாந்த சைவம் கூறும் சாயுஜ்யம் என்பதை உணரவேண்டும் விசிஷ்டாத்வைதமும் இதனைக் கூறியிருக்கிறது.

விழுங்கியது என்ற சொல்லுக்கு நாம் சாதாரணமாகக் கொள்ளும் பொருள் கொள்ளல் ஆகாது. முதலை மனிதனை விழுங்கியதென்றால் மனிதனின் உடல் அழிந்துவிட்டது, அவன் ஆன்மா விழுங்கப்

படவில்லை. விழுங்கப்பட்ட உடல் முதலையே யாகிவிட்டது என்றும் சொல்லமுடியாது. இங்கு விழுங்கப்பட்டதாக எதைச் சொல்லி யிருக்கிறது. "யானாகிய என்னை" என்று தான் கூறுகிறது. யாஞகிய என்னை என்பது, "ஆன்மாவா" அல்லது "ஆணவமலமா?" நான் என்ற ஆணவ மலம், ஆன்மாவே சரீரம் என்று பிரமை கொள்ளவைக்கும் சரீரம் படும் இன்ப துன்பமெல்லாம், ஆன்மா அனுபவித்ததாகக் கூறிக்கொள்ளும் ஆணவம் அழிந்த உடன், நீறு பூசிய நெருப்பை ஊதினவுடன் நீறு விலகி நெருப்புப் பிரகாசிப்பது போல, ஆன்மா தன் சுய நிலையை அடையும். அப்போது நான் என்றது மறைந்து, எல்லாம் அவன் என்ற அறிவு வரும். அந்த அறிவால் ஆன்மாவிற்கும் இறைவனுக்கும் ஏற்படும் சையோகமே சிவசாயுஜ்யமாகும். அதுவே பேரின்பநிலை. அந்த இன்பத்தில் தன்னையும் மறந்து இறைவனையும் தன்னையும் ஒன்ருகப் பார்க்கும்.

இதை அளிக்க வல்ல முருகன் எத்தகையவன்? ஆறு அமுது, அயில்வேல் அரசு, ஞானுகரன் என்ற மூன்று லக்ஷணங்கள் கொடுக்கின்ருர். அமுது என்றது அமிர்தம் என்ற வடமொழிச் சொல்லின் திரிபு அதாவது இறவாத தன்மை யுடையது. அதை அருந்தியவர்களுக்கு இறவாத் தன்மையை அளிக்கவல்லது.

அயில்வேல் என்பது ஞானசக்தி என்று பலரும் பலமுறை கூறியுள்ளனர். ஞானுகரன் = ஞான + ஆகரன். ஞானமே சரீர மாக உள்ளவன். ஞானத்தையே சரீரமாகவும் ஆயுதமாகவும் கொண்ட முருகன். வேலே முருகன் முருகனே வேல். அவனருளை அடைந்தவர்களுக்கு இறவாத தன்மையைக் கொடுப்பவன். அருணகிரியார் அந்த அருளைப் பூரணமாகப் பெற்று அந்த ஆனந்தத்திலே நின்று திளைத்த நிலையிலே, தற்போதமழிந்து அவனோடு கலந்து நிற்கும் அநுபூதியைச் சொல்லவந்தவர் அது கூறுவதற் கெளிதல்ல, அனுபவமாக அறியவேண்டிய ஒன்று. கல்கண்டின் இனிப்பை அறிய அதைச் சுவைத்தாலல்லது, சொல்லால் உணர முடியாது போன்ற அனுபவம். இந்த ஆனந்தானுபவத்தை,

"ஒளியில் விளைந்த உயர்ஞான பூதரத்தின் உச்சியின்மேல்
அளியில் விளைந்த ஓர் ஆனந்தத்தேன்,"

என்ருர்.

"செயல் மாண்டடங்கப் புத்திக்கமலத்துருகிப் பெருகிப்புவன மெற்றித்தத்திக்கரை புரளும் பரமானந்த சாகரத்தில் முருகனை

பத்தித்திருமுகம் ஆறுடன் பன்னிருதோள்களுமாய் தித்தித்திருக்கும் அமுதாகக்" காண்கின்றார். இந்தத் தித்திப்பு எப்படியிருக்கும்?

"சொல்லொணு தீந்த ஆனந்தமே" என்றார். அந்த ஆனந்தம் அரும்பினால் விஷயங்களில் பற்று அறும் என்பதை,

"அரும்பும் தனிப் பரமானந்தம்
தித்தித்தறிந்தவன்றே
"கரும்பும் துவர்த்து செந்தேனும்
புளித்தறக் கைத்ததுவே"

என்று கந்தரலங்காரம் வேது பாடலில் கூறுகின்றார்.

நால்வர் பாடிய திருமுறைகளிலோ, அருணகிரியாரின் நூல்களிலோ ஆன்மா அழிந்ததென்ற கருத்திற்கு ஆதாரமேயில்லை. சித்தாந்த சாஸ்திரங்களும் இதனையே வலியுறுத்தும்.

"அறிவொன்றற நின்றறிவார் அறிவிற்
பிறிவொன்றற நின்ற பிரான்"

என்று கூறுகிறார். திருவாசக மேற்கோள் செய்யுட்கள்:

"கயல்மாண்ட கண்ணிதன் பாங்கன்
எனைக்கலந்தாண்டலுமே
அயல் மாண்டு அருவினைச்சுற்றமும்
மாண்டு அவனியின் மேல்
மயல் மாண்டு மற்றுள்ள வாசகம்
மாண்டு என்னுடைய
செயல் மாண்டவா பாடித்
தெள்ளேணம் கொட்டாமோ"

— திருத்தெள்ளேணம். 11

"வான் கெட்டு மாருதம் மாய்ந்து
அழல் நீர் மண்டினும்
தான் கெட்டலின்றிச் சலிப்பு
அறியாத்தன்மையனுக்கு
ஊன் கெட்டு உயிர் கெட்டு உணர்வு
கெட்டு என் உள்ளமும் போய்
நான் கெட்டவா பாடித்
தெள்ளேணம் கொட்டாமோ" — ,, 20

### இருபத்தொன்பதாம் பாட்டு

இல்லே யெனு மாயையி லிட்டனைநீ
பொல்லே னறியாமை பொறுத்திலையே
மல்லே புரி பன்னிரு வாகுவிலென்
சொல்லே புனையும் சுடர் வேலவனே

### பதவுரை

இல்லே எனும் – இல்லற வாழ்க்கை எனும், மாயையில் – பிரகிருதி மாயையில், இட்டனை நீ – நீதான் என்னைப் பிறக்கும்படி விதித்தாய், * பொல்லேன் – வினையினால் கட்டுண்டு தன் சொரூபம் கெட்ட, பதருக்குச் சமானமானவன், என் அறியாமை – எனது அஞ்ஞானமாகிய இருளை, பொறுத்திலையே – சகிக்காமல் உடனே வந்து ஆட்கொண்டாயே, மல்லேபுரி – சண்டை செய்வதையே தொழிலாகக்கொண்ட, பன்னிரு வாகுவில் – பன்னிரண்டு தோள்களிலும், என் சொல்லே – என்னுடைய பாடல்களையே மாலையாக, புனையும் – அணிகின்ற, சுடர் வேலவனே – ஞானச்சுடர் தோன்றும் வேலையுடையவனே.

### விரிவுரை

ஏனைய உரையாசிரியஅறிஞர்கள் இப்பாட்டிற்கு "பொல்லேன் அறியாமை பொறுத்திலையே," என்பதனை, அற்பனாகிய நான் அறியாமல் செய்த குற்றங்களை க்ஷமிக்கவில்லையே என்று பொருள் கூறுகின்றனர். பொறுத்தல் என்பதற்கு பொறுத்து இருத்தல் அல்லது பொறுமையாயிருத்தல் என்ற பொருளும் உண்டு. தான் முருகன் மீது பாமாலை புனைந்தேத்தித் தொழ அவன் அதனால் சந்தோஷப்பட்டு இவர் அஞ்ஞானத்தில் அவதிப்படுவதை சகிக்காமல் உடனே வந்து ஆட்கொண்ட இறைவனுடைய பரம காருண்யத்தை வியந்து பாடியதாக இப்பாடலைக்கொள்வது சிறந்ததாகத் தோன்றுகின்றது.

மேலும் "இல்லே யெனு மாயை," என்பதற்கு உண்மையில் இல்லாத மாயை, என்றும் பொருள் கூறுகின்றனர். சைவ சித்தாந்தத்தில் மும்மலங்கள் என்ற பாசம், பசு, பதி, இவை, உண்மைப் பொருளேயன்றி இல்பொருள் அல்ல. சுத்த மாயையும் உண்மை. அதுவே பிரபஞ்சத்திற்கு முதற்காரணம். விஞ்ஞானம் கூறுவதும் அதுதான். பிரம்மம் சலித்துக்கொண்டிருக்கும்.

---

* பொல் – பதர்.

" ஸ்பந்தேன லக்ஷ்யதே வாயு: வன்ஹிருஷ்ணேன லக்ஷ்யதே।
சின்மாத்ரம் அபலம் சாந்தம் சிவ இத்யுதிதம் து யத்।
தத் ஸ்பந்தமய சக்த்யைவ லக்ஷ்யதே நான்யதா கில "

மாயையைப்பற்றி சற்று விசாரிப்போம். வேதாந்திகள் கூறும் மாயை என்ற சொல் பல பொருள்களில் பிரயோகப்படுத்துப் பட்டிருக்கின்றது.

(1) மாறுதலடையும் இவ்வுலகம் மாறுதலடையாத ஒரு பொருளிலிருந்து தோன்றுகின்றது. நிலையில்லா உலகம் நிலையான பொருளிலிருந்து உற்பத்தி ஆகின்றது. இயங்குகின்ற உலகம் இயங்காத ஒரு பொருளிலிருந்து வருகின்றது இவ்வாறு மாறுதல் அடையாததும், நிலைத்ததும், இயங்காததுமான பொருள்தான் 'பிரஹ்மம்' அப் பிரஹ்மத்திலிருந்து உலகம் எப்படி உற்பத்தியாகின்றது? அது விவர்த்த வாதப்படியானாலும், பரிணாம வாதப்படியானாலும் உலக உற்பத்தியில் பிரம்மம் எவ்வகையிலும் பாதிக்கப்படுவதில்லை. இந்த விந்தையான தொடர்பு நம் சிற்றறிவுக்கு விளங்காது என்பதையே 'மாயை' என்ற சொல் உணர்த்துகின்றது. " பூர்ணமத: பூர்ணமிதம் — என்ற மந்திரத்தைச் சிந்திக்கவும்.

(2) எல்லையில்லாத பொருளை எல்லைப்படுத்துவதும், உருவில்லாததற்கு உருவத்தைக்கொடுப்பதும், குணமில்லாததற்கு குணமும், நாமமில்லாததற்கு நாமமும் கொடுக்கும் தத்துவமே மாயை என்று கூறுவது ஒருவிதம். இங்கு மாயையின் அதிஷ்டிப்பால் நாம ரூப ரஹிதமானதும், உபாதியற்றதும், குணம் குறி இல்லாததுமான ஒன்றை உருவம், குணம் முதலியவைகளோடு நமக்குக் காட்டும் தத்துவமே மாயை. பிரம்மம் இரண்டு நிலைகளில் பேசப்படுகின்றது— மாயையோடு சேர்ந்த நிலை ( static stage), மாயையோடு சேராத நிலை ( Potential and Kinetic stage ) முந்தியது நிர்க்குணப் பிரஹ்மம், என்றும் பிந்தியது சகுணப் பிரஹ்மம் என்றும் கூறுப.

(3) பிரஹ்மத்தின் ஆற்றல் அல்லது சக்திக்கும் மாயை என்றே பெயர். அம்பாளை "மாயே" என்று வழங்குவது காண்க. பிரஹ்மத்திலிருந்து அதன் ஆற்றலை (சக்தியை) பிரிக்கமுடியாது. அதனின்றே தோன்றுகின்றது. இதனால் பிரம்மத்தின் பூர்ணத்துவத்துக்கும், லக்ஷணத்துக்கும் யாதொரு குறையும் இல்லை.

(4) இந்த சக்தி ஆவரணம், விக்ஷேபம் என்று இரண்டு வகைப்படும். இல்லாததைத் தோற்றுவிப்பது விக்ஷேபம், உள்ளதை மறைப்பது ஆவரணம்

(5) சாங்கியர் கூறும் பிரகிருதி என்பதிலும் "மாயை" என்ற சொல் பிரயோகிக்கப்படுகின்றது.

(6) சித்தாந்திகள் கூறும் மாயையும் வேதாந்திகளால் ஒப்புக் கொள்ளப்படுகிறது. சைவசித்தாந்தத்திலும் மாயை என்பதற்கு இரண்டுமூன்று பொருள்கள் உண்டு எதில் எல்லாம் மாய்ந்து மறுபடியும் எதிலிருந்து ஆக்கப்படுகின்றதோ அது மா + ஆ = மாயா. இது ஜகத்துக்கு முதல் காரணம். சிவம் நிமித்தகாரணம், சக்தி துணைக் காரணம் என்பர். வைணவர்களுக்கும் பிரபஞ்சம் என்பது விஷ்ணுவின் லீலா விபூதி (விஷ்ணு மாயையால் உண்டாக்கியது) சைவ சித்தாந்திகளின்படி மாயை உள் பொருளே.

வேதாந்திகள் ஒரே தத்துவத்தை மட்டும் ஒப்புக்கொள்வதால் மாயை என்று தனியாக ஒன்றும் கிடையாது. சித்தாந்திகளுக்கு மூன்று தத்துவங்கள் உள் பொருள்கள். சைவத்தின்படி பதி, பசு, பாசம்; வைணவத்தின்படி சித், அசித், ஈச்வரன் இவர்களுக்கு அசித் தான் பாசமாகிற மாயை உள் பொருள். வேதாந்திகளுக்கு அது இல்பொருள்.

ஆகவே இல்லே என்பது ஸம்ஸார பந்தம். "இல்லை யெனும்," என்று இல்லாமல், "இல்லே யெனும்," என்றிருப்பதைக் கவனிக்க. ஆதலால் இல்லே எனும் மாயை என்பதனை, மனை வாழ்க்கை என்ற ஸம்சார பந்தமாக ஈண்டு பொருள் கொள்ளப்பட்டது. என் முன் வினைக்கு ஈடாக எனக்கு இந்த வாழ்க்கையை அமைத்தவன் நீயே தான். அப்படியிருந்தும் நான் உன்னை வாயாரப்பாட, அதற்கிரங்கி, அஞ்ஞானத்தில் நான் உழல்கின்ற அவதியை சகிக்காமல் உடனே வந்து ஆண்டு கொண்டாய், என்று பொருள் கூறினோம். மாணிக்க வாசகப்பெருமான் அச்சோப்பதிகத்தில் பாடிய செம்பொருளே இப் பாட்டிற்கும் பொருளாகும். தன்னுடைய தகுதியின்மையையும் மறந்து இறைவன் வந்து தன்னை ஆண்டுகொண்டதை வியந்து அவர் பாடுவதுபோல், இப்பாடல் அமைந்துள்ளது. இது அநுபூதிப் பாடல்; தான் பெறவில்லையே என்று ஏங்குவதாகக் கூறுவது அநுபூதிக்கு இழுக்காகும். தகுதியற்றவனுயினும் நான் பெறும்படி செய்தாயே என்று பெருமிதத்தில் பாடுவதாகக் கொள்வது பொருந்தும்.

"நம்மையும் ஓர் பொருளாக்கி நாய்ச்சிவிகை ஏற்றுவித்த," என்றும்,

"பந்தமறுத்து எனை ஆண்டு பரிசு அற, என் துரிசும் அறுத்து," என்றும்,

" மண்ணதனில் பிறந்து எய்த்து மாண்டு விழக்கடவேனை
எண்ணமிலா அன்பருளி என்னை ஆண்டிட்டு,"

என்றும் மாணிக்கவாசகர் கூறுவதுபோல், தன் தகுதியின்மையையும் அய்யன் கருணைத் திறத்தினையும் உணர்ந்து பாடுகின்றார். கந்தரலங்காரப் பாடல் 100ல்,

" இடுதலைச் சற்றும் கருதேனைப்
போதமிலேனை யன்பாற்
கெடுதலிலாத் தொண்டரிற் கூட்
டியவா கிரௌஞ்ச வெற்பை
அடுதலைச் சாதித்த வேலோன்
பிறவியற இச்சிறை
விடுதலைப்பட்டது விட்டது
பாசவினை விலங்கே,"

என்று பாடியவர், அநுபூதியில் தனது அறியாமைக்கு மன்னிப்புக் கோருவதாகக் கூறுவது பொருத்தமாக இல்லை. எனினும் இதுவரை பலராலும் கூறப்படும் பொருளையும் ஏற்றுக்கொள்ளுதல் இழுக்காகாது. ஆன்றோர் சிந்தித்து ஏற்பதை ஏற்க.

## முப்பதாவது பாட்டு

**செவ்வான் உருவிற் றிகழ் வேலவன் அன்(று)
ஒவ்வாததென உணர்வித்ததுதான்
அவ்வாறு அறிவார் அறிகின்றதலால்
எவ்வாறு ஒருவர்க்கு இசைவிப்பதுவே.**

## பதவுரை

செவ்வான் உருவிற் – (சூரியன் உதிக்கும்போதும், மறையும் போதும் தோன்றுகின்ற) செக்கச்சிவந்த ஆகாசம் போல, திகழ்வேலன் – பிரகாசிக்கின்ற வேலாயுதப்பெருமான், அன்று – என்னை ஆட்கொண்ட போது, ஒவ்வாதது – (நான் மேற்கொண்டிருந்த வாழ்க்கை ஆன்ம லக்ஷணத்திற்கு) பொருந்தாது, என – என்று உணர்வித்தது – உண்மை நெறியை உபதேச வாயிலாக நான் உணரும்படி செய்தது, தான் – அதை, அவ்வாறு அறிவார் – (என்போன்று) குருமுகமாக அறிய வாய்ப்புக்கொண்டவர்கள், அறிகின்றதலால் – அறிவார்களேயல்லாமல் எவ்வாறு ஒருவர்க்கிசைவிப்பது – எப்படி அதனைப் பிறர்க்குச்சொல்லக் கூடும் ?

விரிவுரை

"ஒவ்வாததென" என்றதை ஒப்புவமையில்லாத என்றும் பொருள்கொள்கின்றனர் குருமுகமாக உபதேசிக்கப்பெற்று அதனல் அநுபூதி அடையவேண்டுமேயல்லாது வேறுவிதமாய் அடைய முடியாதென்று பக்குவ ஆன்மாக்களுக்கு குருவின் உபதேசம் தேவை யென்பதை வலியுறுத்துகின்றூர்.

இது சிவஞான போதத்தின் 8வது சூத்திரத்தின் செம்பொருளை விளக்க வந்தது எனக்கொள்ளலாம். 8ம் சூத்திரம் —

"ஐம்புல வேரினயர்ந்தனை வளர்ந்தெனத்
தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்தவிட்
டன்னிய மின்மையின் அரன் கழல் செலுமே"

இதன் பிண்டப் பொழிப்புரை (மாபாடியத்திலுள்ளபடி.) :— "ஆன்மா முன்னே செய்து கொள்ளப்பட்ட புண்ணிய விசேடத் தால், இப்பொழுது தமக்கு அந்தர்யாமியாய் உண்ணின்று, இதுகாறும், உணர்த்திவந்த பரம்பொருளே, குரு வடிவங்கொண்டு, எழுந்தருளிச் சிவதீக்கை செய்து "மன்னவ குமாரனுகிய நீ, ஐம் பொறிகளாகிய வேடரோடு கூடி, வைகி, வளர்ந்து, நின் பெருந் தகைமையை அறியாது மயங்கி இடர்பட்டாய்; நின் பெருந் தகைமையாவது இவ்வியல்பிற்று" என்றறிவுறுப்ப, அறிந்த மாத்திரையே, அவரை விட்டு நீங்கி, அந்நியமின்றி, அநந்நியமாந் தன்மையில் நிலைபெற்று, அம்முதல்வன் திருவடிகளை அணையும்" என்றவாறு.

"அறிவிக்கவன்றி யறியா வுளங்கள்" என்று கூறினதுபோல் உயிர்கள் தாமே அறியும் ஆற்றலுடையனவல்ல, அறிவித்தாலே அறியும் இயல்பையுடையன.

ஆன்மாவிற்கு "சதசத்து," என்ற பெயரொன்று உண்டு. அதாவது சத்தோடும், அசத்தோடும் தொடர்புற்று நிற்கும் இயல்பை யுடையது, என்பது பொருள். சத் அல்லது அசத் என்ற இரண்டி லொன்றைப்பற்றித்தான் நிற்கும் இயல்பு உண்டே அன்றி வேறொன்றையும் பற்ருது, தனித்து நிற்கும் இயல்புடையதல்ல, அசத்தின் தொடர்பு உண்டானபின், அது "சகமாயை" யில் சிக்கி உழலும். அத்தொடர்பு நீங்கினல், அது சத்தாகிய சிவத்தைச்சாரும். சத்தாயும் சித்தாயும், ஆன்மா இயல்பிலேயே யிருப்பதால், அது

சிவத்திற்கு அந்நியமாகாது. ஆகையால் அசத்தாகிய பிரபஞ்சப் பற்று நீங்கினவுடன், அது இயல்பாகவே சிவத்தைச்சாரும் என்பது தெளிவு. அசத்துத்தான் ஆன்மாவின் உண்மை சொருபத்திற்கு அந்நியமாகும். அதனால் அசத்தோடு தொடர் கொள்வதைத்தான், இங்கு, "ஒவ்வாதது" என்ற சொல்லால் குறிப்பிடுகின்றார். இதை ஆன்மா தானே அறியுமோ? என்ற கேள்விக்கு "தம் முதல் குருவு மாய்த் தவத்தினில் உணர்த்தி," என்று சிவஞானபோதம் குறிப்பிடுகின்றது. ஆன்மாவானது அசத்தாகிய பிரபஞ்ச வாழ்க்கையில் அழுந்தி உழல்கின்றது. இந்த மாயை ஒழிய வேண்டுமானால் மெய்ஞ்ஞானம் பிறத்தல் வேண்டும். அம்மெய்ஞ்ஞானத்தையும் இறைவனே நல்குகின்றான்.

பிரபஞ்சமாயையில் உழலும்போது இறைவன் நம்முள் நின்று பிரபஞ்ச வாழ்க்கையின் பொய்யான இயல்பையும், அதில் மயங்குவது ஆன்ம சொருபத்திற்கு இழுக்கு, என்றும் உண்ணின்று சிறிது சிறிதாய் உணர்த்தி வருகின்றான். அப்போது ஆன்மாவிற்கு சிறிது சிறிதாய் அறிவு புலரத் தொடங்குகின்றது. பிரபஞ்ச வாழ்க்கையில் நாம் படும் இன்னல், நோய், மிடி, தோல்வி, முதலிய வற்றால்தான் இத்தகைய ஞானத்தை சிறிது சிறிதாய்த் தோற்று விக்கிறான். இவ்வாறு உண்ணின்று அறிவித்த இறைவன் ஆன் மாவின் பக்குவ நிலையறிந்து குருநாதனாகவும் எதிரில் தோன்றி மெய்ஞ்ஞானத்தை நல்குவன். அவ்வாறு உபதேசம் பெற்ற ஆன்மா அடையும் அநுபூதியை பிறருக்குச் சொல்லுதல் எளிதன்று. குரு முகமாகக்கேட்டு அநுபவித்தாலன்றி வெறும் கல்வி, கேள்வி, அறிவு களால் அடையப்படுவதன்று, என்று இப்பாட்டில் இறைவனின் கருணைத் திறத்தைக் கூறுகின்றார்.

செவ்வானுருவிற் திகழ் வேலவன், என்பதற்கு முந்தின 25-வது பாட்டின் உரையைப் பார்க்க. ஆன்மாவிற்கு இறைவனே குரு நாதனாக வந்து உணர்த்தினாலல்லது, வேறு விதமாக சிவ சாயுஜ்யம் பெறுவது இயலாதென்பது கருத்து.

இதனைக் கந்தரலங்காரம் 28-வது பாடலில் குறிப்பிட்டிருக் கின்றார் —

"வேலே விளங்கு கையான் செய்ய
தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொள இங்ஙன் காண்ப
தல்லால் மனவாக்குச் செய

லாலே யடைதற் கரிதாய்
அரு வுருவாகி யொன்று
போலே இருக்கும் பொருளை எவ்
வாறு புகல்வது வே"

*பின்னல், 48, 49-வது பாடல்களிலும் இக்கருத்து குறிப்பிடப் படுகின்றது*

### முப்பத்தோராவது பாட்டு

**பாழ் வாழ்வெனு மிப்படு மாயையிலே
வீழ் வாயென என்னை விதித்தனையே
தாழ் வானவை செய்தன தாமுளவோ
வாழ் வாயினி நீ மயில் வாகனனே.**

### பதவுரை

மயில்வாகனனே – மயிலை வாகனமாக உடைய முருகக் கடவுளே, பாழ்வாழ்வெனும் – பயனற்ற இந்த உலகை வாழ்வு என்ற, படுமாயையிலே – துன்பத்தைக்கொடுக்கும் பிரபஞ்ச மாயையிலே, வீழ்வாய் என – விழுவாய் என்று, என்னை விதித்தனையே – என்னை நியமித்தனையே, தாழ்வானவை செய்தன தாமுளதோ – நான் இவ்வாறு சக மாயையிலே பிறந்து உழலும்படி முன்பிறவிகளில் ஏதோ தீவினை செய்திருந்தேன் போலும், வாழ்வாய் இனி நீ – நீ வாழக்கடவாய்.

### விரிவுரை

*உண்மையைக் கூறப்போனால், இப்பாடலுக்கு உள்பொருள் யாதென்று அடியேனுக்கு விளங்கவேயில்லை. உரையாசிரியர்கள் பலரும் "நான் ஒரு குற்றமும் செய்யாதிருக்க என்னைப் படுகுழியிலே தள்ளினையே, நீ வாழ்வாயா? என்று நிந்தாஸ்துதியாகக் கூறினர்" என்று பொருள் கண்டிருக்கின்றனர்.*

*கந்தரலங்காரப் பாடல் ஒன்றில் (76) அருணகிரியார் படைப்புக் கடவுளை விளித்துக் கூறுகிறார்*

*"கோடாத வேதனுக்கு யான் செய்த குற்றமென் குன்றெறிந்த
தாடாளனே தென் தணிகைக் குமர நின் தண்டையந்தாள்
சூடாத சென்னியும் நாடாத கண்ணும் தொழாத கையும்
பாடாத நாவும் எனக்கே தெரிந்து படைத்தனனே"*

இதில் "கோடாதவேதன்" என்றும் "தெரிந்து படைத்தனன்" என்றும் கூறுவதில் உயிர்கள் அவரவர்கள் வினைக்கேற்பவே கரணங்களைப் பெறுகின்றனர் அவ்வினைகளை நன்கு தெரிந்து நியதி தவருத படைப்புக்கடவுள் எனக்கே இவற்றைக்கொடுத்தான். நான் செய்த வினையின் பயனுல் இந்தவிதமான கரசரணுதிகள் எனக்கு வந்து வாய்த்தன என்று கூறியிருக்கிருர்.

"தாழ்வானவை செய்தன தாமுளவோ" என்று இப்பாட்டில் கூறுவது, தாம் முன்பிறப்பில் செய்தவினைதான் என்னவோ, அதற்காக என்னை இப்பாழ்வாழ்வில் பிறக்கும்படி விதித்துவிட்டாய் என்கின்ருர். அப்படியாயின் இறைவனை நொந்துகொள்ள அவசியமேயில்லை, இருந்தும் "வாழ்வாய் இனி" என்று ஏசுவது போல் கூறுவானேன்?

இனி வாழ்வாய் என்பதை இனிது வாழ்வாய் என்று பொருள் கொண்டு, மயில்வாகனனே என்னுடைய பூர்வ வினைக்குத்தகுந்தபடி வாழ்வு, எனக்குத்தந்தாய், நீ வாழ்க, என்று ஏன் பொருள்கொள்ளலாகாது?

அல்லது ஏசலாகவே வைத்துக்கொண்டால் நான் தவறு செய்திருந்தாலும் உன் பரமகருணையினுல் அவற்றை க்ஷமித்து எனக்கு நல்வாழ்வு கொடுத்திருக்கக்கூடாதோ? நீ வாழ்வாயா? என்றும் கூறலாமோ?

கந்தரநுபூதிப் பாடல்களை அருணகிரியார், தான் கந்தரால் ஆட்கொள்ளப்பட்டு சகமாயையிலிருந்து விடுபட்டு அநுபூதி அடைந்த நிலையிலேயே பாடுகின்ருர். ஆதலால் "மயில் வாகனனே, எனது பூர்வ வினைக்கு ஈடாக இப்பிறவியை அளித்தாய். பின்பு நான் செய்த குற்றத்தை க்ஷமித்து என்னையும் ஆட்கொண்டாய் நீ வாழ்வாயாக" என்று சில கருத்துக்களை வரவழைத்துக்கொண்டும் பொருள் கூறலாமோ?

அடியார்கள் பலர் தாம் இன்னலுறும்போது இறைவனை நிந்தா ஸ்துதியாக ஏசுவதைப் பல இடங்களில் காண்கின்ருேம். மாணிக்க வாசகர் நீத்தல் விண்ணப்பம் 49ம் பாடலில்

"சிரிப்பிப்பன் சீறும் பிழைப்பைத்
தொழும்பையும் ஈசற் கென்று
விரிப்பிப்பன் என்னை விடுதி கண்டாய்
விடின் வெங்கரியின்

உரிப்பிச்சன் தோலுடைப் பிச்சன்
நஞ்சூண் பிச்சன் ஊர்ச்சுடுகாட்டு
எரிப்பிச்சன் என்னையும் ஆளுடைப்
பிச்சன் என்று ஏசுவனே ”

என்று பாடுகின்றார். இதில் “சீறும் பிழைப்பைச் சிரிப்பிப்பன்” என்று எடுத்துக்கொண்டு, “நீ என் குற்றத்தைக்காண்டு சீறும் காரணத்தால், உன்னை உலகம் சிரிக்கும்படி செய்வேன்” என்று காளிதாண்டவராயர் உரை காண்கின்றார். அதுபோல ஈண்டும், “தாழ்வானவை செய்தன தாமுளவோ......என்னை படுமாயையிலே வீழ்வாயென விதித்தனையே...... வாழ்வாய்,” என்று எடுத்துக் கொண்டால் நீயாகப் பார்த்து எனக்கு இந்த வாழ்வைக்கொடுத்தாய் நான் தாழ்வானது ஏதாவது செய்திருந்தால் அது என் குற்றமாகாது “ஆட்டுவித்தால் யாரொருவர் ஆடாதாரே” என்றபடி, நீ இந்த மாதிரியான வாழ்க்கையை எனக்கு அமைத்துவிட்டு, தாழ்வானவை செய்ததாக நினைத்தால், “நீ வாழ்வாயோ,” என்று நான் ஏசுவே னென்று பொருள் கொள்ளவுமிடமுண்டு. சுந்தரர்,

“பிழையுளன பொறுத்திடுவர் என்றடியேன்
பிழைத்தக்கால்
பழியதனைப் பாராதே படல மென்கண்
மறைப்பித்தாய்
குழை விரவு வடிகாதா கோயிலுளாயே என்ன
உழையுடையான் உள்ளிருந்து உளம் போகீறென்றானே,”

என்றும், இன்னுமோரிடத்தில் “மகத்தில் புக்கதோர் சனி எனக் காளுய்,” என்றும்

“நற்றமிழ்வல்லஞான சம்பந்தன்......
... ... ... ... ... ... ... ...
... ... ... ... ... என்றிவர்கள்
குற்றம் செய்யினும் குணமெனக் கருதும்
கொள்கை கண்டு நின் குரைகழல டைந்தேன் ”

என்றும் பாடினார்.

அருணகிரியாரின் இப்பாடலுக்கும், “குற்றம் செய்தல் மனிதர் இயல்பு. நான் இப்பிறவி எடுத்ததும் உன் சங்கல்பத்தால். அப்படி யிருந்தும் என் பிழைபொறுத்து, என்னை ஆட்கொள்ளவேண்டியது உன் கடமை. அப்படியில்லாமல் இன்னும் சக மாயையிலிருந்து துயங்கும்படி அடியேனைச் செய்தால், நீ வாழக்கடவையோ ?” என்று

கூறுவதாகவும் பொருள் கொள்ளலாம். கந்தரலங்காரப்பாடலில், "முத்தமிழால் வைதாரையும் அங்கு வாழவைப்போன்" என்று சுந்தரரை நினைத்தே பாடியிருத்தல் கூடும். அது போல தானும் இறைவனுடைய பெருங் கருணைக்கு முறனான செயலைக்கண்டு ஏசியிருக்கலாம்.

நிற்க "தாழ்வானவை செய்தன தாமுளவோ" என்பதனையே இறைவன் பால் ஏற்றி "முருகா என்னை இப்படுமாயையிலே விழும் படியாக விதித்து, உன் கருணைக்கு ஒவ்வாத தாழ்வான காரியத்தைச் செய்வையோ? இதுவரையும் நீ தாழ்வானது ஒன்றும் செய்த தில்லையே. என் விஷயத்தில் இவ்வாறு செய்துவிட்டாயே நீ வாழ்வாயா" என்றும் கூறலாம்.

பொருள் எதுவானாலும் சரி, இப்பாடலில் நாம் அறிய வேண்டியது நமது முன்வினைக்குத் தகுந்தபடி நமது வாழ்க்கை அமைக்கிருன் இறைவன் என்பதுதான். அவ்வாறு நியதி தவருத இறைவன் வாழ்க என்று கூறினதாகவே பொருள் கொண்டோம். முன்வினைப்பயனால் சீர்கேடான வாழ்க்கையில் பிறந்தாலும், அவனருளால் மேம்படலாம் என்பது அவர்கண்ட அநுபூதி. என் வினையின் பயனை நான் அனுபவிக்கிறேன் நீயாவது வாழ்ந்திரு என்றவாறு.

### முப்பத்திரண்டாவது பாட்டு

**கலையே பதறிக் கதறித் தலையூ**
**டலையே படுமா றதுவாய் விடவோ**
**கொலையே புரிவேடர் குலப்பிடிதோய்**
**மலையே மலை கூறிடு வாகையனே**

### பதவுரை

கொலையே புரி – கொலைத் தொழிலையே தமது குலதர்மமாகக் கொண்ட, வேடர் குலப்பிடி – வேடர் வம்சத்தில் தோன்றிய பெண்யானை போன்ற வள்ளி, தோய் – தோய்கின்ற, தழுவுகின்ற, மலையே – மலை போன்ற தோள்களையுடையவனே. மலை – கிரௌஞ்சமலையை, கூறிடு – இரண்டு கூருகச் செய்து, வாகையனே – வெற்றி வாகை சூடிய மார்பனே, (i) கலையே – ஏட்டுப் படிப்பையே, பதறிக் கதறி – ஆவல் மிகக்கொண்டு வாய்விட்டு உரக்கப்படித்து, தலையூடலையே – வேதங்களில் இறங்கி, ( தலை + ஊழ்தல்=தலையூடல் திகழ் + தசக்கரம் = திகடசக்கரம்

என்பது போல) படுமாறு – அவதியுறுமாறு, அதுவாய் விடவோ – வெறும் ஏட்டுப் படிப்பைப் பெற்றுனுகி இருக்கலாமோ ?

அல்லது

(ii) கலேயே – கலேமானது, தலேயூடலேயே – தனது கொம்புகள் காட்டிலுள்ள செடி கொடிகளில் சிக்கி, படுமாறு பதறிக் கதறி – எடுக்கவராமல் துடித்துக் கதறி அவத்தையுறுவது போல, அதுவாய் விடவோ – அதுபோன்று நானும் ஆகிவிடவோ ? அதாவது இல்வாழ்க்கையில் சிக்கிக்கொண்டு அவதிப்படலாமோ ?

அல்லது

(iii) கலேயே – நுண்கலேகளான சங்கீதம், ஓவியம், சில்பம், நடனம் முதலிய கலேகளே, பதறிக் கதறி – மிகுந்த ஆவலுடன் பரபரப்பாய், கதறிக் கதறிக் கற்று, தலேயூடலேயே – அதனுல் மண்டைக் கர்வம் அடைந்து, படுமாறு – அவதிப்படுமாறு, அதுவாய் விடவோ – வித்யா கர்வியாகி வாழ்வதோ ?

அல்லது

(iv) கலேயே – பஞ்ச கலேகள் என்ற நிவிருத்த கலே, பிரதிஷ்டா கலே, வித்யா கலே, சாந்தி கலே, சாந்தியதீதகலே என்று, பதறிக் கதறி – வீண் விதண்டாவாதமாக உரக்கத் தர்கித்து, தலேயூடலேயே – மண்டை குழம்பிப் போதலேயே, படுமாறு – அவஸ்தைப் பட்டு, அதுவாய் விடவோ – வாய் வேதாந்தம் பேசும் போலியாகிவிடவோ ?

அல்லது

(v) கலேயே – இடகலே, பிங்கலே என்ற சுவாசங்களில், பதறி – பூரகம், கும்பகம், ரேசகம், என்ற முறைகளில் அதி ஆவல் கொண்டு முயன்று, கதறி – கோரிய பலன் கிடைக்காதலால் வாய்விட்டு அழுது, தலேயூடலேயே படுமாறு – மண்டையை உடைத்துக்கொள்ளுதலே மேவி, அதுவாய் விடவோ – அவ்வாறு பயன் தராத முயற்சியில் இறங்கும் வீணுகி விடவோ ?

விரிவுரை

இதுவரை இப்பாட்டிற்கு இதுதான் பொருள் என்று அறுதியிட்டுக் கூறினவர் யாருமில்லேயென்றே சொல்லி விடலாம். கலேயே

என்பது எதைக் குறிக்கின்றது? தலையூடல் என்பது என்ன? என்று முடிவாய் யாரும் சொல்லவில்லை.

கலையே – தந்த்ரகலை, மந்த்ரகலை, உபதேசகலையென மூன்று.

தந்த்ரகலை என்பது இறைவனுலருளிச் செய்யப்பட்ட ஆகமங்கள். அவை சைவாகமம், சாக்தாகமம், வைணவாகமம் எனப் பல பிரிவுகளை யுடையன.

மந்த்ரகலை என்பது, குறிப்பிட்ட தேவதையை உபாஸனை செய்ய அத் தேவதைக்குரிய, ரிஷி, சந்தஸ், தேவதை, பீஜம், சக்தி, கீலகம் த்யானம், அங்க நியாசம், கரநியாசம், என்பனவற்றை குரு முகமாக உபதேசிக்கப்பட்டு ஜபித்து வருவது.

உபதேசகலை என்பது பதி, பசு, பாசம் என்ற முப்பொருளை உணர்த்தும் சாஸ்திரங்களை அல்லது வைணவர்களாயிருந்தால் சித், அசித், ஈச்வரன் என்ற முப்பொருளை உணர்த்தும் ஸ்ரீ சூக்திகளை ஆசார்யனிடம் முறையாகப் பாடங் கேட்பது.

இவற்றில் ஆர்வம் கொண்டுப் பதறிக் கதறிக் கற்று அதனுல் மண்டைக் கர்வம் கொண்டு அல்லது மண்டை குழம்பி, முடிவில் கற்றதோடு நின்றுவிட்டு, அநுபூதியடையாமல் காலத்தைப்போக்குவதன்றி, பயனில்லாமல் நின்று விடுவது தகுமோ?

இம்மூன்று கலைகளில் ஏதாவது ஒன்றைத் தீவிரமாக அப்யசித்தால் சிறந்த அநுபூதி ஏற்படும் அஃதன்றி நான் ஆகமங்களைக் கற்றேன் என்ருே, மந்த்ரோபதேசம் பெற்றேனென்ருே, சித்தாந்த சாஸ்திரங்களைக் கரைகண்டேனென்ருே, நின்று விடாமல்,

"கற்றதனுலாய பயனென் கொல்வாலறிவன்
நற்ருள் தொழார் எனின்,"

என்றபடி இறையனுபவம் அடையவேண்டும், என்று இப்பாட்டில் உபதேசிக்கிருர் என்று கூறலாமெனத் தோன்றுகிறது. இதுதான் முடிவு என்று கூறுவதாகக் கருதக்கூடாது. முருகனருளே துணையாகக்கொண்ட அநுபூதிமான்கள் தான் இப்பாடலுக்கு முடிவான பொருள் கூறமுடியும் போலும். நம்போன்ருர் இத்தகைய தர்க்கத்தோடு நிற்கவேண்டியதுதான். சுருக்கமாகக் கூறினுல் மெய்ஞ்ஞானத்திற்கொண்டு சேர்க்காத வெறும் கலைஞானம் பயனில்லை என்று கூறவந்தார்போலும்.

"கொலையேபுரி வேடர் குலப்பிடி" என்று கூறுவதால் கலை கற்றவர்க்குத்தான் இறைவன் அருள் கிட்டும் என்று நினைத்துப் பதறிக்கதறவேண்டாம். அவன் வேண்டுவது ஆன்ம பரிபக்குவமே யொழிய கற்றவித்தையின் திரட்சியல்ல: யாதொரு கலையுங்கற்காமல் கொலை செய்வதே தொழிலாகக்கொண்ட வேடராயினும் பரிபக்குவம் அடைந்தோரை அவன் ஆட்கொள்வான், வள்ளியையும், கண்ணப்பனையும் போல. அஃதன்றி கலைகள் யாவும் கற்று இந்த்ர ஜாலம், மஹேந்த்ரஜாலம், பரகாயப்பிரவேசம், நீர்மேல் நடத்தல், கனல் மேலிருத்தல், ஒருவரும் காணுமல் உலகத்தில் உலாவுதல் போன்ற மாயாஜாலங்களைக்கற்றோம் என்று பெருமிதங்கொள்ளும் வித்யா கர்விகளை க்ரௌஞ்சம் என்ற மாயமலையைத் தகர்த்த மாதிரி தகர்த்து விடுவான் என்று காட்டுவதற்கு இந்த இரண்டு புராண நுட்பங்களைக் கையாளுகின்றார்.

கலையென்பது இன்னொரு வகையில் 64 ஆகவும் கணக்கிடப்பட்டிருக்கிறது. அவை யாவும் கற்றாலும் பயனில்லை என்றும் கூறலாம்.

கலையென்பதைக் "கலைமான்" என்று பொருள் கொள்ளும் உரையாசிரியர்கள் அடுத்தபாட்டில் வருகின்ற "விந்தாடவி"யோடு இந்தப்பாட்டை இணைத்துக்கொள்கின்றனர். கந்தரலங்காரப்பாடல் 66ல் வாய் வேதாந்தம் பேசும் போலிகளுக்கு ஓர் சவுக்கடி கொடுக்கிறார்.

> "நீர்க்குமிழிக்கு நிகரென்பர் யாக்கை நில்லாது செல்வம்
> பார்க்குமிடத்து அந்தமின் போலுமென்பர் பசித்துவந்தே
> ஏற்குமவர்க்கிடவென்னில் எங்கேனும் எழுந்திருப்பர்
> வேற்குமரற்கு அன்பு இல்லாதவர் ஞானமிகவு நன்றே"

என்று எள்ளி நகையாடுகின்றார். 85 வது பாடலில் இடைகலை, பிங்கலையென்ற முறையில் யோகம் பயிலுபவரைக்கண்டு சொல்லுகிறார்,

> "காட்டிற் குறத்திபிரான் பதத்தே கருத்தைப் புகட்டின்
> வீட்டிற் புகுதல் மிக எளிதே விழி நாசி வைத்து
> மூட்டிக் கபால மூலாதார நேரண்ட மூச்சையுள்ளே
> ஓட்டிப் பிடித்து எங்கு மோடாமற் சாதிக்கும் யோகிகளே"

## முப்பத்தி மூன்றாவது பாட்டு

**சிந்தா குல இல் லொடு செல்வ மெனும்**
**விந்தா டவி யென்று விடப் பெறுவேன்**

**மந்தா கினி தந்த வரோதயனே**
**கந்தா முருகா கரு ணாகரனே.**

**பதவுரை**

மந்தாகினிதந்த - கங்கையானவள் (சரவணத்தில் கொண்டுவந்து) **தந்த** வரோதயனே — தேவர்கள் பெற்ற வரத்தின் காரணமாக உதித்த **வனே**, கந்தா — கந்தனெனும் பெயருடையவனே, முருகா — முருகனே, கருணாகரனே — கருணைக்கு பிறப்பிடமானவனே, சிந்தாகுல இல்லோடு — மனதிற்கு வியாகூலத்தைக்கொடுக்கும் சம்சார வாழ்க்கை என்னும் (**சிந்தாகுல**) செல்வமெனும் — கவலையைக் கொடுக்கின்ற ஐச்வர்யம் என்ற விந்தாடவி — ஆச்சரியமான காட்டினை என்று விடப்பெறுவேன் — எப்பொழுது துறக்கக்கடவேன்.

**விரிவுரை**

"சிந்தாகுல" என்ற அடைமொழியை 'இல்'லோடும், செல்வத்தோடும் சேர்த்துக்கொள்க. "இல்" என்பது இல்வாழ்க்கை என்று பொருள். சிலர் 'இல்' என்பதனை மனைவி என்று பொருள் கொண்டு, 'சிந்தாகுல இல்', வருத்தத்தைக்கொடுக்கும் மனைவி என்று பொருள் கூறி, அவ்வாறு வருத்தங்கொடுக்காத அருந்ததி போன்ற மனைவியை ஈண்டு சொல்லவில்லை என்று பிரமாதமான ஓர் பொருளைக்கண்டறிந்ததுபோல் உரை செய்திருக்கின்றனர். முந்தின 4 வது பாடலில் "வளைபட்ட கை மாதொடு மக்கள்," என்று கூறி இருப்பதை இவர் மறந்தனர். மேலே சொன்ன 4ம் பாட்டுப்போலவே இங்கும் மனை வாழ்க்கையைப் பொதுவாய் ஆன்ம விகாஸத்திற்கு விரோதி என்று கூறினதாகச் சொல்வதுதான் பொருந்தும். மனை வாழ்க்கை நல்ல மனைவியானாலும் கெட்ட மனைவியானாலும், வியாகூலம் கொடுப்பதுதான் பெரும்பாலும் உண்மை. ஸம்ஸாரத்தை 'பந்தம்' என்றும் 'ஸாகரம்' என்றும் ஆன்றோர் கூறியிருப்பது காண்க. ஸம்ஸார பந்தம் ஓர் தொடர் சங்கிலிபோன்றது. மனைவி மக்கள், பேரன்கள் என்று ஒன்றின்மேலொன்றாய் பந்தப்படுத்திக் கொண்டேயிருக்கும். குடும்ப ரக்ஷணார்த்தம் படும் அல்லலுக்கு எல்லையேயில்லை. இதனை விவேக சிந்தாமணி பாடல்,

"ஆவீன மழைபொழிய இல்லம் வீழ
அகத்தடியாள் மெய்நோவ அடிமைசாக
மாவீரம் போகுதென்று விதைகொண்டோட
வழியிலே கடன்காரர் மறித்துக்கொள்ளக்

கோவேந்தர் உழுதுண்ட கடமை கேட்கக்
குருக்கள் வந்து தட்சணைக்குக் குறுக்கே நிற்க
பாவாணர் கவிபாடி பரிசு கேட்கப் பாவிமகன்
படுந்துயரம் பார்க்கொணுதே ”

என்று மிக அழகாக வர்ணிக்கின்றது. இதுதான் “ஸம்ஸாரம்” அதனை “சிந்தாகுல இல்” என்று குறிப்பிடுகிருர். இனி செல்வமும் சிந்தாகுலம் கொடுக்கக்கூடியது. தேடுவதில் படும் கஷ்டம், காப்பாற்றுவதில் படும் கஷ்டம் இது இரண்டு தவிர சில லோபிகளுக்கு அதைச் செலவிடுவதிலும் கஷ்டம்.

விந்தாடவி: — விந்தையாகிற அடவி ஆச்சரியத்திற்கேதுவான காடு. இதை ஓர் உரையாசிரியர் விந்த்யமலைக்காடு என்று பொருள் கண்டிருக்கிருர். காட்டினுள் சென்றவர்கள் மீண்டு வர வழி தெரியாமல் திண்டாடவைக்குமாதலால் அது ஆச்சர்யமான காடாயிற்று. தான் சென்ற வழியே தனக்கு மறந்துபோகும். எங்கும் மரம் சூழ்ந்து ஒன்றிற்கொன்று வித்தியாசம் தெரியாமல் தான்சென்ற வழியையும் கண்டுபிடிக்க இயலாது. மேலும் காட்டில் முள்ளும், கல்லும், துஷ்ட ஜந்துக்களும் இருப்பதுபோல, ஸம்ஸார வாழ்க்கையிலும் இன்னல் கொடுக்கும் பல அம்சங்களிருக்கின்றன.

முருகனை மந்தாகினி தந்தவன் என்கின்ருர். சிவபெருமானின் நெற்றிக்கண்களிலிருந்து புறப்பட்ட ஆறு பொறிகளையும், வாயுவும், அக்னியும் கொண்டு போய், கங்கையிலிட அவள் அவற்றைச் சரவணத்தில் சேர்க்க ஆங்கு அவை ஆறு திருவுருவங்களாய்த் தோன்றின என்பது கந்தபுராணம். இதனைக் குமரகுருபரர்,

“ வெந்தகுவர்க் காற்ருத விண்ணோர் முறைக்கிரங்கி
ஐந்துமுகத் தோடதோமுகமுந் – தந்து
திருமுகங்களா ருகிச் செந்தழற்கண் ஆறும்
ஒருமுகமாய்த் தீப்பொறியாறுய்ப்ப – விரிபுவனம்
எங்கும் பரக்க இமையோர் கண்டஞ்சுதலும்
பொங்குதழற் பிழம்பைப் பொற்கரத்தால் – அங்கண்
எடுத்தமைத்து வாயுவைக்கொண்டே குதியென்றெம்மான்
கொடுத்தளிப்ப மெல்லக்கொடுபோய் – அடுத்ததொரு
பூதத்தலைவ கொடு போதியெனத்தீக் கடவுள்
சீதப்பகீரதிக்கே சென்றுய்ப்பப் – போதொரு சற்று
அன்னவளுங்கொண்டமைதற்கரற்ருள் – சரவணத்திற்
சென்னியில் கொண்டுய்ப்பத் திருவுருவாய் – முன்னர்

அறுமீன் முலையுண்டு அழுதுவிளையாடி
நறுநீர் முடிக்கணிந்த நாதன் "

என்று கூறுவதும் காண்க. கந்தபுராணச் செய்யுள்,

" அரனருள் முறையினை யறிந்து கங்கைதன்
சிரமிசை யேந்தியே சென்றோர் கன்னலிற்
சரவண மெனுந் தடந்தன்னிற் சேர்த்தனள்
மரையிதழ் ஆயிடை மல்குற்றுலென "

என்று கூறுகிறது. ஆதலால் முருகனுக்குக் காங்கேயன் எனப் பெயரும் உண்டாயது. மேலும் கங்கையும் பரமசிவனின் தேவியருள் ஒருத்தியாதலால் இறைவன் தந்த ஆறுமுகனை கங்கை புத்திரன் என்று கூறுவது மரபு.

இவ்வாறு மந்தாகினி தந்தவனை, "கருணாகரன்" என்றார். அடுத்த பாட்டிலும், "கங்காநதிபால கிருபாகரனே" என்றார். இதன்பொருள் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கது. கங்கையைத் தலையில் தாங்கிய தத்துவமாவது, கருணையே கங்கை என்று கூறப்படுகின்றது. ஆகையால் கங்கையின் மைந்தன் கருணாகரனாகவும், கிருபாகரனாகவும் வர்ணிக்கப்படுகிறான். மாணிக்கவாசகர், திருச்சாழல் பதிகத்தில்,

" மலைமகளை யொருபாகம் வைத்தலுமே மற்றொருத்தி
சலமுகத்தால் அவன் சடையிற் பாயுமது என்னேடி
சலமுகத்தால் அவன் சடையிற் பாய்ந்திலளேல்
தரணியெலாம்
பிலமுகத்தே புகப்பாய்ந்து பெருங்கேடாம் சாழலோ "

என்று கூறுகின்றார். இவ்வாறு தனது தண்ணளியைத் தலையில் தாங்கி உலகுய்யச் சிறிது சிறிதாய் அளித்திராவிட்டால் உலகமே பிரளயத்தில் மூடிவிடும் என்கின்றார். மக்களின் மலங்களைக் கழுவி, உண்மகிழ்ச்சியைத் தாநின்ற அருட்பிரவாக சிவானந்தஸ்வரூபமே கங்கை.

நெருப்பு, தண்ணீர் இவை இரண்டும் ஒன்றுக்கொன்று மாறுபட்ட குணமுடையவை. நெருப்பு அதிகமானால் தண்ணீரை வற்றடித்துவிடும். தண்ணீர் அதிகமானால் நெருப்பை அவித்துவிடும். இங்கு தேவர்பால் கொண்ட கருணையினால் தன் நெற்றிக் கண்களிலிருந்து உண்டான ஞானக்னியைத் தன் கருணையினால் தணித்தான் என்று கூறலாம். ஆக பரமனின் ஞானமும் அவ

னுடைய கருணையாகிற கங்கையும் சேர்ந்து தேவர்களைக் காக்கத் தோன்றிய உருவமாதலால், மந்தாகினி மைந்தன், கருணாகரனு மாகின்றான் என்று கூறலாம்.

ஆக முருகன் என்பது ஞானமும் கருணையும் சேர்ந்த உருவாகும்.

வரோதயன்:—வர + உதயன். தேவர்களின் வரத்தால் உதித்தவன்.

கந்தன் :— இதன் பொருள் :

(i) கட்டப்பட்டவன், சேர்க்கப்பட்டவன் என்ற பொருளிலே, "சேயவன் வடிவமாறும் திரட்டி நீ ஒன்றாய்ச்செய்தாய். ஆயதனாலே கந்தனும் எனும் நாமம் பெற்றான்."

(ii) வடமொழி "ஸ்கந்த" என்ற பதத்திற்கு ஆக்ரமித்தல், வற்றடித்தல் அதாவது அழித்தல், என்ற பொருள்கள் உள்ளன. "ஆந்தர ஶத்ரூன் ஸ்கந்தயதி ஶோஷயதீதி ஸ்கந்த:" என்ற பிரமாணத்தாலே அநாத்ம விருத்திகளான காமக்ரோதாதி ஆந்தர சத்ருக்களை நாசஞ்செய்பவன்.

(iii) வடமொழி ஸ்காந்தத்தில்,

"ஆக்ரம்ய ச யதோऽஸ்கந்தத் விக்ரமேண ஜகத்த்ரயம் ।
தேன ஸ்கந்தோऽயமாக்யாத: ஸூதஸ்தே கிரிஸம்பவே ॥"

என்று கூறியிருப்பதால், அவன் மூவுலகத்திலும் பராக்ரமத்தோடு ஆக்ரமித்து சஞ்சரித்தபடியால், ஸ்கந்தனெனப்படுவான்

iv ஸ்கந்தன் என்ற சொல்லுக்குப் போர்வீரன் என்ற பொருளு முண்டு. கீதையில், "ஸேநாநீநாம் அஹம் ஸ்கந்த:" என்று இருப்பதால் தோல்வியே காணாத சேனாவீரனாக இருப்பதால் ஸ்கந்தனென்றும் பெயர்.

முக்கியமாய் இரண்டாவதாகக் கூறப்பட்ட பொருளே மிகப் பொருத்தமுடையது, அநாத்ம விருத்திகளை நாசம் செய்கிறவன்.

முருகா என்ற சொல் முன்பே விளக்கப்பட்டது, கருணாகரன் கருணைக்குப் பிறப்பிடம். தங்கச்சுரங்கம் போலும் ரத்னக்கடல் போலும் அளவற்ற குறையாத கருணையுள்ளவன்.

ஆக இப்பாடலில் கருணைக்கடலாகிய முருகனின் அருளால்தான், இல்லம், செல்வம் என்ற பந்தங்களை அறுக்கமுடியும், என்பது உபதேசிக்கப்பட்டது.

கந்தரலங்காரம் 36 வது பாடலில் "சுழித்தோடும் ஆற்றிற் பெருக்கானது" என்று உவமிக்கின்றார்.

மனை, செல்வம் மடந்தை என்பனவெல்லாம் சாச்வதமல்ல, என்று கந்தரலங்காரம் 59வது பாடலில்

"பொங்கார வேலையில் வேலைவிட்டோனருள் போல் உதவ
எங்காயினும் வரும் ஏற்பவர்க்கிட்டது இடாமல் வைத்த
வங்காரமும் உங்கள் சிங்கார வீடும் மடந்தையரும்
சங்காதமோ கெடுவீர் உயிர்போமத் தனிவழிக்கே"

என்றும் ஏற்பவர்க்கிடாத லோபிகள் படும் பாட்டை 53வது பாடலில்

"வேடிச்சி கொங்கை விரும்பும் குமரனை மெய்யன்பினால்
பாடிக்கசிந்து உள்ள போதேகொடாதவர் பாதகத்தாற்
தேடிப்புதைத்துத் திருட்டிற்கொடுத்துத் திகைத்து, இளைத்து
வாடிக்கிலேசித்து வாழ்நாளை வீணுக்கு மாய்ப்பவரே"

என்று கூறுகின்றார்,

### முப்பத்திநான்காவது பாட்டு

**சிங்கார மடந்தையர் தீநெறிபோய்**
**மங்காம லெனக்கு வரந்தருவாய்**
**சங்க்ராம சிகாவல சண்முகனே**
**கங்காநதி பாலக்ருபாகரனே**

### பதவுரை

சங்க்ராம ! - போர்வீரனே, சிகாவல - மயிலேறுபவனே, சண்முகனே — ஆறுமுகனே, கங்காநதிபால — கங்கையின் மைந்தனே, சிங்கார மடந்தையர் — அலங்காரப் பிரியர்களான பெண்களின்மீது கொண்ட, தீ நெறிபோய் — காமவழியில் சென்று, மங்காமல் - அறிவு மங்காதபடி, எனக்கு வரம் தருவாய் — அடியேனுக்கு வரத்தைக் கொடுத்தருளுவாய்.

### விரிவுரை

முன்பு 9 வது பாடலில் "மட்டூர் குழல் மங்கையர் மையல்" என்றார் 24 வது பாடலில் "கூர்வேல் விழி மங்கையர்," என்றார். பன்மையில் கூறுவதனால் இப்பாடல்களில் பரத்தையர்கள் என்று கூறலாம். மேலும் இப்பாட்டில் "தீ நெறி" என்றும் கூறியிருக்கிறார். இம் மூன்று பாடல்களும் அருணகிரியார் விலைமாதரோடு இணங்குவது, ஆன்மலாபம் அடையப்பெரும் தடையாயிருக்கிறது

என்பதைக் கூறுவதாகப் பொதுவாகக் கூறலாமாயினும், சிறிது சிறிது வேற்றுமை கொண்டவை. 9வது பாடலில், அவர்கள் மையலில் சிக்கி உழலும் பரிசு, என்று ஒழியும் என்று இரங்கினர் 24 வது பாடலிலே அவர்களைச் சேர ஆசை கொண்டவருக்கு முருகன் அருள் கிடைப்பது துர்லபம் என்ருர். இந்தப்பாடலில், அவர் களுடைய தீ நெறியிலிருந்து தன்னைக் காப்பாற்ற வேண்டுமென வரமே கேட்கின்ருர்.

முருகனை போர்வீரன், என்றும், மயில்வாகனன் என்றும் அறுமுகவன் என்றும், கங்காபுத்திரன் என்றும், கருணை உருவன் என்றும் அழைக்கிருர்.

தனது அநாத்ம விருத்திகளில் ஒன்ருன காமத்தைப் போர் செய்து வெல்லவேண்டுமென்பதால் "சங்க்ராம!" என்றழைத்தார்.

முன்பு 10வது பாடலில் கூறியபடி சுத்த சித்தி ஸ்வரூபமான மயிலில் வரவேண்டுமென்று, காமம் விலகிய தன் மனதில் வசிக்க வேண்டுமென்று, 'சிகாவல' என்ருர். ஆறு திசைகளிலும் வியா பித்து நிற்கும் தன்மையனுனவனுலேயே, காமநோய் அணுகாமல் தடுக்கமுடியுமென்று "சண்முகனே" என்ருர். கருணை உருவான கங்கையின் புத்திரனும் கருணையே உருவானவனுதலாலும் "கங்கா நதி பாலக்ருபாகரனே!," என்ருர்.

இப்பாடலில் ஆறுமுக தத்துவத்தை ஒருவாறு விளக்கலாமென நினைக்கிறேன். முன்பு 3-வது பாடலில் ஷண்முகனே என் றழைத்தார். திரும்ப இங்குதான் அந்த நாமாவைப் பிரயோகம் செய்கின்ருர். அங்கு அழைத்த "ஷண்முக" நாமாவிற்கும், இங்கு அழைத்த "ஷண்முக" நாமாவிற்கும் பொருள் என்னவென்று பார்ப்போம்.

(i) 3-வது பாடலில் ஏனைய மத சித்தாந்தங்களில் கூறப்பட்ட பரதத்துவ நிர்ணயத்தை ஆராய்ந்து, விளக்கிவிட்டு, என்னையாண்ட இடமாகிய ஷண்முகனே பரதத்துவம் என்ருர். ஷட்கோண சக்கிரம் அகஸ்திய ஸம்ஹிதையில் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதில் பஞ்சமாவரணமான ஷட்கோணங்களுக்கு "வாக்பவ சக்கிரம்" என்று பெயர். இந்தக் கோணங்கள் ஒவ்வொன்றிலும் ஒவ்வொரு வைதிக சமய அதிஷ்டான தேவதைகளின் மந்த்ரங்களும் வைக்கப் பட்டிருக்கின்றன. சைவம், வைணவம், சாக்தம், காணபதம் ஸௌரம், காபாலிகம் அல்லது பைரவம் இந்த ஷண்மதங்களுக்கும்

முருகனே அதிஷ்டான தேவதை என்று ஏற்படுவதால், அவனுக்கு ஆறு முகங்கள் என்று கூறப்படுகின்றது. அதனால்தான் பிற மத சித்தாந்தங்களை, ஆராய்ந்து விட்டு, ஷண்மதங்களுக்கும் முருகனே முதல்வன் என்று கூற நினைத்தவர், சண்முகனே என்று 3-வது பாடலில் அழைத்தார்.

(ii) அதுபோலவே ஷட்கோணங்களில் ஆறு சாஸ்திரங்கள், என்று கூறப்படுகின்ற சிக்ஷை, கல்பம், வியாகரணம், சந்தஸ், ஜ்யோதிஷம், நிருக்தம், என்ற ஆறுக்கும் அவனே கர்த்தா வென்பதைக் காட்ட ஆறுமுகங்கள் கொடுக்கப்பட்டன.

(iii) சதாசிவனுடைய ஐந்து முகங்களும் பராசக்தியின் ஒரு முகமும் சேர்ந்து ஆறு முகங்களானதை முன்பு 18-வது பாடல் விரிவுரையில், ஸ்காந்த ச்லோகம், "ஹந்த தே கதயிஷ்யாமி" சொல்லுவதைக் கூறினோம்.

(iv) பஞ்சப்ரம்மாக்களான, ப்ரம்மா, விஷ்ணு, ருத்ரன், மகேச்வரன், சதாசிவன் ஆகிய ஐவரும் சக்தியின் அதிஷ்டானத்தாலேயே சிருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹார, திரோபவ, அனுக்ரஹங்களைச் செய்வார்கள். ஆதலாலே பஞ்ச பிரம்மாக்களும் சக்தியும் சேர்ந்த சமஷ்டி ரூபமே, முருகன் என்பதால், அவனுக்கு ஆறு முகம்.

(v) குமரகுருபரர், கந்தர்கலி வெண்பாவில், ஷடத்வா ரூபமாய் இருப்பவன் என்கின்றார். ஷடத்வா என்பவை, வர்ணம், பதம், மந்த்ரம், கலை, தத்வம், புவனம் என்ற ஆறு.

> "மந்திரமே சோரியா வான் பதமே மாமுடியாத்
> தொந்தமுறும் வன்னமே தொக்காகப் — பந்தனையால்
> ஒத்த புவனத்துருவே உரோம மாத்
> தத்துவங்களே சத்த தாதுவா — வைத்த
> கலையே அவயமாய்க் காட்டும் அத்துவாவின்
> நிலையே வடிவமா நின்றோய் ... ..."

என்றார். அவை அவனுக்கு ஆறுமுகங்களாயின.

(vi) 'குண்டலியே குஹன்', என்றதால், அவன் பராசக்தியின் வியஷ்டி அம்சம். குண்டலி சக்தி மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம், அனாஹதம், விசுத்தி, ஆக்ஞை, என்ற ஆறு ஆதார கமலங்களிலும் பேதித்துச் செல்லும்போது, ஆங்காங்கு தோன்றும் ஆறுவித அனுபவத்திற்கேற்ப அவனுக்கு ஆறு முகங்களாயின.

(vii) சஹஸ்ரார கமலத்தில் இருக்கும் நிலைக்கு "சாதாக்யம்," என்று பெயர். அது ஆறு விதங்களாக இருக்கும். அவை, (1) மஹாசாதாக்யம் (2) சிவசாதாக்யம் (3) அமூர்த்தி சாதாக்யம், (4) மூர்த்தி சாதாக்யம் (5) கர்த்ரு சாதாக்யம் (6) கர்ம சாதாக்யம், என்பவை. இந்த ஆறுவித சாதாக்ய அனுபவங்களும் முருகனுகவே இருப்பதால், அவனுக்கு ஆறுமுகம் என்பதாயிற்று.

(viii) ஷாட்குண்ய பரிபூரணன் என்பதாக கூறப்படுவதால், அவனுக்கு ஆறுமுகங்கள். ஷட்குணங்களாவன :— (1) ஸர்வக்ஞதை (2) நித்யத்ருப்தி (3) அநாதிபோதம், (4) ஸர்வஸ்வதந்த்ரத்வம் (5) அலுப்தசக்தி (6) அநந்தத்வம், என்ற ஆறு.

(ix) நான்கு திக்குகள் மேல் கீழ் என்ற ஆறு திசைகளிலும் வியாபித்து உள்ளவனுதலால் அவனுக்கு ஆறுமுகங்கள். எல்லாத் திக்குகளிலும் வியாபிப்பவன் (முன் 33வது பாடலின் விரிவுரையைப் பார்க்க).

(x) குஹன் என்ற நாமாவால் ஹ்ருதய குகையில் வசிப்பவன் என்று கூறப்படுகிறது. ஹ்ருதய ஸ்தானமானது தகராகாசம் எனப்படும். அதுவே அனுஹதம்; அந்த அனுஹத சக்ரம் ஆறு கோணங்களையுடையது. ஆகையால் அவனுக்கு ஆறு முகங்கள். "தகரத்தந்த சிகரத்தொன்றில் நடநற்கஞ்சத்துறைவோனே" என்பது அருணகிரியார் வாக்கு. "ஷட்கோணமத்ய நிலயாய நம:" என்பது சஹஸ்ரநாமத்தில் கூறப்பட்டிருக்கிறது.

(xi) முருகனுடைய பிறப்பைக்கூற வந்த கந்தபுராணம் சிவபெருமானின் நெற்றிக்கண்களிலிருந்து கிளம்பிய ஆறு பொறிகளை வாயுவும் அக்னியும் கொண்டு சென்று கங்கையில் சேர்க்க, அவள் சரவணத்தில் சேர்க்க, அங்கு அப்பொறிகள் ஆறும், ஆறு குழந்தைகளாய் உருவெடுக்கப் பின் பார்வதி தேவியார் அவற்றை ஒன்ருகச் சேர்த்து ஒருடலும் ஆறு முகங்களும் கொண்ட ஷண்முகப்பெருமான் ஆயிற்றென்று கூறுவதின் தத்வம் தைத்திரீய உபநிஷத்தில், "தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மன ஆகாச: ஸம்பூத: 1 ஆகாசாத் வாயு:1 வாயோரக்னி: 1 அக்னேராப:1 அத்ப்ய: ப்ருதிவீ 1" என்று கூறப்படுவதால் சிவன் எனும் பரம்பொருளின் அருளால் அதிலிருந்து ஆகாசமும், ஆகாசத்திலிருந்து வாயுவும், வாயுவிலிருந்து அக்னியும் அக்னியிலிருந்து அப்புவும், அப்புவிலிருந்து ப்ருதிவியும் வரிசைக் கிரமமாகத்தோன்றும். ஆக ஆன்மாவும் பஞ்சபூதங்களுமே, பிரபஞ்சமென்று ஏற்படுகிறது. ஆகமுருகன் ஆன்மாவும் பஞ்சபூதங்களுமான

பரபிரம்மத்தின் விமர்சரூபம் என்பதால், ஆறுமுகங்கள் என்பது ஒரு சித்தாந்தம். இந்த ஆறோடு சூரிய சந்திரர்களைச்சேர்த்து, அஷ்ட மூர்த்தங்கள் என்று கூறுவர். ஆனால் சூரியனும் சந்திரனும்கூட இந்த ஆறு தத்வங்களின் சேர்க்கைதான் என்பதையறியும்போது அவையிரண்டும் இவ்வாறில் அடங்கிவிடுகின்றன.

(xii) இறைவன் பஞ்ச க்ருத்யங்களையும் செய்து அப்பாலும் எஞ்சி நிற்பன். ஆதலால் பஞ்சக்ருத்யங்களுக்கு ஐந்து முகங்களும் எஞ்சி நிற்கும் பொருளுக்கு ஒரு முகமும் சேர்ந்து ஆறுமுகங்கள் என்பது ஒன்று.

நக்கீரர் திருமுருகாற்றுப்படை திருச்செந்தூர் பகுதியில்,

"தாவில் கொள்கைத் தந்தொழின் முடிமார்
மணனேர் பெழுதரு வாணிற முகனே"

என்கின்றார். அதோடு நில்லாமல் ஐந்து முகங்களுக்கு சிருஷ்டியாதி தொழில்களைக்கூறி ஆறுவது முகம் பராசக்தியோடு தனித்திருக்கும் என்று கூறுவது கவனிக்கத்தக்கது.

"மாயிருள் ஞாலம் மறுவின்றி விளங்கப்
பல்கதிர் விரிந்தன்று ஒரு முகம்" என்று சிருஷ்டியையும்,

"ஆர்வலர் ஏத்த அமர்ந்தினிது ஒழுகிக்
காதலின் உவந்து வரங்கொடுத்தன்றே"

என்று அனுக்கிரகத்தையும்,

"மந்திரவிதியின் மரபுளி வழாஅ
அந்தணர் வேள்வி ஓர்க்கும்மே" என்று ஸ்திதியையும்,

"எஞ்சிய பொருள்களை ஏமுற நாடித்
திங்கள் போல திசை விளக்கும்மே"

என்று திரோபவத்தையும்,

"செறு நர்த்தேய்த்துச் செல்சமம் முருக்கிக்
கறுவு கொள் நெஞ்சமொடு களம் வேட்டன்றே"

என்று சம்ஹாரத்தையும் கூறிவிட்டு கடைசியாக,

"குறவர் மடமகள் கொடிபோல் நுசுப்பின்
மடவரல் வள்ளியொடு நகை யமர்ந்தன்றே"

என்று அவன் அவனில் பிரிவிலா சக்தியோடு வேறாயிருக்கும் நிலையையும் கூறியுள்ளார். இந்த ஆறுமுகங்களும் ஓர் பேரானந்த அனுபவமென்றே கந்தரலங்கார 47வது பாடலில் இந்தக் காட்சியை,

" புத்திக் கமலத்துருகிப் பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரை புரளும் பரமானந்த சாகரத்தே"
கண்டதாகக் கூறுகின்றார்.

### முப்பத்தைந்தாவது பாட்டு

**விதி காணுமுடம் பைவிடா வினையேன்**
**கதி காணமலர்க் கழலென் றருள்வாய்**
**மதி வாணுதல் வள்ளியை யல்லது பின்**
**துதி யா விரதா சுர பூபதியே.**

### பதவுரை

மதிவாள் நுதல் — சந்திரன்போல பிரகாசிக்கும் முகத்தையுடைய, வள்ளியை யல்லது பின் — வள்ளிநாச்சியாரையன்றி (வேறு எவரையும்) துதியா — துதிக்காத, விரதா — கொள்கையுடையவனே, சுரபூபதியே — தேவர்களின் தலைவனே, விதி காணும் உடம்பை — பிரம்மனால் படைக்கப்பட்ட சரீரத்தை, விடாவினையேன் — விடாமல் மீண்டும் மீண்டும் சரீரமெடுத்துழலும் வினையையுடையவனாகிய நான், கதிகாண — மறுபடியும் கருவில் வந்து சேராத பேரா இயற்கையையடைய, மலர்க் கழல் — வீரக்கழல் அணிந்த பாதபங்கயத்தை, என்றருள்வாய்—எப்போது தந்தருளப்போகிறாய் ?

### விரிவுரை

" கழல் " என்பது வீரகண்டாமணி, அதை அணிந்த திருப் பாதங்களுக்கு ஆகு பெயராய் நின்றது.

" விதிகாணும் உடம்பு " விதி, ஊழ், நியதி, தெய்வம் என்பன ஒரு பொருட் கிளவி என்றார் பரிமேலழகர். விதி என்பது இருவினைப் பயன் செய்தவனையே சென்றடைதற்கு ஏதுவாகிய நியதி அல்லது முறை. வினையைக் கர்மா என்பர் வடமொழியாளர். கர்மா செய்யும் வரை பிறப்பும் அறாது, திரும்பத்திரும்ப வந்துகொண்டேயிருக்கும்.

உடம்பை விடாவினை என்றதால் சரீரம் எடுத்தலை நிறுத்தாமல் நிகழ்த்தும் கர்மா என்பது பொருள். உடம்பின் மீது கொண்ட பற்று அல்லது சரீர வாஞ்சையை விடாத கர்மா என்றுமாம். சரீர வாஞ்சையினாலேயே மனிதன் வினைகளைச் செய்கிறான். உடம்பின்மீது கொண்ட பற்றே அவாவை விளைவிக்கின்றது. ஆக பற்றுவிட்டால்

அவா அகலும். அவா அகன்ருல் வினையும் நீங்கும். வினை நீங்கிளுல் மறுபிறப்பு இல்லை யென்று இப்படி சங்கிலிபோல பற்று, அவா, வினை புனர்ஜென்மம் என்பவை இருக்கின்றன. இதனைத் திருவள்ளுவர் அழகாகத் தமது குறள் பாக்களில் கூறுகின்ருர்.

"அவாவினை யாற்ற வறுப்பிற் றவாவினை
தான்வேண்டு மாற்ருன் வரும்"

"ஆராவியற்கை யாவாநீப்பி னந்நிலையே
பேரா வியற்கை தரும்"

பேரா இயற்கை என்றது இருவினை ஒப்பு என்ற ஜீவன் முக்த நிலை. கீதையில் சொல்லுவதுபோல சரீரம் எடுத்தவர்கள் கர்மா செய்யாமலிருக்கமுடியாது. ஆனல் அவற்றின் பலனைக்கருதாது செய்யின் வினையின் பயன் எய்தாது. இதுவே இருவினை ஒப்பு என்பது. இம்மையில் ஜீவன்முக்தர் ஆனேர்க்கு புனர் ஜன்மம் கிடையாது. இதைத்தான் "கதி" என்ற சொல்லால் குறிப்பிடுகிருர்.

பிறப்பதெல்லாம் அழியும் இயல்புடையன. பிறப்பது வினையின் பயன். வினையின் பயனை அளிக்கிறவன் இறைவன். இதைத்தான், 'விதி' என்கின்ருேம். அவனவன் செய்த வினைக்குத் தகுந்தபடி இறைவன் தனு கரண புவன போகங்களை அளிக்கிருன். வினை யற்ற ஞான்று பிறப்பும் ஒழியும். அதுவே, "பேரா இயற்கை" என்று வள்ளுவராலும், "கதி" என்று இப்பாட்டிலும் கூறப் பட்டிருக்கிறது.

இனி வினையை விடுதற்கு வழியும் கூறுகின்ருர். இறைவனின் 'மலர்க்கழல்களே' வழி என்று கூறுகின்ருர். பாதங்களே பந்த மறுக்குமென்பதை,

"ஜன்ம ஜலதௌ
நிமக்னாநாம் தம்ஷ்ட்ரா முரரிபு வராஹஸ்ய பவதி"

என்கின்ருர் சங்கரர். இதனை வள்ளுவப்பெருமானும்,

"கற்றீண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றீண்டு வாரா நெறி" என்ருர்.

ஈண்டு "மெய்ப்பொருள்" என்பதும், இப்பாட்டில் "மலர்க் கழல்" என்பதும் ஒரே பொருளையுடையன என்று உணரவேண்டும். இறைவன் தாளில் பற்றுக்கொண்டவர்களுக்கு பிறவாநெறி எய்தும். இதனை, முதல் அதிகாரத்திலேயே, திருவள்ளுவ நாயனுர்,

" அறவாழி அந்தணன் தாள் சேர்ந்தார்க்கல்லால்
பிறவாழி நீந்தல் அரிது "

என்று கூறியுள்ளார். அநுபூதியடைந்த அருணகிரியார் தனக்கென்று இந்தப் பிரார்த்தனை செய்தார் என்று கொள்ளமுடியாது. ஏனெனில் கந்தரலங்காரப் பாடல்களில், " ப்ரபஞ்சமென்னும் சேற்றை கழிய " விட்டதாயும், " கால் பட்டழிந்தது இங்கு என் தலைமேல் அயன் கை எழுத்தே " என்றும் " நின்னை உணர்ந்து உணர்ந்து எல்லாமொருங்கிய நிர்க்குணம் பூண்டென்னை மறந்திருந்தேன், இறந்தேவிட்டது இவ்வுடம்பே " என்றும் கூறியிருப்பதால் அவருடைய அனுபவமாக அடைந்த பேற்றை, அதாவது முருகனின், ' மலர்க்கழலை 'ப்பற்றியதால் தான் அடைந்த " பேரா இயற்கை "யை நமக்கு உபதேசிக்கின்றார்.

' வள்ளியை அல்லது பின் துதியா ' என்றதற்குத் தத்துவப் பொருள் " திணியான மனோசிலை " என்றாரம்பிக்கும் 6வது பாட்டு விரிவுரையில் கூறினோம். முருகனாகிய முழுமுதற்கடவுளுக்கு துணைக் காரணமான பராசக்தியே வள்ளி. அவள் அவனுடைய அருட் சக்தியுமாம். வைணவ சித்தாந்தத்தில் இறைவியை " புருஷகார பூதை " என்பார்கள். அவளுடைய சந்நிதியிலேயேதான் இறைவன் தொழிற்படுகிறான். அதை இங்கு ' துதித்தலாயும் ' 6ம் பாட்டில் ' பதம் பணிவ 'தாயும் கூறியிருக்கின்றார். தன்னைவிட்டு நீங்கா இறைவியோடு சேர்ந்தே உயிர்களுக்கு அனுக்ரஹம் செய்கின்றான்.

" ஸ்ருஷ்டிகர்த்ரீ ப்ரஹ்மரூபா கோப்த்ரீ கோவிந்தரூபிணீ
ஸம்ஹாரிணீ ருத்ரரூபா திரோதானகரீச்வரீ
ஸதாசிவா அனுக்ரஹதா பஞ்சக்ருத்ய பராயணா "
(லலிதா ஸஹஸ்ரநாமம்)

ஆதலால் வள்ளி நாச்சியாரோடு சேர்ந்த மூர்த்தமே மலநாசஞ் செய்து அனுக்ரஹம் செய்யும். பக்குவ ஆன்மாக்களுக்கே தான் சென்று உபதேசம் வழங்கி ஆட்கொள்ளுவானாதலாலே அந்த பக்குவம் வருவதற்கு சரீரவாஞ்சையால் ஏற்படும் இருவினையையும் விட்டுவிட வேண்டுமென்பது குறிப்பாய் உணர்த்தப்பட்டது.

## முப்பத்தாறுவது பாட்டு

நாதா குமரா நம வென்று அரனார்
ஓதாய் என ஓதியது எப்பொருள்தான்
வேதா முதல் விண்ணவர்சூடு மலர்ப்
பாதா குறமின் பத சேகரனே.

### பதவுரை

வேதா முதல் விண்ணவர் – பிரமதேவன் முதலாக ஏனைய சகல தேவர்களும், சூடும் மலர் பாதா – தமது தலையில் சூடிக்கொள்ளும் மலர் போன்ற பாதங்களையுடையவனே, குறமின் பதசேகரனே – குறவர் குடியில் பிறந்த வள்ளியின் பாதங்களைத் தலையில் தரித்துக்கொள்பவனே அரனுர் - சிவபெருமான், நாதா – யாவற்றிற்கும் தலைவனே ! குமரா – அழியாத இளமையுடையவனே ! நம – நமஸ்கரிக்கின்றேன், ஓதாய் - எனக்கு உபதேசிப்பாய், என ஓதியது – என்று வேண்ட (நீ அவருக்கு) உபதேசித்தது, எப்பொருள்தான் – எத்தகைய பொருளோ ?

### விரிவுரை

" ஸ்மர கரல கண்டனம் மம சிரஸி மண்டநம்
தேஹி பத பல்லவமுதாரம் "

மன்மதாவஸ்தையாகிற விஷத்தைப் போக்குவதும் எனது சிரசிற்கு அலங்காரமானதுமான உன்னுடைய அழகிய பாதங்களை என் தலையில் சூட்டு. தேவர்கள் இவன்பாதத்தை சிரசில் தாங்குகிறார்கள். இவன் வள்ளி பதத்தைத்தன் தலையில் சூடிக்கொள்கிறான். வேதாமுதல் விண்ணவர் உன்பாதத்தைத் தங்கள் தலையில் சூட்டிக் கொள்ள, நீ வள்ளியின் பாதத்தை உன் தலையில் சூடியிருக்கிறாய், என்ற வாசகத்திலிருக்கும் கவி சாதுர்யமும், தத்துவப் பொருளும் உணர்ந்து மகிழத்தக்கது. வேதாமுதல் விண்ணவர் முருகனின் பாத மலரைத் தமது சென்னிகளில் சூடிக்கொண்டதற்கு விளக்கம் தேவையேயில்லை. நக்கீரர் திருமுருகாற்றுப்படையில், திருவாவினன் குடி பகுதியில், திருமால், சிவன், இந்திரன், முப்பத்து முக்கோடி தேவர்கள், பதினெண் கணங்கள், கந்தர்வர்கள், இருடிகள் யாவரும் முருகனிடம் " உறுமுறை மருங்கில் தம் பெரும்முறை கொள்வ" தற்குச் செல்வதாகவும், பிரம்மாவின் சாபத்தைத்தீர்க்க அவனிடம் தூதுகோஷ்டியாகப் போவதாயும் கூறுவது ஈண்டு கருதற்பாலது. மணிவாசகர் " வேத முதல் விண்ணோரும் மண்ணும் துதித்தாலும் ஓதவுலவா " என்றருளிச் செய்கின்றார்.

" குறமின்பத சேகரன் " என்பதற்கு, " பணியாவென வள்ளி பதம் பணியும் " என்ற விடத்து உரையைக்காண்க (6 வது பாடல்) நாதா, குமரா நம என்று அரனுர் முருகனைப் பிரார்த்தித்ததாகக் கூறுகின்றார். நச்சினார்க்கினியர், தமது "திருமுருகாற்றுப்படை

உரையில், "ஆறெழுத்தடக்கிய அருமறைக் கேள்வி," என்று வரும் திருவேரப் பகுதியில், "நம: குமாராய" என்பது சடக்ஷர மந்திரம் என்று கூறிப் போந்தார். "குமாராய நம" என்பதே மந்த்ரம் என்றும் கொள்ளலாம்.

இனி சிவபெருமான் முருகனிடம் பிரணவப் பொருள் உபதேசம் பெற்றூர் என்றதன் தத்துவத்தை ஆராய்வோம். சிவபெருமானுக்கு பிரணவப் பொருள் தெரியாதா? அருணகிரியாரும் ஒரு திருப்புகழில்,

"சிவனுர் மனங்குளிர உபதேச மந்த்ர மிரு
செவி மீதிலும் பகர் செய் குரு நாதா"

என்று பாடியிருக்கிறுர். மேலும் திருச்செந்தில் திருப்புகழொன்றில், "கொன்றை சடையர்க்கு ஒன்றைத் தெரியக் கொஞ்சித் தமிழைப் பகர்வோனே" என்று தமிழிலேயே உபதேசம் என்றுகூடச் சொல்லி இருக்கிறுர். இதன் உண்மையென்ன?

சிவம் என்ற பரம்பொருள் தனது ஸ்வரூப நிலேயில் நிருபாதிக ஸம்வித் ரூபமாய், அருவாய், நிர்விகாரமாய் இருக்கும். அதற்கு "நான்" என்ற தோற்றமேயில்லே. அது தன்னேடு அபின்னமா யிருக்கும் சக்தியின் அதிஷ்டானத்தால் உருவம் பெறுகின்றது. சிவம், சிவன் என்ருகின்றது. இந்த சக்தியின் அதிட்டிப்பு சலன ரூபமாய் இருக்கும், என்பதை மந்த்ர சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஞான வாஸிஷ்டத்தில்,

"ஸ்பந்தேன லக்ஷ்யதே வாயு: வன்ஹி ருஷ்ணேன லக்ஷ்யதே 1
சின்மாத்ரம் அமலம் சாந்தம் சிவ இத்யுதிதம் து யத் 1
தத் ஸ்பந்தமய சக்த்யைவ லக்ஷ்யதே நாந்யதா கில 11"

என்று கூறப்பட்டிருக்கின்றது. ஸ்பந்தம் என்ருல் துடிப்பு அசைவு, Vibration என்று பொருள். அசைவு இருந்தால் அதோடு ஓசையும் இருக்கும். சிவத்திலிருந்து சக்தி உதிக்கும்போது உண்டாகும் அசைவே பிந்து என்றும் அதன் ஓசையே நாதம் என்றும் கூறுப. இந்த ஓசைதான் பிரணவம். ஆக நிர்விகாரமாய் இருந்த பிரம்மம், ஸகுணமாகும்போது எழும் ஓசையே நாதம் அல்லது பிரணவம். முருகன் தான் நாததத்துவம். பிரணவத்தின் அதிஷ்டானன், பிரணவத்தின் பொருள். ஆக தன்னிடத்திலிருந்த முதல் நாதமாகிய பிரணவத்தை ஸகுண நிலேயில் விரிந்த சிவன் கேட்டான் என்பது தான் உள்பொருள்.

சிவன் வேறல்ல, முருகன் வேறல்ல. ஒன்று விசேஷம், மற்றொன்று சாமான்யம். அரணிக்கட்டையில் நெருப்பு மறைந்திருக்கிறது. அது சாமான்யாக்னி. அதைக்கடைவதால் நெருப்பு உண்டாகின்றது. அந்நெருப்பு அரணிக்கட்டையை யெரித்துவிடும். ஆனால் விசேஷரூபமான அரணியில் சாமான்ய அக்னி இருந்தாலும் அது அரணியை எரிப்பதில்லை. விசேஷத்திற்கும் சாமான்யத்திற்கும் பரஸ்பர விரோதமில்லை. ஆக சிவத்தில் ஒடுங்கிக்கிடந்த நாதம் முருகன். இந்த நாதத்தை ஸகுணமான நிலையில் சிவன் இரு செவியாலும் கேட்டான் என்பதுதான் இதில் அடங்கிய தத்துவார்த்தம். விரிக்கிற்பெருகும். புரிவதும் கொஞ்சம் சிரமம்தான். தன்னிடத்திலிருந்து எழுந்த நாதத்தைத் தானே கேட்டான், தானே தனக்கு மகனான சிவன். இம்முறையில் சிவ குஹ அபேதம் வலியுறுத்தப்படுகின்றது. அரணியிலிருந்த நெருப்புக்கடைவதால் வெளிப்படுவது போல், சிவத்தில் ஒடுங்கிக்கிடந்தநாதம் சக்தியின் அதிஷ்டானத்தால் முருகனாக விரிந்து அந்த பிரணவ நாதத்தை சிவனே முதன் முதல் கேட்டான். அதை பிரம்மன் என்ற சிருஷ்டிக்கடவுள் அறியவில்லை, என்ற புராண வரலாற்றின் அடிப்படைப்பொருள் இது.

இதைக் கந்தரலங்காரப்பாடலில் (63) மிக அழகாகக் கூறுகின்றார் அருணகிரியார்.

" பாதித்திருவுருப்பச் சென்றவர்க்குத் தன் பாவனையைப்
போதித்த நாதன் " என்கின்றார்.

இனி உபதேசம் எத்தகையது என்பதை, பெருத்த வசன வகுப்பில்,

" எருக்கும் இதழியும் முடிக்கும் இறைகுரு
எமக்கும் இறையவன் எனத்திகழுவதும்
... ... ... ... ... ... ...
இருக்கு முதலிய சமத்த கலைகளும்
இதற்கெதிரென இணைக்க அரியதும்
... ... ... ... ... ... ...
ஒருக்கு வணவுபநிடத்தின் இறுதிகள்
நிரப்பு கடையினில் இருப்பை உடையதும் "

என்றும் இன்னும் பலவிதமாகவும் விதந்தோதுகின்றார். பிரணவத்திற்கு இத்தகைய ஏற்றத்தை வேறு யாரும் எங்கும் கொடுத்ததில்லை என்னும்படி இந்தத் திருவகுப்பு அமைந்துளது. இப்பாட்டில், " எப்பொருள்தான் " என்று கேட்ட கேள்விக்கு பதில் இந்தத் திருவகுப்பு.

## முப்பத்தேழாவது பாட்டு

**கிரிவாய் விடுவிக்ரம வேலிறையோன்**
**பரிவார மெனும் பத மேவலையே**
**புரிவாய் மனனே பொறையாமறிவால்**
**அரிவாய் அடியோடும் அகந்தையையே**

### பதவுரை

கிரிவாய் — க்ரௌஞ்ச மலைமீது, விடு — பிரயோகித்த, விக்ரம — வெற்றியுடைய, வேல் — வேலாயுதத்தின், இறையோன் — தலைவனுகிய முருகனுடைய, பரிவாரம் - தொண்டர், எனும் பதம் — என்றபதவியை, மேவலையே — மேவுதலையே, புரிவாய் - செய்குவாய், பொறையாம் அறிவால் — சாத்துவிக குணத்தின் அறிவால், அகந்தையையே — ஆணவத்தை, அடியோடும் அரிவாய் — வேரோடு களையக்கடவாய், மனனே! — ஏ மனமே!

### விரிவுரை

*பரிவாரம் எனும் பதம் மேவலையே என்றதை மேவவில்லையே, என்று எதிர்மறையாகவும் கொள்வர். மேவல் என்ருல் விரும்புதல் சேர்தல் என்று பொருள். இனி, பரிவாரம் என்னும் பதம் — உனது தொண்டர்கள், என்ற பதத்தை யடைந்தவருடைய ஏவலையே, இடும் பணிகளையே புரிவாய் என்றும் பிரித்துப் பொருள் கொள்ளலாம். ஓர் உரையாசிரியர், " இமையோர் பரிவு ஆரம் எனும் " என்று பிரித்து தேவர்களின் அன்பையே மாலையாக உடைய பாதங்களின் ஏவல் அல்லது மேவல் அல்லது மேவலையே என்று, திருவடிகளின் ஏவுதலை புரிதல் என்றும், திருவடிகளில் மேவுதலைப் புரிதல் என்றும், திருவடிகளில் மேவவில்லையே, இனிமேலாவது புரிவாய் என்றும் பொருள் கூறுவர். இறைவனுடைய தொண்டர் என்ற பதத்தை மேவுதலையே புரிவாய் என்பது சிறந்த பொருளாக அமைகின்றது.*

*பொறையாம் அறிவால், என்றதில் பொறை என்ற சொல்லுக்கு மலை, சகிப்புத்தன்மை, சாத்துவிககுணம், பெரியோரியல்பு என்றெல் லாம் பொருள்கள் உண்டு. பொறை என்றதை மலையென்றே பொருள் கொண்டு மலைபோல் அசையாத மெய்ஞ்ஞானத்தால், என்றும் பொருள் கொள்ளலாம்.*

அகந்தை: அஹங்காரம், அகம்பாவம், செருக்கு, ஆணவம், என்பன ஒரு பொருட்கிளவி. "யான் எனது என்னும் செருக்கு" என்று வள்ளுவர் கூறுவதும் காண்க

இப்பாட்டில் தொண்டருக்குத் தொண்டனும் பெருமை கூறி, அவ்வாறு தொண்டருக்குத் தொண்டு செய்வதால் "யானெனது" என்ற அகந்தை அழியும் என்று காட்டுகிறார். இக்கருத்து பல அடியார்களால், பலமுறை கூறப்பட்டிருக்கின்றது. மாணிக்கவாசகர் பல இடங்களில் கூறுகின்றார். திருவெம்பாவை 9-வது பாடலில்

"உன்னடியார்தாள் பணிவோம் ஆங்கவர்க்கே பாங்காவோம்
அன்னவரே எங்கணவராவார் அவர் உகந்து
சொன்ன பரிசே தொழும்பாய்ப் பணி செய்வோம்",

என்றும், 19-வது பாடலில்,

"என் கொங்கை நின்னன்பர் அல்லார் தோள் சேரற்க"

என்றும், கோயின் மூத்ததிருப்பதிகத்தில்,

"அடியேன் உன் அடியார் நடுவுளிருக்கும் அருளைப்புரியாய்"

என்றும் கூறியிருப்பது காண்க.

பெரியாழ்வார் தமது திருப்பல்லாண்டு பிரசுரத்தில்,

"வாழாட்பட்டு நின்றீர் உள்ளீரேல் வந்து
மண்ணும் மணமும் கொண்மின்
கூழாட்பட்டு நின்றீர்களை எங்கள்
குழுவினிற் புகுத லொட்டோம்"

என்று கூறுகின்றார். நம்மாழ்வார்,

"பயிலும் சுடரொளி மூர்த்தியைப் பங்கயக்கண்ணனைப்
பயில இனிய நம் பாற்கடல் சேர்ந்த பரமனைப்
பயிலும் திருவுடையார் யாவரேனும் அவர்கண்டீர்
பயிலும் பிறப்புடைதோறும் எம்மையாளும் பரமரே,

என்று கூறுகின்றார். அப்பர் சொல்வது,

"ஆ உரித்துத் தின்னும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க்கு அன்பராகில்
அவர் கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே",

என்பது. திருவரங்கக் கலம்பகத்தில்,

"பழி தொழிலும் இழிகுலமும் படைத்தோரேனும்
ஆதியா, அரவணையா என்பாராகில்
அவரன்றோ யாம் வணங்கும் அடிகளாவார்",

என்பதனையும் காண்க.

சுந்தரர் தமது திருத்தொண்டத் தொகையில் ஒவ்வொரு அடியாருக்கும் தம்மை ஆட்படுத்திக்கொண்டார்.

வைணவ சித்தாந்தத்தில் பகவத் ஆராதனையைவிட, பாகவத ஆராதனை சிறந்ததாகக் கருதப்படுகிறது. இம்மாதிரி எத்தனையோ சான்றுகள் உள. தொண்டர்களின் கூட்டுறவால் ஜீவன்முக்தியே அடையலாம் என்பது சங்கருடைய தீர்மானம்.

"ஸத் ஸங்கத்வே நிஸ்ஸங்கத்வம் நிஸ்ஸங்கத்வே நிர்மோஹத்வம்
நிர்மோஹத்வே நிச்சலிதத்வம் நிச்சலிதத்வே ஜீவன்முக்தி:"

என்பது நாம் எடுத்துக்கொண்ட பாடலுக்கு ஒத்து வருகின்றது. தொண்டருக்கு சேவை செய்வதால் அகந்தை அறும் என்ற கருத்து இரண்டிலும் இருப்பது காண்க. இனி அருணகிரியாரே கந்தரலங்காரம் 100-வது பாடலில்,

"இடுதலைச் சற்றும் கருதேனைப் போதமிலேனை அன்பால்
கெடுதலிலாத் தொண்டரிற் கூட்டியவா"

என்று கூறுகின்றார். "தொண்டருளன்" என்பது மணிவாசகம். தொண்டருளம் கோயில்கொண்டவன். ஆகையால் அவர்களுக்குச் செய்யும் தொண்டு இறைவனுக்கே செய்ததாகக் கருதப்படுகின்றது. மேலும் இறையருளில் தோய்ந்த அடியாருடன் இணங்குவது நீந்தத் தெரியாதவன் நீந்தத்தெரிந்தவன் உதவியால் அக்கரையடைவது போல சுலபமான வழி. கந்தரலங்கார மேற்கோள்பாடல்,

"சூரிற் கிரியிற் கதிர்வேலெறிந்தவன் தொண்டர் குழாஞ்
சாரிற் கதியன்றி வேறில்லை காண், தண்டு தாவடி போய்த்
தேரிற் கரியிற் பரியிற் திரிபவர் செல்வமெல்லாம்
நீரிற் பொறி யென்றறியாத பாவி நெடு நெஞ்சமே"

## முப்பத்தெட்டாவது பாட்டு

**ஆதாளியை யொன்றறி யேனையறத்**
**தீதாளியை யாண்டது செப்புமதோ**
**கூதாள கிராத குலிக்கிறைவா**
**வேதாள கணம் புகழ்வேலவனே**

## பதவுரை

கூதாள கிராத குலிக்கு — வெண் கூதாளத்தைத் தொடுத்து மாலையாக அணிந்த வேடுவ குலத்துப் பெண்ணுகிய வள்ளியம்மைக்கு, இறைவா — நாயகனே, வேதாள கணம் — வேதாளக்கூட்டங்கள், புகழ் வேலவனே — புகழ்கின்ற வேலையுடையவனே, ஆதாளியை — வீம்பு பேசுகிறவனை, புரட்டுக்காரனை, படாடோபம் உள்ளவனை, வீண்டம்பக் காரனை, ஒன்றறியேனை — யாதும் அறியாதவனை, அறத்தீதாளியை — தர்மத்திற்கு விரோதமான குற்றத்தை ஆளுகின்றவனை, ஆண்டது — ஆட்கொண்டது, செப்புமதோ — சொல்லமுடியுமோ.

## விரிவுரை

***கூதாளம்*** என்பது வெள்ளரி அதன்பூவைச் சூடுவர் வேடுவர், என்பதை நக்கீரர் குன்றுதோருடல் பகுதியில், "வெண் கூதாளம் தொடுத்த கண்ணியன்" எனக்கூறுகிருர்.

*கிராதகுலி :* வேடர் குலத்துதித்தவள் வள்ளி

**வேதாள கணம் புகழ்வதாவது :** முருகன் அசுரரோடு போர் புரிந்த காலத்தில் அசுரர் பலரும் யுத்தகளத்தில் வெட்டுப்பட்டும், குத்துப்பட்டும் இறக்க, அந்த பிணங்களை வயிருர உண்ட பைசாசக் கூட்டங்கள் தங்களுக்கு வேண்டிய அளவு ஆகாரம் கிடைத்த மகிழ்ச்சியில் அவற்றைத்தந்த வேலவனைப்புகழ்கின்றன என்று. இதனை நக்கீரரும் திருப்பரங்கிரிப்பதிகத்தில்,

> "உலறிய கதுப்பின் பிறழ்பல் பேழ்வாய்ச்
> சுழல் விழிப் பசுங்கண் சூர்த்த நோக்கின்
> கழல் கண் கூகையொடு கடும்பாம்பு தூங்கப்
> பெருமுலை அலைக்கும் காதிர் பிணர் மோட்டு
> உருகெழு செலவின் அஞ்சுவரு பேய் மகள்
> குருதியாடிய கூர் உகிர்க் கொடுவிரல்
> கண்தொட்டு உண்ட கழிமுடைக் கருந்தலை
> ஒண் தொடித் தடக்கையின் ஏந்தி வெருவர
> வென்றடு விறற்களம் பாடித்தோள் பெயரா
> நிணம்தின் வாயள் துணங்கை தூங்க"

எனக்கூறுவதால் அறியலாம். மேலும் 'பரணி' நூல்களில் யுத்த களத்தில் பேய்களின் செயல்கள் விரிவாக வர்ணிக்கப்பட்டுள்ளன. (தக்க யாகப்பரணி, கலிங்கத்துப்பரணி முதலிய நூல்களைப்பார்க்க.)

குறவர் குலத்தில் பிறந்தவள் என்று கூடப்பாராமல் வள்ளியை வலியச்சென்று ஆட்கொண்ட பரம கருணாமூர்த்தியாகையாலே என்னுடைய சிறுமையையும் பாராது என்னையும் ஆண்டு கொண்டாய்! உன்னுடைய கருணையின் எல்லையை எப்படிக் கூறுவது, என்கின்றார். அடியார்கள் பலரும் இவ்வாறு தமது தகுதி யின்மையையும் ஆண்டவன் அருளையும் ஒப்பிட்டுப் பாடியுள்ளனர்.

மாணிக்கவாசகர்,

" ஊனக்குக் கலந்த அன்பாகிக் கசிந்து உள் உருகும்
நலந்தான் இல்லாத சிறியேற்கு நல்கி,
நிலந்தன் மேல்வந்தருளி நீள் கழல்கள் காட்டி "

என்று அகவலிலும், அதிசயப்பத்தில்,

" எண்ணிலேன் திருநாம அஞ்செழுத்தும் ஏழைமையதனாலே
நண்ணிலேன் கலைஞானிகள் தம்மொடு நல்வினை நயவாதே
மண்ணிலே பிறந்திறந்து மண்ணாவதற்கொருப்படுகின்றேனை
அண்ணல் ஆண்டு தன் அடியாரிற்கூட்டிய அதிசயம்
கண்டோமே "

என்றும்,

" செம்மை நலம் அறியாத சிதடரொடுந்திரிவேனை
மும்மை மலம் அறுவித்து முதலாய முதல்வன் தான்
நம்மையுமோர் பொருளாக்கி நாய் சிவிகை ஏற்றுவித்த
அம்மை எனக்கருளியவாறார் பெறுவாரச்சோவே "

என்று அச்சோபத்திலும் இன்னும் பிறவிடங்களிலும் கூறியிருப்பது காண்க. அருணகிரியாரே பல திருப்புகழ்களில் தம்மை வெகுவாக இகழ்ந்துகொண்டிருக்கிறார்.

ஒன்றறியேனை, என்றதை யாதொன்றும் அறியாத அறிவிலியை, என்றும், ஒப்பற்ற ஒன்றை அறியாத அறிவிலியை என்றும் பொருள் கொள்ளலாம்.

" கட்டறுத் தெனை யாண்டு கண்ணார நீறு
இட்ட அன்ப ரோடி யாவரும் காணவே
பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டினோ டிரண்டும் அறியேனையே "

" அறிவனே யமுதே யடி நாயினேன்
அறிவனாகக் கொண்டோ வெனையாண்டது

அறிவிலாமை யன்றே கண்ட தாண்டநாள்
அறிவனே அல்லனே அருள் ஈசனே ", (திருச்சதகம் 49, 50)

என்ற மாணிக்கவாசகர் பாடலோடு ஒப்புநோக்குக.

அறத்தீதாளி, என்பதில் 'அற' என்பதை மிகவும் அல்லது முழுதும் என்ற பொருள் கொண்டால், முழுதும் தீதானவற்றையே ஆளுகின்றவன் அதாவது பெரிய குற்றவாளி என்னலாம். அறத் தீதாளி என்பதை அறம் + தீதாளி என்று கொண்டு, தர்மத்தையே குலைத்தவன், நேர்வழிக்கே குற்றம் இழைத்தவன், அறவழிக்கே தீது செய்தவன், என்றும் கூறலாம்.

" தாக்க மருக் கொரு சாரையை வேருெரு
சாக்ஷி யறப்பசியாறியை நீறிடு
சாஸ்திர வழிக்கதி தூரனை ",

என்று திருத்தணிகைத் திருப்புகழ் ஒன்றில் கூறுவது காண்க. இதற்கு வேறு பாடபேதமுளதேனும் நிலவிவரும் பாடத்தைக் கொடுத்திருக்கின்றோம்.

[ பாடபேதம்,

" தாக்கு மருந்தையுள் நாசியிலே மிகு
நோக்கினை வைத்தறிவோடு சமாதி செய்
சாக்கிரத முற்றும் மனோரதமாகிய — தவமுழ்கும் "

என்பது. யோக நிஷ்டை லக்ஷணம் கூறி, தவத்திற்கு லக்ஷணமாகக் கூறியிருப்பதை தற்காலப் பதிப்புகளில் மேலே எழுதியபடி அச்சிட்டிருக்கிறார்கள் ].

ஓர் உரையாசிரியர், ஆதம் + ஆளி என்று பிரித்து, அறிவின் மையை ஆளுபவனை என்று பொருள் கொள்கின்றார். ஆதம் என்றால் ஆதரவு, விருப்பு, கூந்தற்பனை என்று அகராதி, பொருள் கூறுகிறது. சூடாமணி நிகண்டில் ' ஆதன் என்றால் அறிவிலான் என்று இருக்கிறது. ஆனால் அடுத்த சொற்றொடரில், " ஒன்று அறியேன்" என்று வருவதால், ஆதாளி என்பதற்கு, அறிவின்மையை ஆளுகிறவன் என்று பொருள் கூறுவது பொருந்தாது.

கந்தரலங்காரத்திலும் தன்னை நிந்தித்துக்கொள்ளும் இடங்கள் பல உள.

" பேற்றைத் தவம் சற்றுமில்லாத என்னை " (1),

" குணங்கெட்ட துட்டனை " (88) என்பவற்றைப் பார்க்க.

## முப்பத்தொன்பதாவது பாட்டு

**மாவேழ் சனனங்கெட மாயை விடா**
**மூவேட னையென்று முடிந்திடுமோ**
**கோவே குறமின் கொடி தோள் புணரும்**
**தேவே சிவசங் கரதே சிகனே.**

### பதவுரை

கோவே – இறைவனே, குறமின்கொடிதோள் புணரும் – குறக் குலத்தில் தோன்றிய மின்னல்கொடிபோன்ற வள்ளியின் புயங்களைத் தழுவும், தேவே – தேவனே, சிவசங்கர தேசிகனே – சிவனும் சங்கரனு மானவருக்கு குருவே, மா – பெரிய, ஏழ்சனனங்கெட – எழுவகைப் பிறப்பும் கெட, மாயைவிடா – பிரகிருதி மாயையோடு விடாமல் சம்பந்தப் பட்ட, மூவேடனை – மூன்று ஆசைகள், என்று முடிந்திடுமோ – எப் பொழுது தவிர்க்கப்பெறுமோ ? எப்போது தீருமோ ?

### விரிவுரை

*குறமின்கொடி : வள்ளி. கொடிச்சி என்றாலும் குறிஞ்சி நிலப் பெண் என்று பொருள். குறவராகிய வேடுவர் நிறத்திலும் உருவத் திலும் கூட்டத்திலும் மேகம்போன்றவர்கள். அவர்களிடையே தோன்றும் 'மின்னல்' என்ற கவி நயம் இன்புறத்தக்கது. மின் என்ற சொல்லுக்கே 'பெண்', 'மகள்', என்ற பொருள்களும் உண்டு. அப்படிக்கொண்டால் கொடி, தோள் என்று எடுத்துக்கொண்டு, தோள் என்பதனை புணரும் என்ற வினை எச்சத்திற்கு எழுவாயாகக் கொண்டு கொடிபோன்று தாவிப் படரும் கொழுங்கொம்பாகிய முருகனைத் தழுவும் என்றும் கொள்ளலாம். அல்லது தோள் என்பதனை இரண்டாம் வேற்றுமைத் தொகையாகக்கொண்டு தோளைத் தழுவும் என்றும் பொருள்கொள்ளலாம். இரண்டு வகை யிலும் கருத்து ஒன்றுதான். "தே" என்ற ஓர் எழுத்துச்சொல்லிற்கு "கிருபை" என்ற பொருள் உண்டு. குறமகளையும் தழுவும் கிருபை யுடையவன் என்றும் கொள்ளலாம்.*

*சிவன் மங்களத்தைச் செய்பவன். சங்கரன் சங்காரகர்த்தா சிவசங்கரன் என்ற தொடரில் சங்காரத்தொழிலே உயிர்களுக்கு மங்களத்தைச் செய்யும் இயல்புடையது என்று பொருள்கொள்க. சகல நிலையிலிருக்கும் உயிர்களைத் தம்முள் ஒடுக்கி இளைப்பாற கேவல*

நிலையில் வைப்பதும், சுத்த நிலையில் தன்னேடு இணைத்துக்கொள்வதும் உயிர்களுக்குச் செய்யும் உபகாரமாதலாலே, அது செய்பவன் மங்களத்தைச் செய்பவனுகின்றுன். அத்தகைய சிவனுக்கு முருகன் தேசிகனுகின்ருன். முருகன் சிவனுக்குக் குருவாக வந்ததின் தத்துவார்த்தத்தை முந்தின 36-வது பாடலின் விரிவுரையில் காண்க.

மாவேழ்சனனம்: "எழு பிறப்பும் தீயவை தீண்டா", என்ற குறளுக்கு உரை யெழுதிய பரிதியார், தேவர், மனிதர், மிருகம், ஊர்வன, நீர்வாழ்வன, பட்சி, தாவரம் என்னும் ஏழ் பிறப்பு என்ருர். மாணிக்கவாசகர் சிவ புராணத்தில்,

> "புல்லாகிப் பூடாகிப் புழுவாய் மரமாகிப்
> பல்விருகமாகிப் பறவையாய்ப் பாம்பாகிக்
> கல்லாய் மனிதராய் பேயாய் கணங்களாய்
> வல்லசுரராகி முனிவராய்த் தேவராய்
> செல்லா அநின்ற இத்தாவர சங்கமத்துள்
> எல்லா பிறப்பும் ... ... ..."

என்றதில் நீர்வாழ்வன விலக்கி 'கல்' என்று உலோக வர்க்கங்களைச் சேர்த்திருக்கிருர். நீர்வாழ்வன என்பவை ஊர்வனவிலும் விலங்கினத்திலும் சேரும் போலும்.

> "அறிவுள தேவர் மக்கள் அறிவின் மீன் விலங்கு செந்து
> பறவை தாவரங்கள் என்ப பகருமேழ் பிறப்பின் பேரே"

என்று சூடாமணி நிகண்டு கூறுகின்றது. இதில் தாவரங்கள் என்பவை அசரங்கள். அதில் மரம் செடிகொடியோடு கல் முதலிய உலோகங்களும் சேரும்.

"மா" என்ற ஓர் சொல்லிற்கு பெரிய என்ற சாமான்யப் பொருளேயன்றி, மரணம் வெறுப்பு, துகள், வலி என்ற பொருள்களும் உண்டு. இவற்றில் எதுவும் பொருந்தும். மரணம் எய்துகின்ற ஜனனம், வெறுக்கத்தக்க செனனம், துகள் போன்ற அல்பமான செனனம், வலிமையுடைய செனனம் என்றெல்லாம்கூடக் கூறலாம்.

மாயை விடா மூவேடணை: மூவேடணை என்பதை வடமொழியில் ஈஷணுத்ரயம் என்பர். அதாவது மூன்று வகையான ஆசைகள். வடமொழியில் தாரேஷணை புத்ரேஷணை, வித்தேஷணை, என்பர். தமிழில் பொன், பெண், மண் என்பர். மண்ணுசை, பெண்ணுசை, பொன்னுசை என்பவை. மனிதனுடைய எல்லாவித ஆசையும் இம்மூன்றினுள்ளடங்கும். இதனை மாயைவிடா ஏஷணை என்கின்ருர்.

மாயை யென்பதுபற்றி முந்தின 5-வது பாடலின் விரிவுரையில் கூறினேம். இம் மூன்றுமே ஆங்கு 'சகமாயை' என்று கூறப் பட்டது. மாயையின் செயலே ஏஷணைகள் என்று பொருள், அல்லது இந்த ஏடணைகளாகிற மாயை என்றும் கூறலாம். இம் மூன்றின்மீது மக்கள் கொள்ளும் ஆசைதான் பிரகிருதி மாயை என்பதும் அசுத்த மாயை என்பதும். இவற்றை 'மோகினி', 'மான்' என்று சித்தாந்த பரிபாஷையில் கூறுவர். "விந்து மோகினி மான் பெந்தமுறவே பிணிப்பித்து" என்று குமரகுருபரர் கந்தர்கலிவெண்பாவில் கூறுவது காண்க. சுத்தமாயை பிந்து, அசுத்தமாயை மோகினி, பிரகிருதி மாயை மான், இவற்றில் பின்னிரண்டான மோகினி, மான் இவற்றின் செயலே மூவேடணைகள். ஆதலால் மாயை விடா மூவேடணைகள் என்றார். இம் மூவேடணை முடிந்தால் செனனம் கெடும் என்கின்றார். ஏடணைகளே பிறப்பிற்குக் காரணமென்பதை, வள்ளுவர்,

"அவா என்ப எல்லா உயிர்க்கும் எஞ்ஞான்றும்
தவா அப்பிறப்பீனும் வித்து",

என்று சொல்லுகிறார்.

இம் மூவாசைகளும் என்று முடிகின்றனவோ அன்றே செனனம் கெடும் என்பது பிண்டக்கருத்து.

### நாற்பதாவது பாட்டு

**வினையோட விடும் கதிர்வேல் மறவேன்**
**மனையோடு தியங்கி மயங்கிடவோ**
**சுனையோடு அருவித் துறையோடு பசுந்**
**தினையோடு இதணோடு திரிந்தவனே**

### பதவுரை

சுனையோடு – (வள்ளி நாச்சியாரைக் களவியல் முறையில் மணக்க நீ சென்றபோது) வள்ளிமலைச்சாரலில் உள்ள சுனையிடத்தும், அருவித் துறையோடு – அம்மலையிலிருக்கும் அருவிக் கரைகளிலும், பசுந் தினையோடு – பசுமையான தினைப்புனத்திடத்தும், இதணோடு – (அப் புனத்தில் வள்ளியம்மையார் பறவைகளை ஓட்டக்கட்டிய) பரணிடத்தும், திரிந்தவனே – அலைந்த முருகா, வினையோடவிடும் – இருவினைகளையும் ஓட்டிவிடும் சக்தி பொருந்திய, கதிர்வேல் – சுடர்வேலை, மறவேன் –

மறக்காதவனுகிய நான், மனேயோடு — சம்சாரம் என்ற பந்தத்தோடு, தியங்கி மயங்கிடவோ — கலக்கங்கொண்டு மயங்கி உழலுவது சரியோ ?

**விரிவுரை**

சுனேயோடு ...... திரிந்தவனே : என்றதில் இறைவன் பக்குவ ஆன்மாவைத் தேடி ஆட்கொள்ள விழையும் அவசரத்தையும், ஆத்திரத்தையும் கருணையையும் காட்டிற்று. ஈண்டு வள்ளி கல்யாண தத்துவத்தை விரிவாகக் கூறுகிருேம். கதையை யாவரும் அறிவர். வள்ளி, மஹாவிஷ்ணுவின் அம்சமான உபேந்திரனது இரு குமாரிகளில், இரண்டாவது பெண், சுந்தரவல்லி என்று பெயர். மூத்தவள், அமிர்தவல்லிதான் "தெய்வயானே" யென்பவள். சுந்தரவல்லி முருகனேக் கணவனுக அடையத் தவமியற்றினள். முருகன் அவள் முன் தோன்றி நீ மான் வயிற்றில் பிறந்திரு. நாம் வந்து ஆட்கொள்வோம் என்றனர். அதன்படியே வள்ளிமலேச் சாரலில் தவமியற்றிக்கொண்டிருந்த சிவமுனிவர் என்பார் ஒரு அழகிய பெண்மானேக்கண்டு காமுற்றனர். பார்வையாலே மான் சூலுற்றது. அச்சூலில் சுந்தரவல்லி ஆவிர்பவித்தாள். மான் இவளேப் பெற்று வள்ளிக் குழியில் போட்டுச்சென்றது. நம்பி என்ற வேட்டுவ அரசன் அக்குழவியை யெடுத்து வளர்த்தான். வள்ளி திணேப்புனம் காத்தாள். முருகன் சென்ருன். கடிமணம் புரிந்தான் என்பது கதை. இதன் உட்பொருள்.

சுந்தரவல்லி என்பாள் மான் வயிற்றில் ஆவிர்பவித்தது, "மான்" என்பது பிரகிருதி மாயை. அவள் சிவமுனிவன் என்ற பிரம்மம் பிரகிருதி மாயையில் சம்பந்தப்பட்டுப் பிறந்தவள். அவள் ஜீவ சக்தியாகிற ஆன்மா.

வேடர்கள் = ஞானகர்மேந்திரியங்கள் ; வேட அரசன் = மனஸ்.

வள்ளிக்குழி : உடல் அல்லது உடலிலிருக்கும் மூலாதார ஸ்தானம்,

திணேப்புனம் : போகத்திற்கிருப்பிடமான லிங்க சரீரம்.

திணே : பிரபஞ்ச விஷய சுகங்கள்.

பரண் : உயரத்தில் கட்டப்படுவது அது விஷய சுகங்களுக்கு மேற்பட்ட முமுக்ஷுத்வம். அதாவது விஷய சுகங்களில் பற்று நீங்கி இறைவனேயடைய விரும்புவது.

கவண் : அந்தக்கரணம்

கல் : வைராக்யம்
பறவைகள் : இந்திரியாதி சுகங்களை அனுபவிக்க அவாக்கொள்ளும் ஐம்புல விருத்திகள்.

சுருங்கச் சொன்னால் ஓர் ஜீவன் தனது ஆத்மஸ்வரூபத்தை நன்கு அறிந்து, இந்திரிய விஷயங்களில் செல்லும் விஷயாகார விருத்திகளில் மனம் செல்லாமல், வைராக்யத்தால் இந்திரியங்களை பிரம்மாகார விருத்தியில் செலுத்தி பக்குவமுற்றபோது, இறைவன் வலியச் சென்று வைராக்கியத்தை நன்கு சோதித்து ஆட்கொள்வான் என்பது வள்ளி கலியாண தத்துவம். ஆன்மா உண்மையில் சைதன்ய வஸ்துவானாலும் பிரகிருதி மயையின் மயக்கத்தில் விழுந்து மயங்குகின்றது அது விஷயாகார விருத்திகளை அடக்கி பிரம்மாகார விருத்தியடைந்து, ஆன்மாவை மாயை பற்றாதபடி முமுக்ஷுத்வம், என்ற பரண்மீது இருந்து வைராக்யம் என்ற கல்லால் விரட்டிப் பக்குவமடைகின்றது. அப்பொழுது சத்தி நிபாதம் ஏற்படுகின்றது. அதுவே நாரதர். பின்பு இறைவனே அவ்வான்மாவைத்தேடிச் செல்லுகிறான். பல சோதனைகள் செய்து ஆன்மாவின் பக்குவ நிலையைத் திடப்படுத்தி ஆட்கொள்ளுகிறான்.

கந்தபுராணத்தில் முருகன் வள்ளியைத்தேடி அலைந்ததைக் கூறுமிடத்தில் "புனையிழை தன்னைக் காணான் புலம்பியே திரிதலுற்றான்" என்று கூறுவதுபோல் 'திரிந்த' தையே அருணகிரியாரும் பிரயோகம் செய்திருக்கிறார்.

இனி மலைச்சுனை, அருவி, புனம், மரம் எங்கும் தேடுவதை,

"கனந்தனை வினவும், மஞ்ஞைக்கணந்தனை வினவும் ஏனற்
புனந்தனை வினவும் அம்மென் பூவையே வினவும் கிள்ளை
இனந்தனை வினவும் மற்றை வரைகளை வினவு மாதோ"

என்று கச்சியப்ப சிவாச்சாரியார் கூறியிருப்பதை அருணகிரியார் எடுத்தாள்கிறார்.

மனையோடு – இல்லற வாழ்க்கையில் : இதில் முன் பாட்டில் சொன்ன மூன்று ஏஷணைகளும் பொருந்தியிருக்கும். மனைவி மக்கள் மீது ஆசை, வீடு மனைமீது ஆசை, பொருள்மீது ஆசை, இம் மூன்றிலும் ஆசைகளை விளைவிப்பதே மனை வாழ்க்கை. வினை யொழிந்தால், இவற்றின் மீதுள்ள பற்று அறும். வினை ஓடுவதற்குச் சாதனம் ஞானமேயாகும். அதுதான் ஞானசக்தியான வேல். அதன் ஞானச்சுடர் வினையிருளை ஓட்டும். ஆதலால் அவ்வேலைப்பற்றிக்

கொண்டால் மனையோடு தியங்கி மயங்கும் அவித்தை ஒழியும். அதற்குச் சிறந்த உதாரணமாயிருப்பவள் வள்ளிநாயகி என்பது இப்பாட்டிலடங்கிய கருத்து.

*கந்தரலங்கார மேற்கோள், ( 6 வது பாடல் )*

*" பெரும் பைம்புனத்தினுள் சிற்றேனல் காக்கின்றபேதை கொங்கை*
*விரும்பும் குமரனை மெய்யன்பினுல் மெல்ல மெல்ல உள்ள*
*அரும்பும் தனிப்பரமானந்தம் தித்தித்து அறிந்த அன்றே*
*கரும்பும் துவர்த்துச் செந்தேனும் புளித்து அறக் கைத்ததுவே."*

### நாற்பத்தோராவது பாட்டு

**சாகா தெனையே சரணங் களிலே**
**காகா நமனுர் கலகம் செயும்நாள்**
**வாகா முருகா மயில்வா கனனே**
**யோகா சிவஞா னோப தேசிகனே.**

### பதவுரை

யோகா — யோகாதிபதியே, சிவஞான உபதேசிகனே — சிவ ஞானத்தை உபதேசித்த குருவே, சரணங்களிலே – உனது பாதாரவிந்தங் களிலே, சாகாதெனையே – நான் இறவாமல் நித்ய வாழ்வுபெற விரைவில், காகா — வந்து காப்பாற்று, முருகா — முருகனே, அழகனே, மயில் வாகனனே – மயிலில் ஆரோகணிப்பவனே நமனுர்கலகம் செயும் நாள்– யமன்வந்து என் உயிரைக்கொண்டுபோக முயலும்போது வா, கா — வந்து காப்பாற்று.

### விரிவுரை

பழக்கமாய் கூறும் உரைகளுக்கு மாறுபாடாக இங்கு உரை செய்திருப்பது கவனிக்கத்தக்கது. வாகா என்பதை வாகை சூடிய வனே, என்று பொருள் கொள்கின்றனர். வாகையைச் சூடியவ னென்று இரண்டாம் வேற்றுமை உருவும் பயனும் உடன் தொக்க தொகையாகக்கூறுவர். இங்கு வா, கா, என இரண்டு சொற்களாகப் பிரித்து முன்னிலை ஏவல்வினை முற்றாகக் கொள்ளப்பட்டது. இதில் இரண்டு பிரார்த்தனைகள் அடங்கியிருப்பதாக அடியேன் சிற்றறி விற்கு எட்டியது. ஆதலால் இவ்வாறு கூறப்பட்டது.

*யோகா:* இதற்கும் இரண்டு பொருள் கூறலாம். யோகம் பயில்வோர் அறிவர். யோகத்திற்கு முக்கிய அதிஷ்டானமாகவும்

ஆயதனமாகவும் விளங்குவது குண்டலினி, குண்டலினியே முருகன் என்ற தத்துவம் முன்பே கூறப்பட்டது. கந்தர் ஷஷ்டிக் கவசத்திலும் குண்டலியாம் சிவகுஹன் வருக. என்று வருவதுகாண்க. ஆக முருகனே யோகத்திற்கு அதிஷ்டானமான குண்டலினியாக இருப்பதால் அவனை யோகா என்றார்.

இரண்டாவது பொருள்: யோகம் என்பதற்கு அதிருஷ்டம், உயர்ச்சி என்ற பொருள்களும் உண்டு அதிருஷ்டத்தால் மேன்மைபெற்றவன் நல்ல யோகக்காரன் என்று வழங்குவது அறியலாம். முருகன் அவாப்த ஸமஸ்தகாமன். சகல பெருமைகளும் உயர்வும் யோகமும் செல்வமும் மற்றெல்லா காமனைகளும் அவன் பெற்றவன். நல்ல யோகக்காரன். அவாப்த ஸமஸ்த காமன் என்றும் பொருள். சிவஞானோபதேசிகனே என்பதை சிவனுக்கு ஞான உபதேசம் செய்தவன் என்று பொருள் கூறுவர். அருணகிரியார் இங்கு வேண்டுவது சாகாவரம். அது அவன் பாதாரவிந்தங்களைப் பற்றுவதாலே வரும். சாகாவரத்தை அருணகிரியாருக்கு உபதேசித்தவன், ஞானோபதேசம் செய்தவன். அது சிவஞானம் அல்லது பரஞானம். இந்த பரஞான உபதேசத்தாலேயே, சாகாவரம் பெற்றதைக் கந்தரலங்காரப்பாடல்கள் சிலவற்றில் கூறியுள்ளார். யமனை விளித்துத் தன் பக்கலில் வந்தால் வெட்டிவிடுவேன் என்கின்றார். முருகனருளிய அவிரோத ஞானச்சுடர் வடிவாள் தன்னிடமிருப்பதாகக் கூறுகிறார். மேலும், "மரணப்ரமாதம் நமக்கில்லை" என்கிறார்.

> "திருமுக மாறுங்கண்ட
> தமராகி வைகும் தனியான
> ஞான தபோதனர்க்கு இங்கு
> எமராசன்வட்ட கடையேடு
> வந்தினி என் செயுமே,"

என்கிறார். விசேஷமாக ஒன்றுங் கூறுகிறார். (69 வது பாடலில்)

> "தந்தைக்கு முன்னந் தனி ஞானவா ளொன்று சாதித்தருள்
> கந்தச்சுவாமி யெனைத் தேற்றிய பின்னர் க்காலன் வெம்பி
> வந்திப்பொழுது என்னை என் செயலாஞ் சத்தி வாளொன்றினாற்
> சிந்தத் துணிப்பன் றணிப்பருங் கோபத்ரி சூலத்தையே"

இதிலடங்கிய உள்பொருள் உன்னிக் கருதத்தக்கது. சிவபெருமான் மார்க்கண்டனுக்காக க்காலனைக்காலால் உதைத்து விரட்டியது யாரும் அறிவர், அவர் யமனை அப்படி விரட்டியது எதனால்

என்ருல் கந்தச்சாமியிடம் உபதேசம் பெற்றுத் தனி ஞானவாள் ஒன்று பெற்றுக்கொண்டார். அதனுலேயே அவர் யமனை ஜெயிக்க முடிந்தது. அது போல நானும் பெற்றுவிட்டேன் என்கிருர். ஆகையால் சிவஞானேபதேசிகனே என்ற சொற்றெடரை சிவனுக்கு ஞானேபதேசம் செய்தகுரு என்பதைவிட தனக்கே சிவஞானத்தை அருளிய குருநாதன் என்று கூறுவது சிறப்பாகப்படுகிறது.

இவ்வாறு ஞானேபதேசம் பெற்றவராதலாலே சாகாவரம் பெற்று விட்டேன் என்று குறிப்பிடுகிருர். எனக்கு சாகாவரம் ஈந்து உன் சரணரவிந்தங்களில் நித்யவாழ்வுபெற அருள் செய். நித்ய வாழ்வாவது, "சாகைக்கும் மீண்டும் பிறப்பைக்கும்" இல்லாத வாழ்வு. சிவசாயுஜ்யம் அதைக்கொடுத்துக் காப்பாற்று என்பது முதல் பிரார்த்தனை இது பொதுவான பிரார்த்தனை இனிக் குறிப்பாக என்னை யமன் கொண்டுபோக வரும்போது மயில் வாகனத்தில் வந்து காப்பாற்று என்பது இரண்டாவது பிரார்த்தனை. முதல் வேண்டுகோளில் முருகன் தனக்கு குருநாதனுக வந்து சிவஞானம் உபதேசம் செய்து சாகாவரம் ஈவது. இரண்டாவதுவரம் தான் இறக்கும்போது மயில் வாகனத்தில் வந்து தரிசனம் கொடுப்பது. இது முந்திய 10வது பாடலிலும் கேட்கப் பட்டது. திருப்புகழ் ஒன்றில்

"கனகோப யமபடரை மோதும் மோன உரையில்
உபதேசவாளை எனது பகைதீர நீயும் அருள்வாயே"

என்று கேட்கின்ருர். திருப்பரங்கிரித் திருப்புகழொன்றில் யமன் வந்து என்னேடு யுத்தம் செய்யும்போது வரவேண்டு மென்று கேட்கின்ருர். கந்தரலங்காரத்தில் மூன்று பாடல்களில் இந்தப் பிரார்த்தனை யிருக்கின்றது. (10 வது பாடல் விரிவுரையைப்பார்க்க).

ஆக இப்பாட்டின் பொழிப்புரையாக அல்லது கருத்துரையாகக் கூறினுல், "அவாப்த ஸமஸ்தகாமனும் (யோகா) எனக்கு சிவ ஞானம் உபதேசித்த குருவாயும் இருக்கும் நீ, எனக்கு சாகாவரம் தந்து உன் சரணங்களான சாயுஜ்ய நிலையைத்தரவேண்டும். மேலும் காலன் எனது உயிர் கொளவரின், நீ மயிலின் மீது வந்து தோன்ற வேண்டும். யமனிடம், 'இவன் என் அடியவன். உன் லோகத்திற்கு அவனை எடுத்துச் செல்லவேண்டாம். அவன் இறவான் பிறவான் அவனை விட்டுவிடு நான் என்னேடு அழைத்துக்கொள்கிறேன்' என்று கூறவேண்டும்" என்பதெல்லாம் குறிப்பாய்க் கொள்ளும்படி வா—கா. என்று முன்னிலை ஏவல் வினை முற்றுக்கள் அமைந்திருக்

கின்றன. வாகா என்பதை வாகை சூடியவன் என்றுபொருள் கொள்வதில் குற்றமொன்றுமில்லை. காகா வாவா என்று அடுக்காகக் கூப்பிடுவது விரைவில் வரவேண்டுமென்று குறிப்புத்தோன்ற ஒலிக்கின்றன. முருகனின் சரணங்களே முக்தி என்பதை கந்தரலங் காரம் 31 வது பாடலில், கூறுகின்றார் அப்பாடல்,

"பொக்கக்குடிலில் புகுதாவகை புண்டரீகத்தினும்
செக்கச் சிவந்த கழல்வீடு தந்தருள் சிந்து வெந்து
கொக்குத்தறி பட்டெறி பட்டுதிரம் குமுகுமெனக்
கக்கக் கிரியுருவக் கதிர்வேல் தொட்ட காவலனே" என்பது.

(கொக்கு – மாமரம், சூரன். சிந்து வெந்து – கடல்வெந்து)

### நாற்பத்திரெண்டாவது பாட்டு

குறியைக் குறியாது குறித்தறியு
நெறியைத் தனிவேலை நிகழ்த்திடலுஞ்
செறிவற் றுலகோ டுறைசிந் தையுமற்
றறிவற் றறியா மையுமற் றதுவே.

### பதவுரை

தனி வேல் ஐ – ஒப்பற்ற வேலாயுதத்திற்கு இறைவனாகிய முருகன் குறியை – உயிர்களின் லக்ஷியமான செம்பொருளை, குறியாது குறித்து – சொல்லாமற் சொல்லி, அறியும் நெறியை – அதை அறியும் வழியை, நிகழ்த்திடலும் – உபதேசித்த மாத்திரத்தில், செறிவற்று – மலத்தடிப்பு அகன்று, உலகோடு உறை – பிரபஞ்சத்தோடு தொடர்பு; உலகோடு ஒன்றிய, உலகத்தாரோடு வாழவேண்டுமென்ற, சிந்தையும் அற்று – நினைவும் அகன்று, அறிவற்று – பிரபஞ்ச விவகாரங்களில் இருந்த அறிவு அகன்று, அறியாமையுமற்றது – இதுவரை மெய்ப் பொருளை அறியாமலிருந்த அவித்தையும் அகன்றதுவே.

### விரிவுரை

ஐ என்ற ஓரெழுத்துச் சொல்லிற்கு இறைவன், அரசன், குரு, தலைவன் என்றெல்லாம் பொருள் உண்டு சில உரையாசிரியர்கள் வேல் ஐ என்பதை விளிவேற்றுமையாகக்கொண்டு, வேலாயுதக் கடவுளே! என்று கூறிப்போந்தனர். அது பொருந்தாது. நிகழ்த் திடலும் என்ற வினைச்சொல்லிற்கு எழுவாயாகக் கொள்ளல்

வேண்டும். சொல்லமுடியாத ஒன்றைச் சொல்லாமல் சொன்னது என்பதை குறியாது குறித்து என்கிருர். குறித்து என்றதால் குறிப்பாகக்காட்டி மௌனோபதேசம் செய்தார் எனக்கொள்ளலாம்.

அறியும் நெறி: குறிப்பாய்ச் சென்னது இன்னதுதான் அறிந்து கொள்ளும் வழி என்றும், குறியை அறியும் நெறி என்றும் கொள்ள இடமுண்டு சொல்லாமல் குறிப்பாய்க் காட்டியதால் ' நிகழ்த்திடலும் என்ற பதப்பிரயோகம் செய்யப்பட்டது காண்க. சுருக்கமாகச் சொன்னுல் முருகன் மெய்ப்பொருள் இன்னது என்றும், அதை அடையும் வழி இன்னதென்றும், நான் அறிந்து கொள்ளும்படி செய்த, அந்த நிமிஷத்திலேயே செறிவற்று முதலியவை நடந்து விட்டன.

சிலர் உலகோடு செறிவற்று என்றும் உறை என்பதை இடையினமிட்டு, உரை, என்று கொண்டு பேச்சும் இறந்தது, என்றும் பொருள் கொள்கின்றனர். செறிவு என்பது மும்மலக் கூட்டம், மலத்தடிப்பு.

உலகோடு உறைசிந்தை பிரபஞ்ச வாழ்க்கையில் ஈடுபடுதல் விஷயாகார விருத்தி அஃதன்றி இடையினமாயின் உலகு உரை சிந்தை, மூன்றும் அற்றது என்றும் சொல்லலாம். உலகம் மறைந்தது, சொல் இறந்தது, சிந்தை அழிந்தது. இம் மூன்றும் அற்றவிடத்து அறிவும் அறியாமையும் கூடவே அற்றுவிட்டது. அறிவு அற்றது என்பதை அறியவேண்டியது வேறு எதுவும் இல்லாததால் அதுவும் அற்றது என்ருர். உலகு, சிந்தை, அறிவு இம்மூன்றையும் ஞேயம், ஞாதா, ஞானம் என்ற திரிபுடியாகக் கொள்ளலாம். காணப்படும்பொருள் உலகம்; காண்பவன் உயிர்; காட்சி அறிவு; ஆகிய திரிபுடியும் நீங்கியது. அப்படி அறிவு மங்கிய வழி அறியாமை தோன்றுமேயெனில் அதுவும் இல்லை என்கிருர். திரிபுடி அடங்கிய நிலை, மெய்ப்பொருளை உணர்ந்தநிலை, அங்கு அறியாமையாகிற அவித்தைக்கு இடமே இல்லை. அவித்தை என்பது மாயாகாரியம் மெய்ப்பொருளை உணர்ந்த ஜீவன் முக்தர்களுக்கு மாயாகாரியம் இல்லையென்றவாறு, இரச குளிகை பட்டமாத்திரத்தில் இரும்பு பொன்னுவதுபோலும், ஒளி வந்தவுடன் இருள் மறைவது போலும், பகவானுடைய சந்நிதியில் பக்குவ ஆன்மாக்கள் அடையும் பேற்றைக் கூறுகின்ருர். இது அவருடைய சொந்த அநுபவம். **கந்தரலங்காரம் 19 வது பாடலில்,**

" சொன்ன கிரௌஞ்சகிரி ஊடுருவத்துளைத்த ஐவேல்
மன்ன ! கடம்பின் மலர்மாலை மார்ப ! மௌனத்தையுற்று
நின்னை உணர்ந்து உணர்ந்து எல்லாமொருங்கிய
நிர்க்குணம் பூண்டு
என்னை மறந்திருந்தேன் இறந்தேவிட்டது இவ்வுடம்பே, "

என்று கூறியிருப்பதை ஒப்பு நோக்குக.

குறிப்பு: லக்ஷியத்தை மானிடப்பிறவி எடுத்ததின் லக்ஷியம் இறைவனைச் சேருதல். உயிர்களின் குறிக்கோள் மெய்யுணர்தல். செம்பொருளை அறிந்தார் மற்றை யாவும் அறிந்தவராவார். உண்மையறிவு உதித்தாங்கு உலகம் கெடும். இறைவனோடு இம்மையிலேயே இரண்டறக்கலந்த ஜீவன்முக்தர்களான ஞானிகட்கு உடல், உலகம், சுற்றம், செல்வம் என்ற விஷயாகார விருத்திகள் யாவும் அறும். பிரம்மாகாரவிருத்தி தழைக்கும்; அப்போது அதுவே தானாய் அமருவரன்றே.

## நாற்பத்தி மூன்றாவது பாட்டு

**தூசா மணியும் துகிலும் புனைவாள்**
**நேசா முருகா நினதன் பருளால்**
**ஆசா நிகளம் துகளா யினபின்**
**பேசா அனுபூ திபிறந் ததுவே**

### பதவுரை

தூசு ஆம் மணி – தூயதான மாணிக்கத்தாலாகிய மாலையையும், துகிலும் – அழகிய தூய ஆடையும், புனைவாள்–அணியும் வள்ளியினது, நேசா – காந்தனே, காதலனே, முருகா–இளமையும் அழகுமுடையவனே, நினது அன்பு அருளால் – உன்னுடைய அன்பின் காரணமாக ஏற்பட்ட திருவருளால், ஆசா நிகளம் – ஆசையென்ற தடைகள் (நிகளம்–சங்கிலி விலங்கு) துகளாயின – தூள்தூளாக உடைந்து போயின, பின் – அவ்வாறு தடைகள் நீங்கியபின், பேசா அநுபூதி பிறந்தது – நான் மௌன நிலையை அடைந்து விட்டேன். இதுவே எனது அநுபூதி

### விரிவுரை

தூசாம் மணி என்பதனை முத்தாரம் என்பார் ஒரு உரையாசிரியர் வள்ளி குறிஞ்சிநிலப் பெண்ணாதலால் மணி என்பது முத்தையும் குறிக்குமாயினும் மாணிக்கம் என்று பொருள் கொண்டோம். புனை

வாள் என்று பொதுவாகக் கூறியிருக்க வள்ளியைக் குறிப்பதாகக் கொள்வது என்னையெனில் "நேசா" என்று கூறினமையால் முருகனே காதல்கொண்டு தானே சென்று களவியல் முறையில் (காந்தர்வம்) மணந்துகொண்டானுதலால் நேசா என்றதை வைத்து வள்ளியென்றே கூறினேம். மேலும் முன்கூறிய வள்ளி முருகன் தத்துவத்திற்கேற்ப பக்குவ ஆன்மாவை ஆட்கொண்டதைக்குறிக்க வள்ளியையே ஈண்டு கூறினதாகவே கொள்ளல்வேண்டும். ஏனெனில் முருகன் அருணகிரியாரையும் அவர் பக்குவம் அறிந்து அவனே சென்று ஆட்கொண்டானன்றோ?

நிற்க அன்பருள் என்ருர். அன்பு வேறு அருள் வேறு என்பதனை வள்ளுவரும் "அருளென்னும் அன்பின் குழவி" என்ருர். அன்பு முதிர்ந்து அருளாகப் பழுக்கின்றது. வள்ளி நாச்சியார் மீது கொண்ட அன்பால் அவளிருக்குமிடம் சென்று அவளை மணந்து அருளினதுபோல அருணகிரியார்மீது கொண்ட அன்பின் மிகுதியால் அவரைத் தற்கொலை செய்துகொள்ளாமல் தடுத்து உபதேசம் செய்தருளினுர். அதனுலும் இங்கே புனைவாள் என்பது வள்ளி யம்மையையே குறிக்கும்.

தூசாமணியும் துகிலும் புனைவாள் என்பதென்ன? ஈண்டு வைணவ உரையாசிரியர்கள் திருப்பாவைப் பாடல்களுக்குச் செய் திருக்கும் வியாக்யானங்களை நினைவுபடுத்திக்கொள்ளலாம். "நேரிழையீர்" என்று வரும் இடத்தில் ஞானம் பக்தி வைராக்யம் இவைகளையே ஆபரணமாய்ப் பூண்ட அடியார்கள் என்று பொருள் கண்டார்கள். அதுபோல "ஆடையுடுப்போம்", என்ற இடத்தில் இறைவனது அடியார்கள் என்று அடையாளம் தெரியும்படி வைணவ சின்னங்களை அணிதல் என்று பொருள் கண்டனர். இதையே நாமும் ஈண்டு கொள்வதில் குற்றமில்லையே. வள்ளி நாச்சியார் முருகனுடைய அடியார்களில் முதன்மை ஸ்தானம் வகிப்பவள். ஆதலால் அவள் ஞானபக்தி வைராக்யங்களையே ஆபரணங்களாகவும், அவனுடைய அடியாள் என்று காட்டக்கூடிய அடையாளங்களை ஆடையாகவும் உடையவள் என்று உரை செய்வ தில் சிறப்பு இருக்கிறது.

ஆசாநிகளம் :— முந்தின 39ம் பாடலில் வரும் "மூவேடனை" யையே இங்கு கொள்ளல்வேண்டும். ஆசையற்ருல் அநுபூதி உண்டாகும். ஆசை அறுவதற்கு அவன் அருள்வேண்டும். அருளைப் பெறுவதற்கு நாம் முன்பு அவன் அன்பைப்பெறவேண்டும்.

நிகளம் என்ருல் விலங்கு, தளை சங்கிலி என்ற பொருள்கள் உண்டு. ஆசைகள் சங்கித்தொடர்போல ஒன்றன்பின் ஒன்ருய்த் தோன்றுதல் இயல்பாதலின் ஆசையை நிகளம் என்ருர். இந்த ஆசைகளே அருள் பெறுவதற்குத்தடையாயிருப்பதால் தடை என்றே பொருளும் கொண்டோம். விரோதி சொருபம் பலவற்றில் மூவேடணை என்ற மூவகை ஆசைகளே முதன்மை ஸ்தானம் வகிக்கின்றது. முந்தின பாடல்களில் கூறிவந்த விரோதிகள்: அகம், ஆடை, மடந்தை, மட்டூர் குழல் மங்கையர், பேராசை, பூமேல் மயல், சகமாயை, அமரும்பதி, கேள், அகம் எனும் பிமரம், வினை, இல்லொடு செல்வம், அடியைக் குறியாதறியாமை, மின்னே நிகர் வாழ்வை விரும்புதல், மெய்யே என இல்வாழ்வை உகத்தல், அகந்தை முதலியன. இவை யாவும் மூவேடணையில் அடக்கம். மூவேடணை யென்பதைத்தான் ஆசாநிகளம் என்ருர். ஆகையால் முன் கூறப்பட்ட சகல விரோதி சொருபங்களும் அவனது அன்பருளால் துகளாகின்றன.

பேசா அநுபூதி என்பதைச் சொல்லமுடியாத பேரின்பம் என்று ஓர் உரையாசிரியர் கூறுகின்ருர். அது பொருந்தாது. இங்கு ஞானிகள் அடையும் நிர்விகல்ப சமாதிநிலையில் உண்டாகும் "மௌனம்", மோனமென்பது ஞானவரம்பு. பேசுகிறவன், பேசப் படும் பொருள், பேச்சு என்ற திரிபுடி அற்ற இடத்தில் பேச்சுக்கு இடமேது. பேச என்ன விருக்கிறது. பேசத்தான் முடியுமா? "அகரமுதலென", என்று தொடங்கும் திருப்புகழில்,

> " நிருப குருபர குமர என்று என்றும் பக்திகொடு
> பரவ அருளிய மவுன மந்திரந்தனைப் பழைய
> நினது வழியடிமையும் விளங்கும்படிக்கினிதுணர்த்தி—
> அருள்வாயே ",

என்று கூறுகின்ருர். இந்த மவுன மந்திரத்தைத்தான் இதற்கு முந்தின பாட்டில் "குறியைக் குறியாது குறித்து", என்ருர். இங்கு அதையே பேசா அநுபூதி பிறந்தது என்கின்ருர். 42–43வது பாடல்கள் ஒன்றுக்கொன்று தொடர்புடையன. குளகம்போல அமைந்துள்ளன. அங்கு கூறியபடி செறிவற்று, உலகோடுறை சிந்தையுமற்று, அறிவற்று அறியாமையுமற்ற நிலையில் பேசா அநுபூதி பிறக்கின்றது.

சிலர் இதுதான் கந்தரநுபூதியின் கடைசிப்பாடல் என்று கூறுகின்றனர். அநுபூதி பிறந்ததுவே என்று முடிவதால் போலும். முன்னுரையில் கூறியதுபோல், அருணகிரியாரே, அக்ஷரமாலை

பாட விரும்பினதால் அது கந்தரநுபூதியாக இருந்தால் ஐம்பத்தோரு பாடல்கள் இருப்பதுதான் முறை. தணிகை உலாவிலே, "அநுபூதி ஐம்பதுமே" என்று கூறப்பட்டிருக்கின்றது.

## நாற்பத்திநான்காவது பாட்டு

சாடும் தனிவேல் முருகன் சரணம்
சூடும் படிதந்தது சொல்லு மதோ
வீடும் சுரர்மாமுடி வேதமும் வெங்
காடும் புனமும் கமழுங் கழலே.

### பதவுரை

வீடும் — மோக்ஷமும், சுரர்மாமுடியும் — தேவர்களின் தலைகளும் அல்லது தலைகளில் தரித்த கிரீடங்களும், வேதமும் — நான்கு வேதங்களும், வெங்காடும் — சூடு நிரம்பிய கானகமும், புனமும் — குளிர்ச்சி பொருந்திய தினைப்புனமும், கமழும் கழல் — நறுமணம் பெறச்செய்த திருவடியை, சாடும் தனி வேல் முருகன் — போர் செய்யும் ஒப்பற்ற வேலாயுதப் பெருமான், சரணம் சூடும்படி — புகலிடமாக நான் சிரசில் சூடும்படி, தந்தது சொல்லுமதோ — அருளியதைச் சொல்ல முடியுமோ ?

### விரிவுரை

தந்தது சொல்லுமதோ என்றதால் முந்தின பாட்டில் பேசா அநுபூதி பிறந்ததோடு இயைபு கொண்டதாகின்றது. சொல்ல முடியாத பேறு பெற்றதால் சொல்லிறந்து மௌனநிலை அடைந்ததைக் குறிக்கின்றது.

சரணம் சூடும்படி தந்தது என்பதில் சரணம் என்பதைத் திருவடி என்றே பொருள் கொண்டு தான் திருவடி தீக்ஷை பெற்றதைக் கூறுவதாக சில உரையாசிரியர்கள் கூறியுள்ளனர். திருவடி தீக்ஷை பெற்றது உண்மைதான். முந்தின 21-ம் பாட்டின் விரிவுரையைப் பார்க்க தனக்குத் திருவடி தரிசனமும் திருவடி தீக்ஷையும் முருகன் அருளியதைப் பல இடங்களில் கூறியுள்ளார். ஆயினும் இங்கு சரணம் என்றதை புகலிடம் என்று பொருள்கொள்கிறோம். வைஷ்ணவ சித்தாந்தத்தில் "த்வயம்" என்ற மந்திரத்தில் வரும் "சரணம் ப்ரபத்யே" என்பதற்கு பூர்வாச்சாரியர்கள், "உபாயமாகப் பற்றுகிறேன்", என்று பொருள் விரித்தனர். அநிஷ்ட நிவாரணத்திற்கும் இஷ்ட ப்ராப்திக்கும் உபாயம் அவன் திருவடிகளேயாகும்.

ஆதலால் சரணம் என்பதை புகலிடம் என்று பொருள் கொண்டோம். அடையவேண்டிய லக்ஷியமும், அதை அடைய உபாயமும் அவன் கழல்களே தான். "ப்ராப்யம் தானே ப்ராபகம் ஆயிற்று" என்று கூறுவர் வைணவப் பெரியார்கள் அவன் கழல்களையே புகலிடமாகப் பற்றும்படி செய்த கருணையை வியந்தோதுகின்றார்.

கமழும் கழல் : கழல் ஆகு பெயராய் திருவடி என்று பொருள் பெற்று நின்றது. அவனது திருவடிகளால் பாவனமான இடங்களைச் சொல்கின்றார்.

வீடும் : அவன் சரணங்களே வீடு என்ற பேறும். அவன் சரணங்கள் வேறு, வீடு என்பது வேறல்ல என்பதாம். இதனை சீர்பாத வகுப்பில் விரிவாகக்கூறியுள்ளார்.

சுரர் முடியும் : இதனையும் அத்திருவகுப்பில் "உயரமரர் மணி முடியில் உறைவதுவும்" என்றார்.

வேதமும் : "சதுர்மறையின் முதல் நடு முடிவின் மணநாறு சீறடி" என்று ஆங்கு கூறியுள்ளார்.

வெங்காடும் : கந்தபுராணத்தில் உற்பவ காண்டம் 25வது படலம் சுரம்புகு படலம், அதில் திருவாரூரில் சென்று வீதிவிடங்கப் பெருமானைச் சேவித்துவிட்டு முருகனும் அவனுடன் வந்த ஏனைய விண்ணவரும் சேனையும், வெங்கானம் என்ற பாலைவனத்தில் சென்றனர். வெப்பம் தாழாது யாவரும் வருந்தினர். முருகனிடம் முறையிட்டனர். அவரருளினால் "இளையோன் போதலால் குளிர் கொண்டது நறுமலர்ப் பொழிலாய்" என்று கூறி

"புறநெறிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கால்
அறிவும் ஆற்றலும் குறிகளும் வேறுபட்டனபோல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவர் வரலால்
நறிய தண்மலர்ச் சோலையாய் உவகை நல்கியதே"

என்று கூறியிருத்தல் காண்க. இவ்வரலாற்றை மறந்து வள்ளியைத் தேடிப் போகும்போது வெங்கானத்தில் சென்றார் என்று உரை கொள்வது பொருந்தாதென்று விடுக. மேலும் வள்ளியைத்தேடிப் போன புனத்தையும் அடுத்துச்சொல்லியும் இருக்கிறார். இத்தனையும் அவன் கழல்பட்டு மணந்தன, மணம் பெற்றன, உயர்வுற்றன, கமழ்ந்தன, பொலிவுற்றன. அத்தகைய திருவடியை எனக்கு புகலிடமாகத்தந்த கருணையை வாய்விட்டுச் சொல்ல முடியாது என்கின்றார்.

சீர்பாத வகுப்பு முழுதுமே இப்பாடலுக்கு விரிவுரைபோல் திகழுகின்றது. அங்கு அத்திருவடிகளை, "அடியேன் மனோரதம்" என்றுகூறி,

"முடிய வழி வழி அடிமை எனும் உரிமை அடிமை முழு
துலகறிய மழலை மொழி – கொடுபாடும் ஆசுகவி
முதலமொழிவன நிபுணமதுபமுகர் இதமவுன
முகுள பரிமள நிகில – கவிமாலை சூடுவதும்"

என்றும் தன்னை அக்கழல் ஆட்கொண்டதைக்கூறுகின்றார். "மணம் பெற்றது" என்பதை உலக இயலில் "மேன்மை பெற்றது" என்ற பொருளில் பிரயோகிப்பதை ஈண்டு ஞாபகமூட்டுகின்றோம்.

வேதம், அமரர் முடி, வெங்கானம், தினைப்புனம் இவற்றைத் தனது ஸ்பர்சத்தால் பாவனமாக்கியதும், அடியார்களுக்கு வீட்டுப் பேறாய்த் திகழ்வதுமான கழல்களை நான் புகலிடமாகப் பற்றத்தந்த அதிசயம் என்னென்பது ? என்பது பிண்டக்கருத்து. இறைவனின் திருக்கழல்களே ஆதியும் அந்தமும், அவையே சிருஷ்டியாதி பஞ்ச க்ருத்யங்களையும் செய்வன, என்பதை மணிவாசகர் திருவெம்பாவை ஈற்றுச்செய்யுளில் பாடியிருப்பது காண்க.

கழலே வீடு என்பதை கந்தரலங்காரம் 31வது பாடலில், "செக்கச்சிவந்த கழல்வீடு தந்தருள்" என்பதால் அறியலாம்.

### நாற்பத்தைந்தாவது பாட்டு

கரவாகிய கல்வியுளார் கடை சென்று
இரவா வகை மெய்ப் பொருளீகுவையோ
குரவா குமரா குலிசாயுதகுஞ்
சரவா சிவ யோக தயாபரனே

### பதவுரை

குரவா-ஜகத்குருவே, குமரா—என்றும் இளமையோடு இருப்பவனே, குலிசாயுத – வஜ்ரப்படையுடையவனே, குஞ்சரவா – யானையை வாகனமாக உடையவரே, சிவயோகதயாபரனே – சிவயோகத்தை அடியார்க்கருளும் கருணாமூர்த்தியே, கரவாகிய கல்வியுளார் – கல்வி கற்றதுபோல் கள்ளத்தனம் செய்யும் பாசாங்கு செய்யும் போலிகளின், கடைசென்று– வாசலைச்சேர்ந்து, இரவாவகை – எனக்கு மெய்ப்பொருள் உபதேசஞ்

செய்ய வேண்டுமென்று இறைஞ்சாதபடி, மெய்ப்பொருள் ஈகுவையோ—நீயே மெய்ப்பொருளாய் நின்று எனக்கு உன்னையே நல்குவையோ ?

விரிவுரை

குரவா என்றார். தந்தைக்கே உபதேசம் செய்த பெற்றியான். அகஸ்தியருக்குக் குருவானன் தனக்கும் குருவானன். குரு என்ற சொல்லிற்கு உரை கூறுகிறார் திருமூலர் 7ம் தந்திரம் 35ம் பகுதி 18வது பாடலில்,

" ஏறுநெறியே மலத்தை எரித்தலால்
ஈறில் உரையால் இருளை யறுத்தலால்
மாறில் பசுபாசம் வாட்டலால் வீடுக
கூறுப ரனேகுரு வாம் இயல்பே, "

( திருமந்திரம் 2066 ),

என்று. இதனையே வடமொழியிலும் கூறப்பட்டிருக்கின்றது.

" குசப்தஸ்த்வந்தகார: ஸ்யாத் ருகாரஸ்தந்நிரோதக: I
அந்தகார நிரோதித்வாத் குருரித்யபிதீயதே II "

மேற்படி திருமந்திரப் பாட்டின் ஈற்றடிகள் கருத்திற்கு ஏற்ப,

" குகாரோ ஞான ஸம்பத்தி: ரேபஸ்தஸ்ய ப்ரகாசக: I
உகாரச்சிவதாதாத்ம்யம் குருரித்யபிதீயதே II "

என்றும் கூறப்பட்டிருக்கிறது.

" கு என்றால் அந்தகாரமான அஞ்ஞானம் ரு என்றால் அதனை ஒழிப்பது. அஞ்ஞானத்தை அழிப்பதால் குரு என்று சொல்லப் படுகிறார்." என்பது முதல் சுலோகத்தின் பொருள். " கு என்பது மெய்ஞ்ஞானம் ர என்பது அது பிரகாசமாகும்படி செய்தல் உ என்பது சிவனும் சீவனும் ஒன்றுதல் இதனால் அவர் குரு என்று சொல்லப்படுகின்றார் " இது இரண்டாவது சுலோகத்தின் பொருள் இங்கு முருகனை குரு என்று சொல்வதற்கு திருமூலர் விளக்கம் கொடுக்கின்றார்.

" தாள் தந்தளிக்கும் தலைவனே சற்குரு
தாள் தந்து தன்னை யறியத்தரவல்லோன்
தாள் தந்து தத்து வாதீதத்துச் சார் சீவன்
தாள் தந்து பாசம் தணிக்குமவன் சத்தே "

என்றதால் இறைவனே குருவாக வந்தருள்வன் என்றாயிற்று. வைணவ சித்தாந்தத்தில் ஆச்சார்யாபிமானமே " பஞ்சமோபாய " மாகக் கருதப்படுகின்றது.

குமரா: குமாரன் என்ற சொல் குமரனைக் திரிந்தது என்று கொண்டால், கு : குற்றம். மும்மலங்களாகிய அழுக்கு மாரன்: ஒழிப்பவன் ( 15-வது பாடல் விரிவுரையைப் பார்க்க )

குலிசாயுதா :— பருவதத்தைத் தகர்ப்பவன் என்று பொருள். வஜ்ராயுதத்தை இடி என்பார்கள். இடி மலையைப்பிளக்கும் என்பது மரபு. லலிதா ஸஹஸ்ரநாமத்தில் "ரோக பர்வதகம்போளி" என்பது ஒரு நாமா. பவரோகமாகிற பர்வதத்தைத் தகர்க்கும் இடி என்று பொருள். இதுதான் வஜ்ராயுததத்துவம்.

குஞ்சரவா : யானைமீது ஆரோகணித்தவன். யானையின் முகம் பிரணவஸ்வரூபம். அதன்மீது இருந்து நடத்துபவன். மயிலும் பிரணவஸ்வரூபம்தான். ஆனால் மயிலில் ஆரோஹணிப்பதற்கும் யானைமீது ஆரோஹணிப்பதற்கும் வித்தியாசம் உண்டு. மயிலில் ஆரோஹணிக்கும்போது விரித்த தோகையின் மத்தியில் முருகன் அமர்ந்திருப்பான். யானைமீது அமரும்போது பிரணவத்திற்குமேலே இருப்பான். ஆக மயிலின்மீது இருக்கும் முருகன் பிரணவத்தின் உள்பொருள் என்பதையும் யானைமீது இருக்கும் முருகன் அதற்கு யஜமானனாக இருந்து இயக்குபவன் என்றும் பொருள்படுவது காண்க.

சிவயோக தயாபரன் : இதை இரண்டு நாமாக்களாகப் பிரித்துப் பொருள் கொள்ள இடமிருப்பினும், ஒன்றாகக் கூறுதல் சிறப் புடைத்து. தன் அடியார்களுக்கு சிவயோகத்தை அளிக்கும் கருணை மூர்த்தி என்று பொருள். சிவயோகம் என்பது சித்தாந்த சாஸ்திரத் தில் தசகாரியங்களில் ஒன்று. விரிக்கிற் பெருகும். தசகாரியக் கட்டளை முதலிய பண்டார சாஸ்திரங்களை ஆராய்ந்து தெளிக. அருணகிரியார் இதனை வெகு சுருக்கமாகத் தமது திருப்புகழில் (310),

" ஐந்து பூதமும் ஆறு சமயமும்
மந்த்ர வேத புராண கலைகளும்
ஐம்பத்தோர் விதமான லிபிகளும் — வெகுரூப
அண்டராதி சராசரமும் உயர்
புண்டரீகனும் மேகநிறவனும்
அந்தி போலுரு வானும் நிலவொடு — வெயில்காலும்
சந்த்ர சூரியர் தாமும் அசபையும்
விந்து நாதமும் ஏக வடிவம
தன் சொருபமதாக உறைவது — சிவயோகம் ",

இத்தகைய சிவயோக அநுபவத்தை அருளவல்லவனுகையாலே சிவயோக தயாபரன் என்ருர். முருகனை சிவயோகி என்று கூறும் பொருள் அடியேனுக்கு சிறப்பாகத் தோன்றவில்லை.

'கரவாகிய கல்வியுளார் கடை சென்று இரத்தல்' என்றதில் போலிகுருமார்களை நிந்திக்கின்ருர். கரவாகிய கல்வியுளார் என்ருர். கற்றும் உண்மை நிலையறியாது கற்றதில் பெருமை கொண்டு, தாம் யாவும் உணர்ந்தவர்போல் வேடம் போட்டும், பறையடித்தும், காமக்குரோதாதிகளை வெல்லாமல் திரியும் குருமார்கள். இவர்களை குரு என்று கூருமல், குருடர் என்கின்ருர் திருமூலர்.

"குருட்டினை நீக்கும் குருவினைக் கொள்ளார்
குருட்டினை நீக்காக் குருவினைக் கொள்வார்
குருடும் குருடும் கூட்டாட்டம் ஆடி
குருடும் குருடும் குழி விழுமாறே (1680)

மெய்ப்பொருள் ஈகுவையோ? முருகனே மெய்ப்பொருள். இரண்டும் வேறல்ல. ஆதலால் உன்னையே எனக்குத்தா என்று கூறுவதாகக் கொள்ளல் பொருத்தமுடைத்து, நான் அபக்குவ குருவிடம் சென்று அவதிப்படாமல் நீயே குருநாதனுக வந்து மெய்ப் பொருளாகிய உன்னையே தரவேண்டுமென்பது கருத்து. சிவபிரானுக்கு முருகபிரான் உபதேசித்ததைக் கூறவந்த அருணகிரி,

"பாதித்திருவுருப்பச் சென்றவர்க்குத் தன் பாவனையைப்
போதித்த நாதன்"

என்ருர். இங்கு தன் பாவனை என்பது என்ன? தன் என்பது யாரைக் குறிக்கின்றது? சிவனுடைய பாவனையா? முருகனுடைய பாவனையா? சிவோஹம் பாவனையா? அதுதான் மெய்ப்பொருள். அதுதான் சிவயோகம், இப்பாட்டில் அபக்குவ குருவை அடையா தீர்கள். பக்குவ குரு முருகனே. குருவில்லாமல் சிவயோகம் உண்டாகாது. அதைத்தர, அவனே வல்லவன், என்றெல்லாம் குறிப்பாய் உணர்த்தப்படுகின்றது. கற்றதை மறைக்கும் இழிவுடையோர் என்று உரை கூறுவது பொருந்தாது.

## நாற்பத்தி ஆருவது பாட்டு

எந்தாயு மெனக் கருள் தந்தையு நீ
சிந்தா குலமானவை தீர்த்தெனையாள்
கந்தா கதிர் வேலவனே உமையாள்
மைந்தா குமரா மறை நாயகனே.

## பதவுரை

கந்தா—கந்தசுவாமியே, கதிர்வேலவனே—சுடர்விட்டு பிரகாசிக்கின்ற வேலாயுதக்கடவுளே ! உமையாள் மைந்தா—உமாதேவியின் புத்திரனே, குமரா — குமாரா, மறைநாயகனே — வேதங்களுக்குத் தலைவனே, நீ என் தாயும் — நீ எனக்குத்தாயும், அருள் தந்தையும்—கிருபை பாலிக்கும் தந்தையுமாவாய் (ஆகையால்), சிந்தாகுலமானவை—என் மனதின் வியாகூலங்கள் அனைத்தையும், தீர்த்து—போக்கடித்து, எனையாள்—என்னை யாட்கொள்வாயாக.

## விரிவுரை

முந்தின பாட்டில் முருகனை குருவே என்றார். இப்பாட்டில் தாயும் தந்தையும் நீயே என்கின்றார். மாதா பிதா குரு தெய்வம் எல்லாம் முருகனே என்பது கருத்து. இந்நால்வருமே ஒருவனின் மதிப்புக்கும் வணக்கத்திற்கும் உரியவர் என்பது சாஸ்திர சம்மதம். வேதமும் மாத்ருதேவோ பவ, பித்ருதேவோ பவ, ஆசார்ய தேவோ பவ என்று கூறுகின்றது. தாயன்பு தலை சிறந்தது. சூதமுனிவர் தேவீ பாகவத உபோத்காதத்தில் ஓர் வரலாறு கூறுகின்றார் :—

வியாசர் ஒருசமயம் ஸ்நான கட்டத்தில் ஊர்க்குருவிகள் தம் குஞ்சுகளுக்கு இறை ஊட்டுவதைக்கண்டு கீழ்க்கண்டவாறு சிந்திக்கலானார். இந்த ஊர்க்குருவிகள் ஏன் இத்தனை அக்கரை கொண்டு தம குஞ்சுகளுக்கு இறை தேடி ஊட்டுகின்றன ? இக் குஞ்சுகள் பெரிதாகி விவாகம் செய்துகொண்டு மருமகளுடைய முகத்தைக்கண்டு சந்தோஷமடையப் போகின்றனவா ? தாம் இறந்தால் இக்குஞ்சுகள் தமகு அபரக்கிரியைகள் செய்து தம்மை பித்ரு லோகத்தில் காப்பாற்றப்போகின்றனவா ? காசிக்குப் போய் கயா சிராத்தம் செய்யப்போகின்றனவா ? அல்லது தமக்கு விருஷோத்ஸாஜனம் என்ற 11வது நாள் செய்யவேண்டிய கர்மாவைச் செய்யப்போகின்றனவா ? (அதாவது 11வது நாளில் ஆண் கன்றை வாங்கி அதற்கு சூலம் பொறித்து தன் இஷ்டப்படி ஸஞ்சரிக்க விடுதல்) ஒன்றுமில்லையே. ஆனால் இந்த ஸம்ஸாரத்தில் புத்திரரை ஈன்று அவர்களை உச்சிமோந்து தழுவி இன்புறுவதே சிறந்த சுகம் என்று சாஸ்திரங்கள் கூறுவது இந்தப்பறவைகள் மாட்டும் உண்மையாயிருக்கின்றதே. அப்படியிருக்க நமக்குப் புத்திரனில்லாம லிருக்கிறதே, என்று வருந்தினாராம். ஆகத் தாயன்பு என்பது யாதொரு பிரதி பிரயோஜனத்தையும் கருதாது புத்திரர் மாட்டுக்

கொள்ளும் வாஞ்சையே. அதற்கு வாத்ஸல்யம் என்று பெயர். உலகத்தை இந்த மாத்ருபாவமே தாங்குகின்றது. "பொல்லாத சேயெனில் தாய் தள்ளல் நீதமோ, புகலிடம் பிறிதுமுண்டோ?" என்கிறார் தாயுமானவர். பிள்ளை கெட்டவனாயினும் தாயன்பு அவனிடத்தில் இருப்பது இயல்பு. ஆகையால் தாயாக நீ எனக்கும் இருக்க நான் கசடனாகிலும் என்னைக் கைவிடமாட்டாய். தந்தையும் நீயே. அதுவும் அருள் தந்தையும் நீயே. பிள்ளை வளர்வதற்கும். அவனைக் கல்வி முதலியனவற்றில் தேர்ச்சிபடச்செய்து முன்னுக்குக் கொண்டு வரவும் பாடுபடுகிறவன் தந்தை. நீ எனக்குத் தாயாயும், தந்தையாயுமிருப்பதால், அன்பும் அருளும் இரண்டும் நீ தரக்கடமைப் பட்டவன். நீ உமாதேவியாரின் புத்திரன். ஆகையால் தாயன்பு இத்தகையது என்பதை அறிவாய், என்பது ஒரு கருத்து.

இனி, சித்தாந்தப்படி, தாயே தகப்பனைக்காட்டுவாள். "முன்னி அவள் நமக்கு முன் சுரக்கும் இன்னருள்" என்றார் மாணிக்கவாசகர். பக்குவ ஆன்மாக்களுக்கு பராசக்தியே, சத்தி நிபாதமாகப் பதிந்து இறையருளைக் கூட்டிவைப்பாள். வைணவர்கள், பெரிய பிராட்டியை, "புருஷகாரபூதை" என்பர். இங்கு தாயாயும் தந்தையாயும் நீயாகவேயிருப்பதனால், என்னுடைய சிந்தாகுலம் தீர்க்கவேண்டிய பொறுப்பு உன்னுடையது. இதனை திருத்தணிகைத் திருப்புகழ் (304) ஒன்றில் அழகாகக் கூறுகின்றார்.

"ஏது புத்தி ஐயா எனக்கு இனி
யாரை நத்திடுவேன் அவத்தினிலே
யிறத்தல் கொலோ எனக்கு நீ — தந்தைதாயென்
றேயிருக்கவும் நானும் இப்படி
யே தவித்திடவோ சகத்தவர்
ஏசலிற்படவோ நகைத்தவர் — கண்கள்காணா
பாதம் வைத்திடையாதரித்தெனை
தாளில் வைக்க நீயே மறுத்திடில்
பார் நகைக்குமையா தகப்பன் முன் — மைந்தனோடி
பால் மொழிக்குரலோல மிட்டிடில்
யாரெடுப்பதெனா வெறுத்து அழப்
பார் விடுப்பார்களோ எனக்கு இது — சிந்தியாதோ?,"

என்று அழகாகக் கேட்கின்றார்.

"அம்மையே அப்பா ஒப்பிலாமணியே;"

என்றழைக்கின்றார் மாணிக்கவாசகர்.

" அப்பன் நீ அம்மை நீ ஐயனும் நீ
அன்புடைய மாமனும் மாமியும் நீ
ஒப்புடைய மாதரும், ஒண்பொருளும் நீ
ஒருகுலமும் சுற்றமும் ஒருநும் நீ, "

என்று அப்பர் கதறுகின்றார்.

சிந்தாகுலம் என்பதை முந்தின 33-வது பாடலில் கூறினர். " சிந்தாகுல இல்லொடு செல்வமெனும் விந்தாடவி " என்று கூறினர். இங்கு " சிந்தாகுலமானவை தீர்த்தெனையாள், " என்று கூறுவதால், இல், செல்வம் இரண்டேயன்றி, எனக்கு வியாகூலத்தை விளைக்கவிருக்கும் அநாத்ம விருத்திகள் அனைத்தையும் போக்க வேண்டும், என்று கூறலாம்.

கந்தரலங்காரம் 46-வது பாடலில், " மாயா விநோத மனோ துக்கம் " என்றும், அதிகமாக கந்தரலங்காரத்தில் சேர்க்கப்பட்ட பாடல் ஒன்றில்,

" கொள்ளித்தலை எறும்பதுபோலக் குலையுமென்றன்
உள்ளத்துயரை ஒழித்தருளாய் "

என்றும் கூறுகின்றார். 79-வது பாடலில்,

" பந்தாடு மங்கையர் செங்கயற் பார்வையிற் பட்டுழலும்
சிந்தாகுலந்தனைத் தீர்த்தருள், "

என்று பிரார்த்திக்கின்றார். சிந்தாகுலத்தை திருப்புகழ் 988ல், " துக்கமாமகோததி, " என்று சித்தரிக்கிறார்.

உமையாள் மைந்தா : இதன் தத்துவம் முன்பே கூறப்பட்டது. உமா என்ற நாமம் வேதத்தில் வருவது. " உமாம் ஹைமவதீம் " என்று கேனோபநிஷத் ( 3-12 ) கூறுகின்றது. " உமா " என்பது " ஓம் " என்பதின் ஸ்திரீலிங்கம் அ. உ. ம என்ற மூன்று எழுத்துக்களும், சக்தி எழுத்தான ' உ ' கரத்தை முன் வைத்து வழங்கப் படுகின்றது.

நாற்பத்தி ஏழாவது பாட்டு

ஆறுறையு நீத் ததன் மேனிலையைப்
பேறுவடி யேன் பெறு மாறுளதோ
சீறு வரு சூர் சிதைவித் திமையோர்
கூறு வுலகங் குளிர் வித்தவனே

## பதவுரை

*சீருவருசூர்-சீற்றத்துடன்* இரைச்சல் போட்டுக்கொண்டுவரும் சூரனை, *சிதைவித்து*—கொன்று, இமையோர் கூறு உலகம்—இமைய வருடைய பங்கான (பாத்யமான) தெய்வலோகத்தை, குளிர்வித்த வனே—தேவர்கள் மனங் குளிரும்படி காத்தவனே, ஆறுறையும்—ஆறு வழிகளான ஆதார கமலங்களையும், நீத்து—பேதித்துக்கொண்டு, கழித்து, அதன்மேல் நிலையை—அவற்றிற்கு மேலேயிருக்கும் ஸஹஸ்ரார கமலத்தில் இருக்கும் சாதாக்ய நிலையை, பேறு-பேறாக, பெரும் வாய்ப் பாக, அடியேன் பெறுமாறுளதோ—அடையும்படியான பாக்கியம் எனக்குக்கிட்டுமோ ?

## விரிவுரை

*சீறுதல் என்பதற்கு கோபித்தல் என்றும், இரைதல் என்றும் பொருள்கள் உண்டு. ஆதலால் இரண்டுமே சேர்த்து கோபத்துடன் கூச்சல் போட்டுக்கொண்டு வரும் சூரன் என்று பொருள் கொள்ளப் பட்டது.*

**இமையோர் கூறு உலகம் :—** *இமையவருடைய பங்காகக் கருதப்பட்ட என்பது பொருள். இமையவருக்கு பங்கு பாத்யமானது சுவர்க்கலோகம். அரக்கருக்கு பங்கு பாத்யமானது பாதாளலோகம். வைகுண்டம் விஷ்ணுவின் பங்கு. கைலாயம் சிவனின் பங்கு. சத்ய லோகம் பிரம்மாவின் பங்கு என்று அவரவர்களுக்குத் தனித்தனியே பாத்யமானது என்று பொருள். பாதாளத்தில் இருக்கவேண்டிய வர்கள் பிறருக்கு பங்கு பாத்தியமான சொர்க்க லோகத்தை ஆக்கிர மித்தனர், என்று உணர்த்த கூறுன உலகம் என்று குறிப்பிட்டார்.*

*உலகம் குளிர்வித்தவனே, என்பதில் உலகம் என்பது ஆகு பெயராய் அவ்வுலகத்தவரைக் குறித்து வந்தது. சூரன் அழிந்து விண்ணவர் தங்களுக்கு நிரந்தர பாத்தியமான சொர்க்கத்தில் திரும்பக் குடியேறினதால் அவர்கள் மனங்குளிர்ந்தது.*

*(இமையவர்களுக்குக் கூறுகக் கொடுத்தாய். எனக்குப் பேறுகக் கொடுத்தாய். அவர்களுக்கு அது உரிமை, அதையே கொடுத்தாய். எனக்கு உரிமையில்லாத பேற்றை நல்கினுய். மானிடப்பிறவி தெய்வப்பிறவியைவிடச் சிறந்தது)*

*இனி ஆறுறையும் என்பதை எண்களின் அடுக்காகக்கொண்டு 6×6=36 என்று 36 தத்துவங்களைக் கூறினதாக உரையாசிரியர்கள்*

பலர் கூறியிருக்கின்றனர். நாம் முதல் ஆறு என்பதை எண்ணிக்கை யாகவும், இரண்டாவது ஆறு என்பதை வழி என்றும் பொருள் கொண்டு, ஆறு ஆதாரங்களாகிய வழி என்று கூறினோம். குண்டலினியானது மூலாதாரம், ஸ்வாதிட்டானம், மணிபூரகம். அனுஹதம், விசுத்தி, ஆக்ஞை என்ற ஆறு ஆதாரங்கள் வழியாய், அவற்றை பேதித்துக்கொண்டு சுழுமுனை நாடி வழியாய் மேலேறி அவற்றிற்கு அப்பால் இருக்கும் ஸஹஸ்ரார கமலத்தைச் சேரும். அவ்வாறு சேர்ந்தால் அங்கிருந்து அமிர்தம் வர்ஷிக்கும் அது சரீரத்தின் 72,000 நாடிகளையும் நனைத்து, இறவாத சித்தியைத் தரும். ஸஹஸ்ராரத்தில் இருக்கும் நிலையைத்தான் சாக்தர்கள் சாதாக்யம் என்பார்கள். அங்கு சதாசிவரும் மனோன்மனியும் பேத மன்னியில் அர்த்தநாரியாக சிவசக்தி ஐக்கியமாக இருப்பதால் அதற்கு சாதாக்யம் என்று பெயர் வந்தது. இது பற்றி இன்னும் அறிய விரும்புவோர் ஸௌந்தர்யலஹரியைப் பார்க்க.

36 தத்துவங்களை ஆராய்வதை சித்தாந்த சாஸ்திரம் "பாச ஞானம்" என்று கூறும். பாசஞானம் ஏற்பட்டவுடன் முக்தி அடைவது என்பதை சித்தாந்த சாஸ்திரங்கள் ஒப்புவதில்லை, பாச ஞானத்திற்குப்பின் பசு ஞானமும், அதற்குப்பின் பதிஞானமும் படிப்படியாய் ஏற்பட்டாலன்றி முக்தி நிலை வராது. ஆகையால் ஈண்டு 36 தத்துவங்களை இதுவல்ல இதுவல்ல என்று தள்ளி, அதற்கப்பால் இருக்கும் நிலையென்பது, அவ்வளவு பொருத்தமல்ல என்பது எனது தாழ்மையான அபிப்ராயம். அப்படியும் இல்லா விட்டால் நான் சொன்னபடியும் பொருள் கொள்ளலாம் என்பதோடு நிறுத்திக்கொள்வோம்.

இதற்கு ஆதாரம் அருணகிரியார் பாடிய திருப்புகழ் பாடல்களில் பரக்கக்காணலாம். அவற்றில் ஒன்று ஈண்டு கொடுப்போம்.

1213, 1214 திருப்புகழ் பாடல்கள் இரண்டுமே இதனைக்கூற வந்தவை. அவற்றில் 1214 மிகத் தெளிவாய் இருக்கின்றது.

"மூலாதாரமோ டேற்றி யங்கியை
ஆருதாரமோ டோட்டி யந்திர
மூலா வாயுவை யேற்றி நன்சுழி — முனையூடே
மூதாதார மரூப்பிலந்தர
நாதாகீத மதார்த்திடும்பர
மூடே பாலொளி யாத்துமந்தனை — விலகாமல்

மாலாடுடுஞெரு சேர்த்திதம் பெற
நாலுவாகம சாத்திரஞ் சொலும்
வாழ் ஞானபுரியேற்றி மந்திரத் — தவசூடே
மாதா நாதனும் வீற்றிருந்திடும்
வீடே மூன்ளெளி காட்டி சந்திர
வாகார்தேனமு தூட்டி எந்தனை — உடன் ஆள்வாய்"

என்பது.

"அதலசேடனாராட," என்ற திருப்புகழின் உள் பொருளும் குண்டலினி யோகத்தையே கூறியிருக்கிறது என்பதும் தெளிக.

திருப்புகழ் 1139ல் தத்துவம் "அறுபானுடாறுறு," அதாவது 60+36=96 என்றவர், இங்கு 36 என்பாரோ? மேலும் தத்துவம் 36 என்பதுபோல, தத்துவங்கள் 25 என்றும் 96 என்றும் பல சித்தாந்தங்கள் பலவிதமாய்க்கூறும். 36ம்கூட வெவ்வேறு விதமாய்க்கூறும்.

திருமூலர் திருமந்திரத்தில் மூன்றாம் தந்திரம் இந்தக் குண்டலினி யோகத்தை விரித்துக்கூறும் திருமந்திரம் 1354 செய்யுளில் பராசக்தியைக் குண்டலி என்றே அழைக்கின்றார். ஆறு ஆதாரங் களின் வழியாகக்குண்டலினி செல்லுங்கால் ஆங்காங்குள்ள சிவசக்தி அம்சங்களைக் கபளீகரித்துச் செல்வதைத்தான் அறுவர் முலையுண்ட தாகப் புராணம் கூறும். கந்தரலங்காரப் பாடல்களில் 11ல் மயிலையும், 12ல் சேவலையும், 97ல் மயிலையும் பற்றிக் கூறுவது குண்டலினி யோக முறையிற் பொருள் கொண்டாலன்றி, வேறு பொருள் சிறந்ததாகாது.

## நாற்பத்தெட்டாவது பாட்டு

அறிவொன்றற நின்றறிவா ரறிவிற்
பிறிவொன்றற நின்ற பிரானலையோ
செறிவொன்றற வந்திருளே சிதைய
வெறிவென்ற வரோடுறும் வேலவனே.

## பதவுரை

அறிவொன்றற — இது, அது, என்று சுட்டிக்காட்டும் பிரபஞ்ச அறிவு அற்று, நின்றறிவார் அறிவில் — தன்னிடத்தில் அறிவுக்கு அறிவாய்த் தோன்றும் மெய்ஞ்ஞானத்திலே நிற்கும் சுத்தான்மாக்களாகிய ஞானிகளின் அறிவில், பிறிவொன்றறநின்ற பிரான் — அந்த அறிவிற்கு

அறிவாய் நிற்கும் பரம் பொருள், இலையோ — நீ யன்றோ, செறிவு ஒன்று அறவந்து — நிறைந்து வருகின்ற மலத்தடிப்பு அகன்று, இருளே சிதைய — அஞ்ஞான இருள் நீங்க, வெறி வென்றவரோடு — காமக் குரோ தாதிகளான வெறிகளை ஜெயித்த ஜீவன்முக்தரோடு, உறும் வேலவனே — வதியும் வேலாயுதக்கடவுளே.

## பொழிப்புரை

*மலத்தடிப்பையும், அஞ்ஞான இருளையும், காமம், வெகுளி, மயக்கம் என்ற வெறிகளையும் வென்றவரான ஜீவன் முக்தர்களின் உள்ளத்தில் பிரகாசிக்கும் வேலாயுதப் பெருமானே, நீ பிரபஞ்ச சுட்டறிவு போய் எல்லாம் தானுய்ப்பார்க்கும் ஜீவன் முக்தர்களான ஞானிகளின் மெய்ஞ்ஞானமாகவே விளங்குவனல்லவா ? அதாவது அவர்கள் உள்ளத்திலே ஞானமாக உறைந்து, பின் ஞானமே அவராய் அவரே ஞானமாயிருக்கும் சுத்த சைதன்யமன்றோ நீ.*

## விரிவுரை

*• இப்பாடல் ஜீவன்முக்தர் இறைவனில் அழுந்தும் முறைமையைக் கூறுகிறது. முந்தின பாட்டில் ஆருதாரத்திற்கப்பால் சென்று சாதாக்ய நிலையையடைந்தவர் அநுபவிக்கும் ஞானப்பிரகாச சமாதியைக் கூறுகின்றது. இப்பாடலுக்கு உரை கூறுவது அவ்வளவு எளிதல்ல. உரை எழுதி பிறருக்கு விளங்கவைப்பது அதைவிடக் கடினமானது. முருகனருளால் அதை முயலுவோம். சிவஞான சித்தியார் 8ம் சூத்திரம் 2ம் அதிகாரம் 30வது செய்யுள் இப்பாடலுக்கே விரிவுரை போன்று அமைந்திருக்கின்றது. அப்பாடல்*

*" அறியாமை அறிவகற்றி அறிவினுள்ளே*
*அறிவுதனை அருளினல் அறியாதே அறிந்து*
*குறியாதே குறித்தந்தக் கரணங்களோடும்*
*கூடாதே வாடாதே குழைந்திருப்பை யாகில்*
*பிறியாத சிவன் தானே பிரிந்து தோன்றிப்*
*பிரபஞ்ச பேதமெல்லாம் தானுய்த் தோன்றி*
*நெறியாலே இவை யெல்லாம் அல்லவாகி*
*நின்றென்றும் தோன்றிடுவன் நிராதாரனுயே "*

*முதல் அடி, " அறியாமை அறிவு அகற்றி அறிவினுள்ளே அறிவுதனை அருளினல் அறியாதே அறிந்து " என்றதைத்தான் அருணகிரியார், " அறிவொன்றற நின்று அறிவார் அறிவு " என்று*

கூறுகின்ருர். ஆணவ மலத்தால் கட்டுண்டு பிரபஞ்சத்தை தன்னி னின்றும் வேருய் இது அது என்று சுட்டிக்காட்டும் அறிவு என்ற அஞ்ஞானமானது அறவே நீங்கி யாவற்றையும் தன்னுள்ளேயும், யாவற்றுள்ளும் தன்னையும் பார்க்கும் ஞானிகளின் அனுபவமாய் அந்த ஞானமே தானுய் அந்த ஞானத்தின் பிரகாசமாய் நிற்பவன் இறைவன். சின்மாத்ரமாய் இருப்பன். எப்பொழுது என்னில் செறிவு ஒன்று அற, இருளே சிதைய, வெறியை வெல்லவேண்டும். அப்படி வென்ருல் இந்த அனுபவத்தைப் பெறலாம் என்பது கருத்து. ஈண்டு மூன்று விஷயங்கள் செய்யவேண்டுமென்கின்ருர். (1) செறிவு அறவேண்டும் (2) இருள் சிதையவேண்டும் (3) வெறியை வென்றிடவேண்டும்.

1. செறிவு அறல் என்பது மலத்திட்பம் ஒழிதல்
2. இருள் அகலல் என்பது அஞ்ஞானம் நீங்குதல்
3. வெறிவென்றிடல் என்பது காமக்குரோதாதிகளை வெல்லுதல்

இவை மூன்றும் ஒன்றன்பின் ஒன்ருய் நிகழ்வன. காமக் குரோதாதிகளை வெல்லுவதால் மலத்திட்பம் ஒழியும் அதனுல் அஞ்ஞானம் நீங்கும், அல்லது அஞ்ஞானமாகிய பிரபஞ்சத்தின் மீது பற்றுக்கொள்ளுதல் நீங்கும். அப்போது காமக்குரோதாதிகளை ஜெயிக்கலாம். அதனுல் மலநாசம் ஏற்படும். இம்மூன்றையும் காமம் வெகுளி மயக்கம் என்ற மூன்று சொற்களால் குறிப்பிடுகின்ருர் வள்ளுவர்.

"காமம் வெகுளி மயக்கம் இம்மூன்றன்
நாமம் கெடக் கெடும் நோய்"

என்ற விடத்துக்காண்க. இம்மூன்றும் கெட்டால் பிறவி என்னும் பெருநோய் அகலும். பரிமேலழகர் உரை விளக்கம், அநாதியாய அவித்தையும், அதுபற்றி யான் எனது என்று மதிக்கும் அகங்காரமும், அது பற்றி எழும் அவாவும், அதுபற்றி வரும் ஆசையும் அடைய, அடையாதுழி கோபமும் குற்றம் ஐந்து என்பர் வடநூலார். (1) அவித்யை (2) அகங்காரம் (3) அவா (4) ஆசை (5) கோபம் இவற்றுள் அகங்காரம் அவித்தையிலும், ஆசை அவா விலும் அடங்குமாதலால் மூன்று என்ருர். இடையருத ஞான யோகங்களின் முன்னர் இக்குற்றங்கள் மூன்றும் காட்டுத்தீ முன்னர் பஞ்சுபோல நாசமடையும். காலிங்கர் உரையையும் நோக்குக.

வெறி வென்றவர் என்பதை ஜிதேந்திரியர் என்றும் கூறலாம். "ஐவாய் வழி செல்லும் அவா", என்று முன்பு கூறினுரல்லவா?

இந்திரியங்களை வென்றவர்களைத்தான் ஜிதேந்திரியர் என்பது. வெறி வென்றதைக் கோபம் எனக்கொண்டு, வெகுளியை விட வேண்டுமென்பதும் பொருளாகக் கூறலாம். இதனைக் கந்தரலங்காரம் 16வது பாடலில் கூறுகின்றார், "விடுங்கோள் வெகுளியை" வெறி என்பதை பைத்தியம் எனக்கொண்டும் பொருள் கூறலாம். "வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வி எனும் பித்த உலகு", என்றார் மாணிக்கவாசகர். இம்மூன்றும் வென்றவரிடத்தில், அவர்கள் உள்ளத்தைக் கோயிலாகக்கொண்டு உறையும் முருகன், ஜீவன் முக்தர்களின் ஞானகாசப்பிரகாச சமாதியாய், சாதாக்ய நிலையில் அவனே தானாய் இருப்பான் என்றார்.

சகல நிலையிலிருக்கும் ஆன்மாக்கள், காமம், வெகுளி, மயக்கம் இவற்றை வெல்லுவதனால் சுத்த நிலையை அடைந்து ஜீவன்முக்தராகின்றனர், என்பதுதான் இப்பாடலின் ஆழ்ந்த, அழகிய சிறந்த கருத்து.

சுருங்கச் சொன்னால், சகல நிலையிலிருக்கும் ஜிதேந்திரியர்கள், சுத்த நிலையில் ஜீவன்முக்தராகின்றனர். ஆன்மாக்களுக்குக் கேவல நிலை, சகல நிலை, சுத்த நிலை என்று மூன்று நிலைகள் உண்டு. மஹா பிரளயத்தில் உயிர்களெல்லாம் ஆணவமலத்தில் கட்டுண்டு, இறைவனோடு பொற்கொல்லனுடைய மெழுகில் இருக்கும் தங்கம் போலக்கிடப்பது கேவல நிலை. மறுபடி புனர்சிருஷ்டி ஆரம்பித்த போது உயிர்கள் அவரவர்வினைக்கீடாக, தனு, கரண, புவன, போகங்களைப்பெற்று நால்வகை யோனி, 7 வகைப்பிறப்பு என்பதில் படுதல், சகல நிலையாகும். சகல நிலையில் ஆன்மா விகாசமடைந்து இருவினையொப்பு, மலபரிபாகமுற்று, இறைவனுடைய அருளால், ஜீவன்முக்தனான நிலையே சுத்த நிலையாம். ஜீவன் முக்தர்களுக்கு தேக யாத்திரை கழிந்தபின், மீண்டும் பிறவி கிடையாது. இந்த ஒரு பாடலில் அருணகிரியார் வைத்திருக்கும் அரும்பெரும் பொருள் அளக்க வொண்ணாதது.

அறிவொன்றற நின்றறிவார் அறிவு, என்பது ஞானம், ஞாதுரு, ஞேயம் என்ற திரிபுடியற்ற நிலையென உணர்க இப்பாட்டு கூறும் பிண்டக்கருத்து, "கேவலம் சகலம் இரண்டையும் நீக்கி, சுத்தத்தால் உண்டாகிய ஞாதிரு, ஞான, ஞேயங்களையும் கழன்று, இந்த நிலையில் நிற்கில் அவனே தானாகி நிற்பர் என்பதாம்.

நாற்பத்தி ஒன்பதாவது பாட்டு

தன்னந்தனி நின்றது தானறிய
இன்னம் மொருவர்க்கிசை விப்பதுவோ

**மின்னும் கதிர்வேல் விகிர்தா நினைவார்**
**கின்னங்களையுங் க்ருபை சூழ் சுடரே.**

பதவுரை

மின்னும் கதிர்வேல் — பிரகாசிக்கின்ற ஒளி பொருந்திய வேலாயுதத்தையுடைய, விகிர்தா - பலவித உருவெடுக்க வல்லவனே, நினைவார் கின்னம் களையும் — உன்னை நினைப்பவர்களின் இன்னல்களைப் போக்கும், க்ருபை சூழ் சுடரே — கருணையாகிய கிரணங்கள் சூழ்ந்த ஒளி பிழம்பே, தன்னந்தனி நின்றது — (நீ எந்தனை ஆண்டு கொண்ட பின்) நான் தனியான நிலையை அடைந்ததை, தான் அறிய — நானே அறிந்து அனுபவிப்பதல்லால், இன்னம் ஒருவர்க்கு இசைவிப்பதுவோ — வேறொருவருக்கு வாய்விட்டுச் சொல்ல முடியுமோ?

**விரிவுரை**

*தானடைந்த பேரானந்த அநுபவத்தை வாய்விட்டுப் பிறருக்கு எடுத்துக்கூற இயலாது என்கின்றார். அநுபவித்து அறியவேண்டிய ஒன்றை அநுபவித்தாலன்றி, அறியவொண்ணாது என்பது யாரும் அறிந்ததே உதாரணமாக கற்கண்டு இனிக்கும் என்றால் அதைச் சுவைத்தாலன்றி இனிப்பு இத்தகையது என்று கூறமுடியாதல்லவா? அதுவே அப்படியானால், ஓர் பேரானந்த அனுபவத்தையெப்படிக்கூற முடியும். இதே கருத்தை முந்தின 28வது பாடலில் "யானாகிய என்னை விழுங்கி வெறுந்தானாய் நின்ற தற்பரத்தை நவிலத்தகுமோ", என்றும், 30வது பாட்டில், "அவ்வாறறிவார் அறிகின்றதலால், எவ்வாறு ஒருவர்க்கிசைவிப்பதுவே" என்றும் கூறியுள்ளார். அவனருளாலேயே அதை அனுபவித்துணர முடியுமேயல்லால் மனம் வாசகம் கடந்த ஓர் பொருளை எப்படி வாய்விட்டுக் கூறமுடியும் என்பதை, "அருள் கொண்டறியார் அறியும் தரமோ", என்றும் கேட்கின்றார். இதுதான் பேசா அநுபூதி என்று குறிப்பிடப்பட்டது. தன்னந்தனி நின்றது என்பதை, யானாகிய என்னை விழுங்கியது என்று முந்திய பாட்டில் விவரித்திருக்கிறார். இந்த ஞானானந்த அனுபவத்தை சிவஞான சித்தியாரில்,*

> *"கன்னிகைதான் காமாந்தங்காணாள்*
> *மருவி இருவரும் புணரவந்த*
> *இன்பம் வாயினால் பேசரிது மணந்தவர்*
> *தாம் உணர்வார்"*

என்று கூறப்பட்டிருக்கின்றது. இந்நிலையே சித்தாந்தத்தில் பேசப் படும் சாயுஜ்ய நிலை இறைவனையுணர்ந்து அறிந்துகண்ட நிலை. அவனே தானுப் ஆகிய நிலை. பசுகரணங்கள் கெட்டு பதிகரணம் அடைந்த நிலை இறைவனேடு ஒன்றி அவனை அநுபவிக்கும் நிலை. எத்தனை விளக்கம் கொடுத்தாலும் அநுபவித்தாலன்றி அறிய முடியாத நிலை.

இதனை சில உரையாசிரியர்கள் "தன்னைத்தான் அறியும் வகை நீ எனக்கு உபதேசம் செய்ததுபோல், ஏனையோர்க்கும் செய்வாயோ?" என்று பொருள் கூறி அவதிப்படுகின்றனர். அதோடு நிறுத்திக் கொள்ளாமல், "ஏனையோர் என்னைப்போன்று உபதேசம்பெற இயலாதவரே என மதிக்கின்றேன்", என்று அருணகிரியார் கூறியிருப்பதாக விளக்கம் வேறு கொடுக்க முயலுகின்றனர்.

கின்னங்களையும் க்ருபை சூழ்சுடரே : என்பதனுல் ஈண்டு கின்னம் என்ற சொல்லிற்கு சாமானியமாய்க்கொள்ளும் துன்பம் என்று மட்டும் கொள்ளாமல் சகமாயையாகிய இருள், அதனைப்போக்க ஞான மாகிய சுடர் என்று கூறலாம். துன்பம் என்றே பொருள் கொள்ளினும், அத்துன்பங்களெல்லாம், "தீயினில் தூசாகும்", என்றும் கொள்ளலாம். நினைவார்க்கு கின்னங்களைதலை, பல திருப்புகழ் பாக்களில் கூறியிருக்கின்ருர்.

"அடியார் படுதுயராயினவெல்லாம் நிலந்தரம் செய்யும்," என்று வைணவ ஆழ்வாரும் கூறினர். கின்னம் என்பதனை, "பிறவித் துன்பம்", என்று கொள்ளினும் அமையும். பிறவியை நோய், என்ருர் வள்ளுவரும்.

விகிர்தா :— சமயகுரவர் நால்வருமே, இச் சொல்லை இறைவனுக்கு ஏற்றியிருக்கின்றனர். "வீழிமிழலை விகிர்தனுர்", என்று சம்பந்தரும், வேயுறுதோளிபங்கன் பதிகத்திலும், 'விகிர்தன்' என்றும் அப்பர் "வெண்பொடி பூசும் விகிர்தரோ", என்றும் சுந்தரர், "புர மூன்றும் எரித்த விகிர்தன்", என்றும், மணிவாசகர் நாலாவது அகவலில், 96வது அடியிலும், அருட்பத்தில், "மெய்யனே விகிர்தா", என்றும் கூறியிருப்பது காண்க.

விகிர்தன் என்ருல் வேறு வேருன வடிவம் கொள்பவன் என்பது பொருள். முருகன் வள்ளியைத் தேடிச் சென்று வேங்கைமரமாகியும், வேடனுயும் விருத்தனுயும், வடிவங்கள் எடுத்தவனல்லவா? அவனை விகிர்தன் என்ருர் மேலும் நினைப்பவர் உள்ளத்தில் எல்லாம் அவரவர் தகுதிக்கேற்ப அமைகின்றவனல்லவா?

"பரம குருவாய், அணுவில் அசைவாய், பவன முதலாகிய பூதப்படை யுமுடையாய், சகள வடிவாய், பழைய வடிவாகிய வேலா", என்று அருணகிரித்திருப்புகழ் 203ல் கூறியிருப்பதோடு "அகரமுமாகி அதிபனுமாகி அதிகமுமாகி அகமாகி அயனெனவாகி அரியெனவாகி அரனெனவாகி அவர்மேலாய், இகரமுமாகி எவைகளுமாகி, இனிமையுமாகி வருவோனே", என்று பழமுதிர்சோலை திருப்புகழ் 3ல் கூறுகின்றார்.

விக்ருதி என்பது ப்ரகிருதிக்கு எதிர்மறை. இயல்புக்கு மாறுபட்டது என்பது பொருள். ப்ரகிருதிக்கு மாறுபட்டவன் என்பது கருத்து ப்ரகிருதி என்றால் இயற்கை. இயற்கைக்கு மாறுபட்டது விக்ருதி.

மேலும் அகளமாய் இருந்து சகளமாய் மாறுவதையும் விகிர்தம் என்று சொல்லலாம். அகளமான பிரம்மம் சகளமான சுப்பிரம்மண்யமாயிற்றுதலால் அவர் விகிர்தன். ஆக இப்பாடலில் தான்பெற்ற சாயுஜ்யப் பேற்றை அநிர்வசனீயம் என்று கூறுகின்றார்.

"முகத்திற் கண் கொண்டு பார்க்கின்ற மூடர்காள்
அகத்திற் கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்
மகட்குத் தாய் தன் மணாளனோடாடிய
சுகத்தைச் சொல் என்றால் சொல்லுமாறு எங்ஙனே",

என்றார் திருமூலர் (திருமந்திரம் 2944)

## ஐம்பதாவது பாட்டு

மதி கெட்டறவாடி மயங்கியறக்
கதி கெட்டவமே கெடவோ கடவேன்
நதி புத்ர ஞான சுகாதிப வத்
திதி புத்ரர் வீறு அடு சேவகனே.

### பதவுரை

நதிபுத்ர !—காங்கேயனே ! ஞான சுக அதிப— மெய்ஞ்ஞானத்தால் அடையும் பேரின்பத்தை அருளும்பதியே, அத் திதி புத்ரர் — திதி என்பவளின் வம்சத்தவர்களாகிய தைத்தியருடைய, வீறு அடு சேவகனே ! — கர்வத்தை அடக்கிய வீரனே (நான் இனி) மதிகெட்டு — நல்லறிவு போய், அறவாடி — மிகவும் கிலேசித்து, மயங்கி - மாயையில் ஆழ்ந்து, அறக்கதி கெட்டு அவமே கெடவோ கடவேன் - இனி எனக்கு வேறு கதி யில்லையென்று அவமே கெட மாட்டேன் என்றபடி.

**விரிவுரை**

பேசா அநுபூதி அடைந்த அடிகள் முருகனால் ஆட்கொள்ளப் பட்டு முன் இரண்டு பாடல்களில் கூறின பேரானந்த வாழ்வைப் பெற்றவர், இனி நான் மதிகெட்டு மயங்கிவிடமாட்டேன் என்று உறுதி கூறுவதாகக்கொள்வதே சிறந்த உரையாகும். அஃதன்றி தான் மயங்கியதாகவும் தன்னைக்காப்பாற்ற வேண்டுமென்று இறைஞ்சுவதாகவும் இப்பாட்டை இந்த இடத்தில் பொருள்கொள்வது முன்னுக்குப்பின் முரணாகும். அடுத்த பாட்டிலும் முருகனைப் பெருமிதத்தோடு துதிப்பதால், இப்பாடலை, தான் பெற்ற பேரானந்தப் பெருவாழ்வின் காரணமாக, நான் இனி முன்போல மதிகெட்டுக் கிலேசித்து மயல்கொண்டு திரியமாட்டேன், என்று கூறுவது சிறந்தது.

அறக்கதி கெட்டு என்பதை தர்ம மார்க்கத்தில் செல்வதை விட்டு என்று பொருள் கூறுவர்.

அறக்கதி கெட்டு என்று, எனக்கு வாழ்வு அறவே இல்லை, என்று, அவமாகக் கெடுவனோ என்று பொருள் கூறல் நன்று. இது வரை கதியற்றவனாக இருந்தேன், நீ ஆண்டுகொண்டாய், கதியாய் விதியாய் நீயே வந்தாய். இனிமேல் எனக்குக் கதியில்லை, என்று அவமாகக்கெடுவனோ, மாட்டேன் என்று கூறவும்.

அறக்கதி : தர்ம நெறி, தர்ம சாஸ்திரங்கள் கூறும் மார்க்கம் என்ற பொருளைவிட, "கதி அறக்கெட்டு", என்று கூறுவது சந்தர்ப்பத்திற்குப் பொருத்தமாக இருக்கிறது. முந்தின இரண்டு பாடல்களுக்கும் கடைசிப் பாட்டுக்கும் இடையிலிருக்கும் இப்பாட்டை அவற்றோடு இயைத்துப் பொருள் கோடல் சாலவும் நன்று.

என்னுடைய பூர்வதசையில் மதிகெட்டு, மாதரோடு சேர்ந்து வறுமை, நோய், பிறர் நிந்தனை எல்லாம் அடைந்தேன்; அதனால் மிகவும் வாடினேன்; எனக்கும் நற்கதிவருமோ, என்று மயங்கினேன் கதியில்லை யென்றே நினைத்தும் விட்டேன்; ஆனால் உன் கருணைத் திறத்தால், என்னை வந்து ஆண்டு கொண்டாய்; இனி மேல் நான் என்னை மதிகெட்டவனாய், மிகவும் கிலேசம் உடையவனாய், மயக்க முற்றவனாய், கதி கெட்டவனாய், அவமாகக் கெட்டுப்போனவனாய் நினைத்துக்கொள்ள முடியுமோ, என்று பெருமிதத்தில் பாடுகின்றார்.

திதிபுத்திரர் :— அசுரர்களுக்குப் பொதுப்பெயர் தைத்தியர் என்பது. திதி என்பவள் தக்ஷனின் குமாரத்திகளில் ஒருவள். இவள் காசியபரை மணந்தவள். இவளோடு இவள் சகோதரிகள்

புன்னிரெண்டு பேரும் காசியபரை மணந்தவர்கள். அவர்களில் அதிதி என்பாளும் ஒருவள், திதி வயிற்றில் உதித்தவர்கள் தைத்தியர் எனப்படுவர். இவர்கள் அரக்கர்; இந்த வம்சத்தைச் சேர்ந்தவர்களே அசுரர், என்ற காரணத்தால் திதி புத்திரர் என்றழைத்தார்.

சூரபன்மன், சிங்கமுகன், தாரகன் மூவரும் காசியபருக்கு மாயையிடம் தோன்றியவர்கள்.

தைத்தியர் என்பவர்கள் அதே காசியபருக்குத் திதியிடம் உண்டானவர்கள். பிதா ஒருவரானதால், இவர்கள் மாயையின் புத்திரர்களானாலும், உபசார வழக்கில் திதிபுத்திரர் ஆவர் என்று கொள்ளலாம்.

இனி மற்றொரு பொருள் என் சிற்றறிவிற்குத் தோன்றுகின்றது. அது வலிந்து பொருள் கோடலாகுமோ என்ற ஐயப்பாடும் உண்டு. ஆயினும் கூறுகிறேன். ஏற்பதும் தவிர்ப்பதும் அறிஞரிடம் விட்டு விடுகிறேன்.

அநுபூதிபெற்ற மகான்கள் பித்தர்போலும் பேயர்போலும், உலகத்தார், "மதிகெட்ட பித்தன், அதிகமான வருத்தத்தால் பைத்தியம் பிடித்துவிட்டது, மயக்கங்கொண்டு திரிபவன், கதியில்லாதவன், அவமாக அழிந்தவன் என்றெல்லாம் இகழும்படி திரிவார்கள், இதற்குப் பல சான்றுகள் உள. மாணிக்கவாசகர்,

"சகம் பேய் என்று தம்மைச் சிரிப்ப
நாணது ஒழிந்து நாடவர் பழித்துரை
பூணதுவாக",

என்று கூறுவதும் காண்க. சிவஞான சித்தியாரில் 8ம் சூத்திரம் 2ம் அதிகரணம் 32 வது பாடல்

"ஞாலமதின் ஞான நிட்டையுடையோர்க்கு
நன்மையொரு தீமையில்லை நாடுவதொன்றில்லை
சீலமில்லை, தவமில்லை, விரதமோடாச்சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமலமில்லை
கோலமில்லை புலனில்லை கரணமில்லை
குணமில்லை குறியில்லை குலமுமில்லை
பாலருடன் உன்மத்தர் பிசாசர் குண மருவிப்
பாடலினோ டாடலிவை பயின்றிடினும் பயில்வார்"

என்பது அது போல முருகன் அருளால் அநுபூதி பெற்ற அருணகிரியாரை உலகத்தார் மதி கெட்டவன், வியாகூலமடைந்தவன்

*பெண்மையலில் மயங்கியவன், அவன் சுற்றத்தார் யாவரும் கைவிட்டுக்கதி கெட்டவன், அவம் என்றெல்லாம் கூற, அருணகிரியார் நான் இப்படியா ஆகி விட்டேன்? இல்லை நானிருக்கும் நிலையை அறியாது கூறும் கூற்று என்று தன்னைத்தேற்றிக்கொண்டாரா? ஆனால் அந்நிலையில் இருப்பவர் தம்மைத் தேற்றிக் கொள்ள வேண்டிய அவசியமில்லையே. அவர் தேற்றிக்கொள்ளவில்லை. ஞானனுபவம் அடைந்த ஜீவன்முக்தரைப்பார்த்து உலகம் இவ்வாறு கூறும்படி அவர்கள் நடந்து கொள்வார்கள் என்று, ஞாலமதில் ஞானநிட்டை பெற்றோரின் செயலைக் கூறினர் என்பது அமையுமோ என்பது என் சிற்றறிவுக்கு எட்டிய ஓர் கருத்து. கொள்ளிற் கொள்ளுக, தள்ளிற்றள்ளுக.*

### ஐம்பத்தோராவது பாட்டு

**உருவா யருவா யுளதா யிலதாய்**
**மருவாய் மலராய் மணியா யொளியாய்க்**
**கருவாய் உயிராய்க் கதியாய் விதியாய்க்**
**குருவாய் வருவாய் அருள்வாய் குகனே.**

#### பதவுரை

உருவாய்—ஆறுமுகமும் பன்னிருகண்ணும் கொண்ட சகளவடிவாயும், அருவாய்-குணம் குறியற்ற நிருபாதிக சம்வின்மயமான அகளமாயும், உளதாய்—உண்டு என்பாருக்கு உள்பொருளாயும், இலதாய்—இல்லை என்போருக்கு இல்பொருளாயும், மருவாய்—வாசனையாயும், மலராய்—அவ்வாசனையையுடைய மலராகவும், மணியாய்—மாணிக்கக் கல்லாயும், ஒளியாய்-அக்கல்லின் ஒளியாயும், கருவாய்—ஸகல உயிர்களையும் கேவல நிலையில் தன் கர்ப்பத்தில் காப்பவனுயும், உயிராய்—சகல நிலையில் சர்வ ஜீவராசிகளின் ஆன்மாவாகவும், கதியாய்—சுத்த நிலையில் அவ்வுயிர்கள் சென்றடையும் நிலையாகவும், விதியாய்-உயிர்களின் வினைப்பயனுகவும், குகனே—முருகனை நீயே, குருவாய் வருவாய்—குருநாதனுக வந்தவன், அருள்வாய்—என்னையும் ஆட்கொண்டவன்,

*(உன்னையன்றி வேறு எவருமல்ல, என்று கூறி நூலை முடிக்கின்ருர்)*

#### விரிவுரை

*குகனே வருவாய் அருள்வாய் என்றவற்றை, வரவேண்டும், அருளவேண்டும், என்று முன்னிலை வினை முற்ருகத்தான் யாவரும்*

பொருள் கூறுகின்றனர். முந்தின பாடல்களில் முருகன் தனக்கு குருவாக வந்ததையும், அருளினதையும் வெகுவாக வியந்து பாடியிருக்கின்றார். கடைசிப்பாட்டில் அவனை வா, அருள் செய், என்று பிரார்த்திக்க அவசியமில்லையாதலால் நாம் வேறுவிதமாகப் பொருள் கொண்டோம் குருவாய் வந்தவனும், அருளினவனும் குஹனே. இதுவரை என் இருதய குகையிலே வாசம் செய்து என்னை இயக்கி வைத்த பரம்பொருளே, என்பதைக் கூறுகிறார் என்பது அடியேனின் சிற்றறிவிற்கு எட்டிய பொருள். குருவாய் வந்தவன் எத்தகையன்? அவன் உருவாய் இருப்பான், அருவாயிருப்பான், உளதாயும் இருப்பான், இலதாயும் இருப்பான் என்ற முறையில் கூறுவதாகக் கொண்டோம். அகளமாய் மலரில் மணம்போலும், மணியில் ஒளி போலும், யாவற்றிற்கும் ஆதியான கருவாயும் சேதனாசேதனங்களின் உயிராயும் அவற்றிற்கு முடிவான கதியாயும் அவற்றிற்கு அதனதன் வினைக்கேற்ப நடத்திவைக்கும் விதியாயுமிருக்கும் பரம்பொருள் எதுவோ, அதுவேதான், என்கின்றார்.

யாவற்றிற்கும் கருவாய் இருப்பவன், என்றதில் இருக்கும் சாமான்யப் பொருள் பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணனாய் இருந்து தன்னுள் அடங்கிய சக்தியையே துணைக்காரணமாயும் சுத்த மாயையை முதற்காரணமாகவும் கொண்டு அனைத்தையும் தோற்றுவிக்கும் பிரம்ம சைதன்யம் என்பது. "ஸர்வ பூதயோநிம்" என்பது சுருதி வாக்கு. "ஸதேவ ஸோம்யேதமக்ர ஆஸீத் ஏகமேவாத்விதீயம்", முதலில் இரண்டற்றதாய், ஒன்றாய், "ஸத்" என்று குறிக்கப்பட்டதே இருந்தது, என்கிறது சாந்தோக்யம். அந்த "ஸத்" என்று கூறப்பட்டதே, இந்த பிரபஞ்சத்திற்கு நிமித்த காரணமானது ஆதலால் அதை கருவாய் என்றார். விசேஷப் பொருளில் யாவும் ஒடுங்கிய நிலையில் உயிர்கள் அதில் கேவல நிலையில் மறைந்து கிடக்கின்றன. புனர்சிருஷ்டி ஏற்படும்போது அவை சகல நிலைக்கு வருகின்றன. ஆதலால் அது உயிர்களுக்குக் கருவாய் இருந்தது.

சகல நிலைக்கு உயிர்களைச் செல்லவைக்கும்போது அவற்றிற்கு, தனு, கரண, புவன, போகங்களை நல்கி, அவற்றிற்கு உயிராய் அந்த 'ஸத்'தே வந்தது. அகளமாயிருந்த ஒன்று சகளமாய் விரிந்தது. அவ்வாறு விரிந்து உள்ளின்று இயக்குவதால் அது அவற்றிற்கு உயிராயிற்று. பின்பு உயிர்களுக்கு கதியாக இருப்பதும், விதியாக இருப்பதும் அந்த 'ஸத்'' தேயாகும். உயிர்கள் சுத்த நிலையில் அடையும் கடைசி கதியாகவும், சுத்த நிலைக்கு வராத உயிர்களுக்கு அவரவர் வினைக்குத் தகுந்தபடி விதியாயும் இருந்து இயக்குகின்றது.

மலரில் மணமாயும், மணியில் ஒளியாயும் பிரிக்க முடியாத்தர்க் சிருஷ்டிக்கப்பட்ட பிரபஞ்சத்தோடு ஒன்ருயும் உடனுயும் இருக்கிறது. அது உயிர்களின் பக்குவ நிலையறிந்து குருவாக வருகிறது. அருளு கிறது. அது இருதய குகையில் வாஸம் செய்யும் குகனேயாகும், என்பது இப்பாட்டுக்கு நாம் கண்டபொருள்.

## முடிவுரை

இவ்வாறு 51 பாடல்களால் அருணகிரியார் தமது அனுபவத்தை தான்பெற்ற அநுபூதியை நமக்கு எடுத்துக் கூறுகின்ருர். பல பாடல்களுக்கு ஏனைய உரையாசிரியர் கூறிய உரையைத் தழுவாது, பொருள் கொண்டிருப்பதின் காரணம், முருகனுல் ஆட்கொள்ளப் பட்டு ஜீவன்முக்தி நிலையையடைந்த அருணகிரியாரின் உள்ளக் கிடக்கை ஏனைய உரைகளில் கூறப்படுவதுபோல இருக்கமுடியாது என்ற எனது பணிவான அபிப்ராயமேயாகும்.

ஐம்பத்தோறு பாடல்களுக்கு மேற்பட்டனவாய் உலவும் பாடல்கள் அருணகிரியாருடைய வாக்கு அல்ல என்று துணிந்துகூறலாம். பல பெரியார்களும் இவ்வாறே கூறியுமிருக்கின்றனர். கந்தரலங் காரத்தையும், கந்தரநுபூதியையும் ஒன்றுசேரவைத்து, பொருள் ஆராய்வது மிகச்சிறந்த பயனை அளிக்கும். அநுபூதிப் பாடல்கள் பலவற்றிற்கு அலங்காரத்தில் விளக்கம் கிடைக்கின்றது. பெரும் பான்மையான அறிஞர்கள் அலங்காரம் பாடியபின் அநுபூதி பாடினர் என்று கூறுகிருர்கள். ஆனல் இரண்டையும் ஒப்பு நோக்குங்கால் அநுபூதிபெற்று, அதிலே திளைத்துப் பேரானந்தம் ததும்பி வழிந்த நிலையில் அலங்காரம் பாடியிருக்கலாம் என்று என் சிற்றறிவிற்குத் தோன்றுகின்றது.

அலங்காரத்தில் 100 பாடல்கள் இருப்பதால், இதற்கும் 105 இருக்கும்படி பின் தோன்றிய, "கரவாகிய கல்வியுளார்", எழுதி முடித்து விட்டனர் போலும். மேலும் பிற்காலத்தவர் அநுபூதிப் பாடல்கள் அனைத்திற்கும், யந்திரம் மந்திரம். உரு நைவேத்தியம், பயன், இவைகளையும் சிருஷ்டித்திருக்கின்றனர். தன்னையறிந்த, தன்னந்தனியாய் நின்ற அருணகிரி இவ்வாறு சொப்பனத்திலும் நினைத்திருக்கமாட்டார் என்பது உறுதி. நேயர்கள் இத்தகைய பிரயோகத்தில் ஈடுபடவேண்டாமென்று அடிபணிந்து விண்ணப் பித்துக்கொள்கிறேன். அதிலும் சில பாடல்களுக்குக் கூறி இருப்பவை. மிகக் கீழ்கடையனவாகவும் இருக்கின்றன ஓர் அருள்பெற்ற ஜீவன்முக்தரான மகான் சித்தாந்த சாஸ்திரத்தின்

முடிந்த முடிபைத் தான் அநுபவித்த நிலையிலிருந்து இவ்வாறு நமக்குக் கூறுகின்றார் என்பதை அறிஞர்கள் உணர்வார்கள். சில தலைப்புகளைப் பாருங்கள். 38வது பாட்டுக்கு "பிசாசம் ஒழிக்க" என்று கண்டுள்ளது. அப்பாட்டில் "வேதாளம்," என்ற சொல் வருவதே இதற்குக் காரணமாக இருக்கலாம். 15வது பாட்டுக்கு, "அஷ்டாவதானம் செய்ய," என்பது தலைப்பு. அதில் "எண் குண பஞ்சரனே" என்று வருகிறது. 12ம் பாடலுக்குக் "களவு வெல்ல" என்ற தலைப்பு. அதில் "திருடன்," என்று வருகிறது. 11வது பாட்டுக்கு "தளிகை சேர்க்க," என்ற தலைப்பிற்கும் அப் பாட்டிற்கும் என்ன சம்பந்தம் என்பதே விளங்கவில்லை. 6வது பாட்டுக்கு, "மாதரைத்தழுவ," என்ற தலைப்பைப் பார்த்து அழுவதா, சிரிப்பதா என்று தெரியவில்லை. மாதர் சேர்க்கையை ஆன்ம வளர்ச்சிக்குப் பெரும் தடையாகக் கருதி அறிவுறுத்தும், அருணகிரியார், மாதரைத் தழுவவும், ஓர் மந்திரம், யந்திரம் உரு எல்லாம் கொடுத்தாரென்றால் இதற்கு என் செய்வது ? 30வது பாடலுக்கு "வழக்கு பேச," என்பது தலைப்பு. அப்பாட்டிலிருக்கும் ஆழ்ந்த கருத்திற்கு இந்தத் தலைப்பு நேர் விரோதம். இவ்வாறு பல உதாரணங்கள் சொல்லப்போனால், இந்த விபரீதமான கருத்துக்களே அநுபூதியின் அருமை பெருமையைக் குறைத்துவிட்டது என்னலாம்.

> "ஐயா அருண கிரியப்பா உனைப்போல
> மெய்யாக ஓர் சொல் விளம்பினர் யார்"

என்று தாயுமானர் பாடியிருப்பது இந்த கந்தரநுபூதி நூலுக்கே பொருந்தும் என்று துணிந்து கூறலாம்.

திருப்போரூர் சந்நிதி முறையில் சிதம்பர சுவாமிகள்,

> "சும்மா இருவென நீ சொல்லப்பொருளொன்றும்
> அம்மா அறிந்தில மென்று அன்று உரைத்த-எம்மான்
> அருணகிரிநாதன் அநுபவ நாயேற்குக்
> கருணை பொழி போரூரா காட்டு",

என்று கூறியது அநுபூதியைப் பற்றியே யென்பது வெளிப்படை.

திருத்தணிகை யுலாவில்,

> "அநுபூதி ஐம்பது மே ஆருயிர் பேரின்ப
> அநுபூதி நல்கு மணி",

என்றதும் காண்க. ஐம்பது என்றது "ஆடும்பரி அணி சேவல்", என்ற காப்புச் செய்யுளை நீக்கிக்கூறியது.

இனி ஒரு சாரார் இந்நூல் அருணகிரியார் கிளிரூபமாக இருந்த போது பாடியது என்பர். அதற்கு ஆதாரமாக திருககொணுமலைத் திருப்புகழ் 7வது அடியில்,

> "நிலைக்கு நான் மறை மகத்தான பூசுரர்
> திருக்கொணுமலை தலத்தாரு கோபுர
> நிலைக்குள் வாயினில் கிளிப்பாடு பூதியில்-வருவோனே"

என்றதைக் காட்டுவர். அவர் திருவண்ணுமலை கோபுரத்திலல்லவா கிளியுருக்கொண்டதாகப் புராணம் கூறுகின்றது! இதில் கண்டவாலாறு திருக்கோணுமலைத்தலபுராணத்தைச் சேர்ந்ததாக இருக்கும்: நிற்க அநுபூதிப் பாடல்களில்,

"கூகா என என் கிளை கூடியழ", என்றும் "வலைபட்ட மாதொடு மக்கள்", என்றும் "சகமாயையில் நின்று தயங்குவது", என்றும், "கூர்விழி மங்கையர் கொங்கையில் சேர்வேன்", என்றும் இம்மா திரி கரசரணு தி மணம் முதலியவற்றை வைத்துப்பாடியிருப்பது, "கிளி", உருவத்திற்கு எப்படிப்பொருந்தும். அவர் கிளியுருவானதே ஆராய்ச்சிக்கு எட்டாததொன்று. முருகனை சபைக்கு வரவழைத்தவர், பாரிஜாத மலர் தேடி கிளியுருப்பெற்றுச் செல்லவேண்டுமா? முருகனைக் கேட்டால் அவன் உடனே கொண்டுவந்து கொடுத்துவிட மாட்டானு? கிளிக்கு "விதி காணும் உடம்பை விடாவினையேன்" என்று சொல்லவருமா? பொருந்துமா? திருப்புகழ் 650ல்,

> "துகளில் சாயுச்சியக்
> கதியை யீறற்ற சொற்
> சுக சொரூபத்தையுற்—றடைவேனே",

என்பதில் வரும் "சுக சொரூபம்", கிளியையா குறிக்கின்றது? அப்படியாயின், அவர் வேண்டியா அவ்வுருவைப் பெற்ருர். பெற்றது மெய்யானுல் சம்பந்தாண்டான் சூழ்ச்சியால், தான் விட்டுச்சென்ற உடலைச் சுட்டு விட்டதாலல்லவா கிளி ரூபத்திலேயேயிருந்தார் என்பது புராணம்! நிற்க, திருவேளைக்காரன் திருவகுப்பில்,

> ஏழையின் இரட்டை வினையாயதொருடற் சிறையி
> ராமல் விடுவித்தருள்—நியாயக்காரன்",

என்பதைத்தான் மானிடவுருவம் நீக்கப்பெற்று கிளியுருவம் அடைந்ததற்கு ஆதாரமாகக் காட்டுவார்கள். கிளியுரு உடல் சிறையன்ருே? அதிலும் மனித உருவைக் காட்டிலும் இழிந்த உருவன்ருே? இந்த அடிக்கு இப்படியா பொருள் கொள்வது. கந்தரலங்காரப்பாடலில்,

"இறந்தே விட்டது இவ்வுடம்பே", என்று கூறிய அநுபவத்தை யல்லவா இந்த அடி காட்டுகிறது! அருணகிரியார் கிளியுருவம் கொண்டார் என்பதே பொருத்தமற்ற கூற்று என்று தள்ளி விடலாம்.

கந்தரநுபூதி ஓர் அரிய பாராயண நூல். ஆழ்ந்த கருத்துக் கொண்டதோடல்லாமல், சில மந்த்ராக்ஷரங்களும் அவற்றில் விரவி வருகின்றன. பாராயணத்திற்கென்றே சிறு நூலாக அமைத்திருப்பதாகக்கூறலாம். 51 செய்யுட்களையும் பாடம் பண்ணி நித்தியம் பாராயணம் பண்ண இயலாதவர்கள் 1, 10, 13, 15, 21, 33, 41, 46, 51, இந்த ஒன்பது பாடல்களையாவது ஓதிவருவது நன்மை பயக்கும், அதிலும் 10வது பாடல், "கார்மாமிசை", என்றதை ஒவ்வொரு நாளும், இரவில் தூங்குமுன், சொல்லிக்கொண்டு வரவேண்டும். அந்தப்பாட்டின் விரிவுரையிலேயே இதைச் சொன்னோம்.

அடியேனுடைய உரையை அறிஞர்கள் எவ்வாறு கருதுவார்களோ அறியேன். என் சிற்றறிவிற்கு எட்டியதை, முருகன் அருளே துணை கொண்டு இதனை எழுதி முடித்தேன். அவன் சங்கல்பம் எதுவோ அது முடியட்டும்.

"அடல் புனைந்த வேலும் மயிலும் என்றும் வாழி".

# PUBLICATION OF THE AKHILA BHARATA SANKARA SEVA SAMITI

गुरुवंशकाव्यम्

आचार्यचरितम्

याजुषसूर्यनमस्कारकल्पः

अनन्तपद्मनाभस्वामिस्तोत्रम्

श्री गणेशपंचरत्नम् with Tamil Translation

श्रीगुरुपादुकास्तोत्रम् ,,

श्रीगुरुपरंपरास्तोत्रम् ,,

श्री जगद्गुरुचरितामृतम् ,, 4 பாகங்கள்

श्रीमीनाक्षीस्तोत्रमाला ,,

श्रीरामनक्षत्रमालास्तुतिः ,,

सौन्दर्यलहरी ,,

शिवानन्दलहरी ,,

संस्कृतपाठमाला ,,

उपनयनप्रयोगः ,,

सूर्यनमस्कारप्रश्नः with English Translation

FLOWERS OF DEVOTION

HOMAGE TO SANKARA

SAGE OF SRINGERI

SRINGERI PARAMPARA

SRINGERI KUMBHABHISHEKA SOUVENIR

SUPPLEMENT TO do.

SANKARA JAYANTI SOUVENIR

KALADY

MINOR UPANISHADS Vol. I.

## Minor Prakaranas Series

1. ATMABODHA with English Translation
2. BRAHMANUCHINTANAM ,,
3. FOUR PENTADS ,,
4. DASASLOKI etc. ,,
5. NIRVANAMANJARI ,,

ஸ்ரீ குருகிருபா விலாஸம் — 2 பாகங்கள்

ஸ்ரீ குருராஜ ஸ்மரணம்

ஸ்ரீ ஸச்சிதானந்தபாரதீ விஜயம் — 2 பாகங்கள்

விஷ்ணுகவி கண்ட ஜகத்குருக்கள்

உணர்வரிய மெய்ஞ்ஞானம் ஓங்குபெரும் பீடம்

ஆதிசங்கர பகவான்

ஆசார்யேந்திர வைபவம்

ஞான ப்ரஸூனங்கள்

ஸ்ரீ வித்யா அல்லது சாக்த தர்சனம்

அபிநவவித்யா தீர்த்த விஜயம்

குருபக்தி விலாஸம்

குருபக்தி ஸாதனம்

ஸ்ரீ லலிதா ஸஹஸ்ரநாம ஸ்தோத்ர அகவல்

கந்தரனுபூதி